ஸ்ரீ

# ரமண ஞான போதம்

இரண்டாம் பாகம்

## அகப்பொருள் விளக்கம்

ஸ்ரீ முருகனர்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ
# ரமண ஞான போதம்

## இரண்டாம் பாகம்
## அகப்பொருள் விளக்கம்

இயற்றியவர்

ஸ்ரீ முருகனார்

பதிப்பாளர்

ஸ்ரீ ரமண கேந்திரம்—புது தில்லி

1981

கிடைக்கு மிடம்:—

ஸ்ரீ ரமணாசிரமம் புத்தக சாலை,
திருவண்ணாமலை—606 603

Published with the Financial Assistance from the Government of India, Ministry of Education & Social Welfare (Department of Education.)

This book has been published on the paper supplied by the Government of India at concessional rate.

விலை: ரூ 10/-
Rs 10 00
Price Rs. [illegible]

அச்சிட்டோர்:

வெல்டன் பிரஸ்,
68, மன்னப்ப முதலித் தெரு, சென்னை-600 021.

# பதிப்புரை

"அகப்பொருள் விளக்கம்" என்னும் இந் நூல் 'ஸ்ரீ ரமண ஞான போதம்" என்னும் பதினைன்காயிரம் பாடல்கள் கொண்ட பெரு நூலின் இரண்டாவது பாகமாக வெளிவருகிறது. "மெய்த்தவ விளக்கம்" என்ற முதற்பாகம் 1978—ல் வெளிவந்தது.

ஸ்ரீ முருகனருடன் 1946 முதல் தொடர்பு கொண்டு, அவரது பாடல்களின் அருட் சுவையில் ஊறி, அவை யாவற்றையும் பிரதி செய்து பத்திரப் படுத்திவைத்தவர் ரமண பக்தர் ஸ்ரீ சாது ஓம் அவர்கள்.

உள்ளன்போடு ஸ்ரீ முருகனரது பாடல்களை அச்சிடும் திருப்பணியில் தம்மை ஈடு படுத்திக்கொண்டு, அதே நோக்கமுடைய தில்லி ரமண கேந்திரத்திற்கு ஓர் இலக்கிய உதவிக்கரமாக இருந்துவரும் ஸ்ரீ சாது ஓம் அவர்களுக்கு கேந்திரம் மட்டுமின்றி தமிழ்ப் புலவர்களும் ரமண பக்தர்களும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளார்கள்.

1027 பாடல்களைக் கொண்ட இந் நூலின் அத்தியாயங்கள் ஒவ்வொன்றிலும் முதலில் கொச்சகக் கலிப்பாவும், அடுத்து வெண்பாவும், பிறகு குறள் வெண்பாவுமாக ஒரே கருத்தை விளக்கும் பலவகைச் செய்யுள்களை முறைப் படுத்துவதோடு, குறளைத் தவிர ஏனைய பாடல்கள் ஒவ்வொன்றின் அடியிலும் அதன் உட் பொருளைச் சுருக்கமாகக் கொடுத்து அதன் சுவையை வாசகர்கள் நன்கு உணர்ந்து அனுபவிக்க பதிப் பாசிரியர் பேருதவி புரிந்துள்ளார்கள்.

ஸ்ரீ முருகனரது குரு பக்தியும் அதனால் அவர் ஸ்ரீ ரமண பகவானிடம் பெற்ற ஞானப் பேறுமே இங்கு தலைவியின் பதி பக்தியும் இன்பப் பேறுமாகச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. இந்

நூலை ஓதுவோரும் இதைப் போன்ற ஏகாக்கிர குரு பக்தியைத் தம்முள் வளர்த்துக் கொண்டு பிறவிப் பயன் எய்துவார்களாக.

இத்தகைய உயர்ந்த நூல்களை வெளியிடுவதில் ரமண கேந்திரம் பெருமித மடைகிறது; இப் பெருமுயற்சியில் எங்களை ஊக்குவித்து உதவிபுரியும் பதிப்பாசிரியர் தவத்திரு சாது ஓம் அவர்களுக்கு மனமார்ந்த நன்றி செலுத்துகிறது.

ரமண கேந்திரம்
புதுதில்லி-3
8—6—81

கி. சுவாமிநாதன்
துணைத்தலைவர்.

# முன்னுரை

'அகப் பொருள்' என்ற சொல் பரபக்தி மார்க்கத்தில் இறைவனோடு ஜீவன் கொள்ளும் மதுர பாவத்தைக் குறிப்ப தாகும். மேலும் தலைவன்-தலைவி என்ற வேற்றுமையோடு கூடிய இரு தூலப் புறப்பொருள்களின் உறவைக் குறிக்காமல், உள்ளே அகத்தில்—இதயத்தில்—ஆன்ம நாதனுடன் ஜீவ னாகிய பெண் அனன்னிய அன்பால் ஒன்றி, தன் தனி யிருப்பை யிழந்து, தலைவனே தானாய், ஏக பரம்பொருளாகி நிற்கும் கைவல்ய நிலையாகிய அதி சூக்ஷமா நுபவப் பொருளை யே விளக்குவதால், 'அகப் பொருள்' என்று இதுவே இந் நூலிற் குறிப்பிடப் படுகின்றது. இது பற்றி ஸ்ரீ முருகனார் இந் நூலின், ஆருவது பாடலாகிய சமர்ப்பண வெண் பாவில்,

"அகமாம் பொருளே யநுபூதி யாக
விகமே பரங்கண்ட விந்நூல்—அகமகமா
வேதத் தலையில் விளங்குங் குருவருட்செம்
பாதத்தி லேயர்ப் பணம்."

என்று விளக்குகின்றார். 'அகப்பொருள்' என்ற சொற்றொ டரை, பொதுவாக, நாயகன் நாயகி யிடையே தோன்றும் ஐக்கிய உறவுக்கே பிரயோகிப்பது உலக வழக்கு எனினும்,அம் மதுர பாவனையைப் பரமார்த்தத்தில் எவ்வளவு உயர்வாகவும், அழகாகவும், சரியாகவும் பொருத்திக் கூற முடியு மென்பதை இந் நூல் நன்கு விளக்குகின்றது உதாரணமாகப் பாடல் கள் 36 ஐயும், 8 ஐயும் இங்கு நோக்கலாம்.

"கருத்தொருமித் தண்ணலைநான் காதலித்தே னங்கே
பொருத்தமாத் தானுமன்பு பூண்டான்— திருத்தமா
வொத்த வுளப்புணர்ச்சி யோகமா மெய்ப்புணர்ச்சித்
தத்துவஞா னானுபவந் தான்.

"கூடித் திளைக்குங் குலாச்சே ரனுபவத்தைப்
பாடிப் பரவிமனம் பாராட்டல்—பாடலுறக்
கேட்டல் படித்தல் கிளர்ச்சியுற வுள்ளத்துக்
கீட்டமுறு மின்ப மிவை.

என்று கூறுகின்றார் ஸ்ரீ முருகனார்!

அதாவது, தத்துவ ஞானனுபவமே தான் பெற்ற தலைவனது போகானுபவமாக ஸ்ரீ முருகனார் விவரிக்கின்றார். அவர் ஸ்ரீ ரமண பகவானிடம் தாம் கொண்ட குரு பக்தியையே பதிபக்தியாக இந் நூலில் வருணிக்கிறார்.

இறைவனைப் பக்தி செய்யும் பாவனைகளுள் இம் மதுர பாவமானது மிக வுயர்ந்ததும் பரிசுத்தமானதுமான இறையன்புடையவர்களால் மட்டுமே கைக்கொள்ளத் தக்கதாகும்; அன்றி, உலக போகங்களிலும், பொருள் நாடு சுற்றமொடு வருணாதி பற்றியும் உளம் மருள் நாடும் நிலையிலிருப்போர் இம் மதுரபாவ பக்தியால் இறைவனை அணுக விரும்புவார்களாயின், அது உள்ளொன்று வைத்துப் புறமொன்று பாவிக்கும் கற்பில்லாக் கடை மகளின் கபட நாடக பதிபக்தியாகவே முடியும் அதிதூய இறையன்பு வாய்த்திருந்த மணிவாசகரும், ஆண்டாளும், பகவான் ஸ்ரீ ரமணரும் இவ் வுத்த மோத்தம மதுர பாவத்திற் றிளைத்து, இறைவனைக் காதலித்து ஐக்கிய முற்றனர். ஏனையோர் தத்தம் உள்ளம் போதிய தூய்மை பெறும் வரையில் இறைவனை தந்தை-மகன், தாய் சேய், ஆண்டான்-அடிமை முதலிய உறவு வகைகளி லொன்றால் அணுகுவதே தக்கதாம்.

இந் நூலில் அமைந்திருக்கும் ஆண்டவன் அழகு, நற்றாய், செவிலி, தோழி, தலைவனொடு கூறல்' முதலிய அங்கங்களை யெல்லாம் நன்கு கவனித்தால், ஒரு ஜீவன் எவ்வாறு தன் தாய், தந்தை உறவினர், ஊர், உடைமையாகிய உலகப் பற்றுக்கள் அனைத்தையுந் துறந்து, இறைவன் ஒருவனை யடைவதையே குறிக்கோளாகக் கொண்டு விடுகிறானென்பதை. முருகனாராகிய ஒரு பரிசுத்த கற்பிளம் பெண் தன் தாய், செவிலித்தாய், வீடு, உறவு, உலகோர் செய்யும் ஏளனம்

ஆகிய எதையும் பொருட்படுத்தாமல், 'ரமணன்' என்ற ஆத்ம நாத னொருவனையே இச்சித்து, அருட்காதலா லுந்தப்பட்டு, வீடு நீங்கி, காவல் கடந்து, வெட்கமும் விட்டு, தலைவனாகிய ஆத்ம ரமணனையே, உண்முகத்தில் தனதுள்ளே தேடிச் சென்றடைவ தாகவும், அப் பெண்ணின் யோராவலாகிய ஸ்வாத்ம பக்தியைப் பரமான்மாவாகிய ரமணன் மெச்சி, அவளுக் கிரங்கி, அருள் கூர்ந்து, தன் ஆன்ம சாட்சாற்காரப் பரவெளி வீட்டில், அவளைத் தானாக்கிப் பேரின்ப மளித் தருளுவதாகவும் அமைந்திருப்பதைக் கொண்டு மிக விளக்க மாகக் கண்டு கொள்ளலாம்.

ஓர் சற்குருவை யடைவது அவசியமா வென்றும், அவ ரருளால் ஆன்ம சாட்சாற்காரம் பெறுவதும் இயலுமா வென்றும் சந்தேகிக்கும் தற்காலத்தவர்க்கு, நம் பாரத நாட்டு ஞான மரபாகிய குரு — சிஷ்யத் தத்துவத்தை மெய்யான தென்றும், மிகப் பயனுள்ள தென்றும் எடுத்துக் காட்டி நிரு பிப்பவராக ஸ்ரீ முருகனார் இந் நூலிற் காட்சி யளிக்கின்றார். நமது சாமானிய, அற்ப, புறமுகப் புத்திக்கு எட்டாவிடினும், உலக மகா குருவாகிய பகவான் ஸ்ரீ ரமணரின் குருத்துவ அருட்சக்தி, 'துன்பகற்றி மோனத் துரீயமாய் எத்தனையோ அன்பர் நதி யுண்ட அருட் கட'லாக உள்ளது என்ற பேருண் மையைப் பறைசாற்றும் வண்ணம், "ஆண்டவனாகிய ரமண பிரான் பிரம்மசாட்சாற்காரப் பேற்றைக் கொடுத்தான் ; நான் கொண்டேன்" என்று மார்தட்டிச் சொல்லிக் காட்டி, இவ் வுலகைக் கூவியழைத்து ஆற்றுப்படுத்துங் கவிக் குயிலாக இந் நூலில் மிளிர்கின்றார் ஸ்ரீ முருகனார்!

சற்குரு தன் சீடனுக்குப் பிரம்ம சாட்சாற் காரத்தைக் கையிற் கனிபோல் எடுத்துக் கொடுக்க முடியும் ; சீடனும் அதை அறிவோடு பெற்றுக் கொள்ள முடியும் என்பதை நிரு பிக்க ஸ்ரீ முருகனாரது ஸ்ரீ ரமண ஞான போதத்தின் அடுத்த பாகமான 'அநுபவ விளக்கம்' என்ற பகுதி நன்கு ஊர்ஜிதப் படுத்து கின்றது. எனினும் தமது அனுபவத்தை இவ் வகைப் பொருள் விளக்கத்திலும் ஸ்ரீ முருகனார் செவ்வனே தெரிவிக் கின்றார் :- உதாரணமாக,

"கல்வி யளித்தான் கன மளித்தான் மெய்ஞ்ஞானச்
செல்வ மளித்தான் சிறப்பளித்தான்—வெல்வதொரு
மோன மளித்தான் முழுமுதலாந் தன்சொருப
வானமா வென்னைமணந் தான்.—பாடல் 979

"காண்டலுமே காந்தமாத் தான்கவர்ந்தா னோர்சிறிது
பூண்டவன்பே வன்றளையாப் பூட்டினான்—தீண்டவருள்
வேண்டவென்னை வாரி விழுங்கினான் இவ் விதங்காண்
ஆண்டவன்செய் யாட்சித் திறன்!"—பாடல் 980

தான் அருட் காத லுற்று, ஈடுபட்டு நிற்கும் தன் தலைவனின் பேரழகைத் தலைவியாகிய முருகனார் வருணிக்கின்றார்:-

"-காண்டலுற்ற
ஆடவரும் பெண்மை யவாவ வசீகரிக்கும்
பீடழகு சான்றபெம் மான்."

"தேகத் தகம்புத்தி தீர்தலா லாண்டவனே
டேகத் தொருமை யிசையளவும்—யோகத்தே
மூண்ட முனிகளையும் மோகிக்கச் செய்யுமெனை
யாண்ட பிரான்கட் டழகு"

பகவான் ஸ்ரீ ரமணரது கட்டழகு எத்தகையது என்பதை இருவிதமாக நமக்கு உணர்த்துகின்றார் ஸ்ரீ முருகனார். மேற் கண்ட இரு பாக்களிலும் ஸ்ரீ ரமணத் திருமேனி யழகையே முதலிற் சித்தரிக்கின்றார். ஸ்ரீ பகவானது தூலத் திருமேனி சாமுத்திரிகா லக்ஷணங்கள் யாவும் ஒருங்கு திரண்டு பூரணமா யமையப் பெற்று, பதினாறுண்டில் மன்மதனைக் காய்ந்த பால மஹேசுவரனும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் யௌவன தெய்வீக சௌந்தரியமும், ஞான தேஜசும் பொருந்தி சுவர்ணவிக்கிர கம் போல் விளங்கியது உண்மையே. அகப் பொருட்டலை வியின் கூற்றாக அமைந்த இப்பாடல்கள் பகவான் ரமணரின் புறவழகை இவ் வாறு சித்தரித்ததில் உயர்வு நவிர்ச்சி

யொன்றுமே யில்லை தான் ! ஆயினும் மற்றெருருவித ஆன்மீகப் பேரழகையே ஸ்ரீ பகவானிடம் காண்கிருர் ஸ்ரீ முருகனுர்.

கண்ணுக் கினிய ஸ்ரீ ரமண திருமேனியின் தூலப் பேரழகை மட்டும் இவ் வகப் பொருட்டுறைக்கு இலக்காகக் குறிக்காமல் ஸ்ரீ பகவானது ஞான வழகைக் கொண்டே இந் நூல் தோன்றி யுள்ளது.

"கண்ணா ரமுதமாக் கண்ட பிரானையிப்போ
துண்ணா ரமுதா வுளத்தே திளைக்கலுற்றேன் ;
பெண்ணா ணலாத பிரம்ம சொரூபவருள்
விண்ணகை வுள்ளத்தில் வேட்கை நிரம்பியதே-பாடல் 976

என்ற பாடலால் ஸ்ரீ முருகனுர் இதைத் தெரிவிக்கின்ருர். அதாவது இவ் வகப் பொருட்டுறை பெண்-ஆண் என்ற பேதங் கலவாத பேரின்ப ஞானத்துறை என்பதாம். மேலும் நூலின் முடிவில் நற்ருய் கூற்ருகக் கூறும்போது, அந் நற்ருய் தன் அருமை மகளாகிய முருகனுர் என்னும் பெண் தன் தலைவனுன ரமணனிடம் பெற்ற போகத்தை யாதென விவரிக்கு மிடத்தில்,

"காணக்கா ணத்தெவிட்டாக் கண்ணுளன் கட்டழகில்
வேணவாக் கொண்டாள் ; வெளிவரத்தான் கூசுற்ருள் ;
பேணித்தன் னுள்ளே பெருமிதத்தோ டாழ்ந்தாழ்ந்து
மாணக் களித்து மதர்க்கின்ருளென் மகளே"-பாடல்1004

என்று கூறுகின்ருள் ! அதாவது ஸ்ரீ ரமணனுகிய ஆன்மா வில் ஐக்கியத்தையே பேணிப் பேணித் தன்னுள்ளே ஆழ்ந் தாழ்ந்து நிட்டையில் ஊறிச் சொக்கி நிற்பதால், கண் திறந்து பகிர் முகப்படவே விரும்பாதவளாய்—பகிர் முகப்படக் கூசுகின்றவளாய்—என் மகள் ஆன்ம ரமணம் துய்க்கின்ருள் என்று நற்ருய் பெருமிதங் கொள்கின்ருள். இவ்வாறு ஆன்ம ஞான வழகையும், காதலையும் சித்தரிப்பதே இந் நுலின் அந்த ரங்க மாகும்.

"கட்டழகா லென்னைக் கவர்ந்தபிரான் சிற்பதந்து
நிட்டையிலே யூன்றி நிலைக்கலுற்றே நெஞ்சத்து
மட்டில்பே ரின்ப மகிழ்ச்சியெழ வாக்கியலாற்
பெட்டவா றெல்லாம் பிதற்றிவாழ் கின்றேனே"

இப் பாடலில் "அவனது சிற்பத நிட்டையிலே யூன்றி நிலைக் கலுற்றேன், ... மட்டில் பேரின்ப மகிழ்ச்சி யெழுந்தது" என்று குறிப்பிடுவது ஸ்ரீ பகவானது ஆன்ம ஞானப் பேரழகையே யாகும். தூலத் திருவெழிலை விடக் கோடிபங்கு மிருந்து எல்லோரையுங் கவர்ந்திழுத்தது ஸ்ரீ பகவானிட மிருந்த ஞானத் திருவழகே. அஃதெவ்வாறு?

நாம் ஒவ்வொருவரும் நம்மீதே மிக மிக அதிகப் பிரியம் வைக்கிறோமன்றோ? சுக மில்லாத விடத்திற் பிரியம் உண்டாகாது என்னும் பொது விதிப்படி, நம்மேல் நாம் ஒவ்வொருவருங் கொள்ளும் இணையற்ற பிரியத்திற்குக் காரணம் 'நாம்' என்னும் ஆன்மா சுகவடிவானது என்பதைத் தவிர வேறு காரண மொன்று மில்லை. இவ் வான்ம சொரூபத்தையே ஸ்ரீ முருகனார், தன் குருநாதனை, ஆன்மநாதனை, ரமண நாதனைக் நன்கறிந்து காண்கின்றாராதலால் "கட்டழகால் ... பேரின்ப மகிழ்ச்சி யெழ" என்று பாடுகின்றார். இந்த ஆன்ம அழகையும் சுகத்தையும் திருவருளால் மனம் ஒரு முறை கண்டு கொள்ளுமானால், பிறகு அதைவிட்டு நீங்காமல், அவ் வான்மாவிலேயே ஊறியூறித் திளைத்துச் சொக்கி நிற்கும். இந் நிலையையே ஸ்ரீ முருகனார், "சிற்பதத்து நிட்டையிலே யூன்றி நிலைக்கலுற்ற நெஞ்சம்" என்கிறார்.

இவ்வாறு ஆன்ம சொரூப நிஷ்டைச் சுகக்கடலில் நீந்தி மகிழும் முருகனாரது மன நிலையை அவரது வாய் அருட்கவிகளாக வடிக்க முயல்கின்ற போது, குருவருளின் எல்லையற்ற மகிமை, அழகு, சுகம், இவற்றை உள்ளபடி வருணிக்க முடியாமல் பித்தரைப்போல், பேயரைப்போல், பாலரைப்போல் ஆனால் நல்ல தீந்தமிழ்ப் பாவினங்களில்—என்னென்னவோ உளறிக் கொண்டே போகின்றது; இதையே அவர் "பெட்டவா றெல்லாம் பிதற்றி வாழ் கின்றேனே" என்கிறார்.

இந்த அநுபவ நிலையில் பேச்சு மூச்சற்றுப் பேரின்ப மோனமே மகான்களின் அநுபவமா யிருக்க, அதைப் பற்றிப் பேசுவது யாராலும் இயலா தெனினும், அந் நிலையில் தனக்கு வேறல்லாத சொந்த சொரூபனாகிய ஸ்ரீ ரமணன் அவ்வநுபவத்தைப் பேச வாயும் தந்தான் என்கிறார் ஸ்ரீ முருகனார் :—

"நேசபா சந்தன் னிறைபதத்தே யாகமனக்
கோசபா வங்குலைத்துக் கூடினேன் — பேசவாய்
தந்தா னருட்புகழ்க்குத் தன்னெடுநான் வேறற்ற
சொந்த சொரூப குரு."

கண்டவர் விண்டிலர் ; விண்டவர் கண்டிலர் என்பது பொது விதி யாயினும், எல்லாம வல்ல இறைவன் விரும்பினால் தன் மெய்யடியார்கள் மூலம் ஓரளவு அவ் வான்மாநுபவத்தைப் பேச்சிலும் உலகிற்குத் தந்துதவுவ துண்டு என்பதும் உண்மையே. நமக்கு இது காறும் கிடைத்துள்ள ஞான சாத்திரங்களும் பக்தித் தோத்திரங்களும் அத்தகைய மோனானுபூதி யுற்ற மகான்களின் மூலம் இறைவன் தனது கருணையால் நமக்களித் துள்ள அருட் செல்வங்களே யன்றோ? அவ்வாறே, இன்று இந்த ஸ்ரீ ரமண ஞான போதம் என்னும் அருணிதியில், மதுர பாவத்தில் ஸ்ரீ முருகனாரால் நமக்குக் கிட்டி யுள்ளதும் இறையருளின் கொடையே யாகக் கொள்ளப்பட வேண்டும்.

அஷ்ட சித்திகள் அசத்தியமும், அற்பமும, ஆபத்துமானவை அவை யாவற்றையும் விடச் சிறந்ததும் சத்தியமானதும் பயனுள்ளதுமான சித்தி ஆன்ம சொரூப சித்தியே. இவ் வான்ம சொரூப சித்தியைப் பூரணமாகப் பெற்றவர் ஸ்ரீ முருகனார்.

"புத்தியற்ற மூடனேன் பூரணமாத் தன்சொரூப
சித்தியுற்று வாழுந் திறமருளித் — புத்தியத்துக்
கப்பாலா நின்ற வருட்பரமன் றன்புகழென்
சொற்பால தானான் சுடர்ந்து" — பாடல் 4

இப்பாடலில், அவ் விறைவன் வாக்கு மனத்திற்கு அப்பாலானவ னாயினும் தன் புகழைப் பாட்டுவிக்க 'என் சொற்பால தானான் சுடர்ந்து' என்று இவ் விதி விலக்கை இயம்புகின்றார் ; ஆகவே 'கண்டவர் ஒருவாறு விள்ளவுங் கூடும் என்பது புலப்படுகிறது'.

இனி ஸ்ரீ முருகனாரின் ஞானானுபூதியில் விளைந்த பாடல்களைத் தொகுத்து வெளியிடுவதிலுள்ள சிரமங்களைப் பற்றி அவரே கூறும் ஒரு பாடல்.

"வெற்றிபெற வுள்ளே விளைந்தசொரூபானுபவப்
புற்றினின்று பொங்கும் பொலங்கவிகள் — முற்ற
வொழுங்கு படுந்தவா றோராங்கே நோக்கி
யொழுங்குபட்ட திந்நூ லுரு." — பாடல் 3

எனவே, ஓராங்கே நோக்கித் தலையங்கங்க ளிட்டு, வரிசைப் படுத்தித் தொடுத்து, ஒழுங்கு படுத்தி, இந்நூல் உருவாக்கப் பட்டுள்ளது.

— ஸ்ரீ சாது ஓம்

## உள்ளுறை

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசல ரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## இரண்டாம் பாகம்

# அகப்பொருள் விளக்கம்



## பாயிரம்

### தோற்றுவாய்

**(கொச்சகக் கலிப்பா)**

1. கட்டழகா லென்னைக் கவர்ந்தபிரான் சிற்பதத்து
நிட்டையிலே யூன்றி நிலைக்கலுற்றே னெஞ்சத்து
மட்டில்பே ரின்ப மகிழ்ச்சியெழ வாக்கியலாற்
பெட்டவா றெல்லாம் பிதற்றிவாழ் கின்றேனே.

என்னைக் கவர்ந்த ஆண்டவனடியில் நிட்டையுற்றுப் பேரின்பமெழுவதால் வாயில்வந்தவா றெல்லாம் அவனைப் பாடி வாழ்கின்றே னெனல்.

2. மாலையா மத்துந்தன் வண்புகழ்ச் சீரல்லதுமற்
றேலயா தொன்று மிசையாதென் வாக்கினுள்ளான்
காலையோ மாலை கடும்பகலோ சுத்தவருள்
வாலறிவா வென்னை மருவலுற்று நீங்கானே.

நள்ளிரவிலுங் கூட அவன் புகழையே பாடுமாறு என் வாக்கிலுள்ள ஆண்டவன், காலை மாலை நண்பகல் எப்போதும் ஞான ஸ்வரூபனாக என்னிடம் நீங்காது மருவியுள்ளா னெனல்.

(வெண்பா)

3. நேசபா சந்தன் னிறைபதத்தே யாகமனக்
கோசபா வங்குலைத்துக் கூடினன்-பேசவாய்
தந்தா னருட்புகழ்க்குத் தன்னெடுநான் வேறற்ற
சொந்த சொரூப குரு.

எனக்கு வேருகாத சொரூபகுரு என் மனக்கோச பாவ மறுத்துக் கூடி, அவனருட் புகழ்பாடும் கவித்துவமும் எனக்குத் தந்தா னெனல்.

4. புத்தியற்ற மூடனேன் பூரணமாந் தன்சொருப
சித்தியுற்று வாழுந் திறமருளித்—துத்தியத்துக்
கப்பாலா நின்ற வருட்பரமன் றன்புகழென்
சொற்பால தாஞன் சுடர்ந்து.

மூடனாகிய யான் ஆன்ம சொரூப சித்திபெற்று வாழச் செய்த ஸ்ரீரமண பிரான் தனது அருட் புகழாக என் வாக்கிற் சுடர்ந்தா னெனல்.

## நூற் ரெகுப்பு

(வெண்பா)

5. வெற்றிபெற வுள்ளே விசைத்தசொரு பானுபவப்
புற்றினின்று பொங்கும் பொலங்கவிகள்—முற்ற
வொழுங்கு படுத்தவொ ணாதோராங்கே நோக்கி
யொழுங்குபட்ட திந்நூ லுரு.

சொரூபானுபவத்தினின்றும் ஓர் ஒழுங்குக்குக் கட்டுப்படாமற் பொங்கி வந்த கவிகள் இவை யாதலின் ஏதோ ஓர் வழியில் இந்நூல் வடிவாக்கப்படுகின்றதெனல்.

குறிப்பு:— ஒழுங்கு படுத்தல்—முறைப்பட வருத்தல்; ஒழுங்கு பட்டது—முறைப்படுத்தப்பட்டது; ஓராங்கு—ஏகதேசம்; ஒணது – கூடாமல்.

சமர்ப்பணம்

6. அகமாம் பொருளே யனுபூதி யாக
விகமே பரங்கண்ட விந்நூல்—அகமகமா

வேதத் தலையில் விளங்குங் குருவருட்செம்
பாதத்தி லேயர்ப் பணம்.

பரம்பொருளை அகப்பொருளாய் இங்கேயே சாக்ஷாத்கரித்த உண்மை கூறும் இந்நூல் வேத சிரோரத்தினமான சற்குரு பாதத்திற்கே அர்ப்பண மெனல்.

## நூற் பயன்

(வெண்பா)

7. மோனவருட் கைவல்ய முத்திப்பே ரின்பவொளி
யான சொரூபஞா னுனுபவம்—வானளவக்
காட்டிக் கொடுத்தவருட் கற்பகமே நானிசைக்கும்
பாட்டின் பொருளாம் பயன்.

சொரூப ஞானுனுபவத்தைக் காட்டிக் கொடுத்த அருட்கற்பகமான ஸ்ரீரமண பிரானே இந்நூலின் பய னெனல்

8. கூடித் திளைக்குங் குலாச்சே ரனுபவத்தைப்
பாடிப் பரவிமனம் பாராட்டல்—பாடலுறக்
கேட்டல் படித்தல் கிளர்ச்சியுற வுள்ளத்துக்
கீட்டமுறு மின்ப மிவை.

யான் ஆண்டவனைக் கூடித் திளைத்த இவ்வனுபவங்களைப் பாடிப் பரவிப் பாராட்டல், பாடக் கேட்டல், படித்தல் இவையாவும் அன்பர்க ளுள்ளத்தில் ஆன்மக் கிளர்ச்சியைத் தருமெனல்.

## காப்பு

(வெண்பா)

9. என்னுயிர்க்குக் காப்பாக வெந்தவருட் பாதவொளி
யென்னுளத்தி லென்று மியல்வதோ—என்சொருபக்
கண்மணியா மந்தக் கழலொளியே காப்பாக
வண்மைபெற வாழுமிந் நூல்.

எந்த குருபாத வொளி என் சொருபமாகவே என்னுள்ளத்தி லுள்ளதோ, என் உயிரின் காப்பான அக்கழ லொளியே இந் நூலுக்குங் காப்பா மெனல்.

நூல்

## க. ஆண்டவன் அழகு

(வெண்பா)

10. ஆண்டகையா நின்ரு னருட்பார்வை பட்டவுயிர்
மீண்டதுதான் கண்டறியா மீளிமையால்—
காண்டலுற்ற
வாடவரும் பெண்மை யளாவ வசீகரிக்கும்
பீடழகு சான்றபெம் மான்.

ஸ்ரீரமண பிரானின் பேரழகு ஆடவரும் தாம் பெண்மை பூண்டு அவனை அவாவும்படிச் செய்யு மெனல்.

11. தேகத் தகம்புத்தி தீர்தலா லாண்டவனே
டேகத் தொருமை யிசையளவும்—யோகத்தே
மூண்ட முனிகளையும் மோகிக்கச் செய்யுமெனை
யாண்ட பிரான்கட் டழகு.

தேகாத்ம புத்தி நீங்கி ஏகான்மானுபவம் பெறும் வரையிலும், யோகம் பயிலும் முனிவர்களைக்கூட, என்னை யாண்ட ஸ்ரீரமண பிரானின் கட்டழகு மோகிக்கச் செய்யு மெனல்.

## உ. நற்றாய் நவிலல்

(கொச்சகக் கலிப்பா)

12. உள்ளத்தை நோக்கு முபாயமா வென்னகத்துத்
தெள்ளத் தெளிவாத் திகழ்சொரூபச் சிற்பிரான்
அள்ளிப் பருகிடுமெய் யார்வமெழத் தூண்டுசிவ
வெள்ளப் பிரானழகில் வேட்கையுற்று ளென்மகளே.

தன்னுட்டமாம் விசாரத்தால் என் உள்ளத்து விளங்கும் சிற்பிரானை சிவபிரானது அள்ளிப்பருகத் தூண்டும் பேரழகில் என் மகள் வேட்கையுற்று ளெனல்.

13. கள்ள வகந்தைமனக் கட்டறக்காண் கூர்மைசேர்
தெள்ளியமெய்ஞ் ஞானத் திருவருட்கண்
ணோக்கத்தால்

உள்ளினு ருள்ளத்தைக் கொள்ளைகொள்ளுங்
கள்வனைக்கண்
டுள்ளுணர்வற் றென்மடமான் உன்மத்தை யானளே.

அகந்தை மனத்தை நீக்கி நோக்கும் தெளிந்த ஞான நோக்கால் நாடுவாருள்ளத்தைக் கொள்ளையிடுங் கள்வனை என் மகள் கண்டு உன்மத்தை யானளெனல்.

14. சூதற்ற சுத்தத் துரீய சொரூபன்பாற்
பேதுற் றொழிந்தவென் பேதை பிறகலையின்
மீதுற்ற வாசை வெறுத்தாள் விசுத்தவருட்
காதற் கலானுபவக் காட்சிகூ ராட்சியிலே.

ஆண்டவன்பாற் பித்துற்ற என்பேதை பரிசுத்த அருட்காதலுக் காளாகி, பிறகலைகளின் மேலிருந்த ஆசையையும் வெறுத்தா ளெனல்.

15. பிதிராத முற்ற முழுப் பெற்றியாற் சற்று
மதிரா வடிகளா மம்மான் சொரூபக்
கதிரார் கழலையன்றிக் காசித் தெதையும்
மதியாத வென்மடமான் வாழ்வோர் கிலேனே.

பரிபூரணத் தன்மையனான அம்மான் கழலையன்றி வேறொன்றையும் மதியாத என் பெண்ணின் வாழ்வு என்னாகுமோ, அறியேனே யெனல்.

16 விஞ்ஞையில் வல்ல விசித்திரன்பாற் காமுற்று
வஞ்ச வுரையில் வசப்பட் டறிவிழந்து
பஞ்சையா வென்னைப் பரிதவிக்க விட்டகன்றாள்
என்சிறுமி தன்னைமீட் டிங்களிப்பார் யாவரே.

என் மகள் ஞானவித்தைக் காரனும் ஆண்டவனின் அவ் புரையில் வசப்பட்டு, உலக அறிவு அழிந்து என்னைப் பரிதவிக்க விட்டுப் போயினள் அவளை மீட்டுத்தர வல்லார் யாரோ வெனல்.

17. தாட்கை தொழுது தலைவணங்கித் தற்பரன்பால்
வேட்கைமீ தூர்தலால் வெட்கமறக் கெட்டொழிந்து
பூட்கை யுடைந்து புலம்பியலம் பெண்மகளை
மீட்க விரகறிந்த வித்தகரிங் கில்லையே.

கைகூப்பித் தலைவணங்கி ஆண்டவன்பால் ஆசைமிகுதலால் வெட்கமும் விட்டு மனவுறுதி யுடைந்து புலம்பும் என் மகளை மீட்கும் வழியை அறிந்தோர் யாரும் இங்கில்லையோ வெனல்.

(வெண்பா)

18. புத்திக் கமுதமாப் பொங்கு முபாசனை
பக்திக் கடலிற் படிந்தாங்கு—முத்திக்கு
வித்தாய் முளைத்தவருள் விண்மணியாங்
கண்மணிக்கே
பித்தானாள் பேதையிளம் பெண்.

என் இளம் பெண் பக்திக் கடலின்மூழ்கி முக்திக்கு வித்தாயவதரித்த அருட் சூரியனான ஆண்டவனுக்கே பித்தானாளெனல்,

19. புகலடைந்தா ரெங்கும் புகுதாது ஞானப்
பகலா வொளிரும் பரமன்—வகுளமலர்
மாலையின்மே லேமிக்க மாலாகி யென்மடமான்
மாலையுழக் கின்றாள் மயல்.

தன் புகலடைந்தோர் வேறெங்கும் போக வேண்டாதவாறு ஞான சூரியனாய் விளங்கும் பரமனின் வகுள மாலையின்மேற் காதலாகி என் மகள் மயங்குகின்றாளெனல்.

20. பொற்படாம் போர்த்துப் புலம்புவாள் புத்திமதிச்
சொற்படா ளோரமணா சோதமென்பாள்—இற்படா
தெங்கு முழிதருவா ளெங்குளா யந்தோவென்
றங்கமெலிந் தாவிசோர் வாள்.

என் பெண் அழகுடை யணிந்து கொள்வாள், என் புத்திமதி கேளாள். வீட்டில் இராமல் வெளியில் எங்கும் அலைவாள். "ரமணா உனக்கெ(ன) துதி; அந்தோ நீ எங்குள்ளாய் ?" என்று கூவி உடலிளைத்து உயிர் சோர்வாளெனல்.

21. தட்டுளுப்புப் பட்டுத் தடுமாறித் தன்னறிவு
கெட்டிளைப்புற் ருவி கிறுகிறுத்தாள்—*உட்டளைப்புக்
குட்படாள் சொற்படா ளோரமணா வென்றலற்றிப்
பொற்படாம் போர்த்தாளென் பொன்.

* உட்டளைப்பு-இற் செறிப்பு

என் மகள் அறிவு தடுமாறிக்கெட்டு, இளைப்புற்று, ஆவிமயங்கி, வீட்டுள் அடங்கியிராது, என் சொல்லையும் கேளாது, ஓ, ரமணு என்று கூவி, அழகுடையணிவா ளானு ளெனல்.

22. கூத்தாடி தன் சொருபக் கோல வடிவழகைப்
பார்த்தா ளவற்குமுற்றப் பாசமுற்ரு—ணீத்தா
ளுறவினர்மே லாசை யுடலுணர்வாம் பற்று
மறவொழிந்தாள் பாசமறுத் தாள்.

பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு —குறள்

என் மகள் சொரூப சுந்தரனும் கூத்தாடியைப் பார்த்தாள்; அவன் மேல் முழுக் காதல் கொண்டாள். உடனே தன் உடற்பாசமும் உறவினர் பாசமு மற்ருள், பற்றற்றவ ளானுள்!

23. அழிக்கவுஞ் செய்வான்மற ருக்கவுஞ் செய்வான்
விழிக்கின்ரு னென்மடமான் மேலே--பழிக்கஞ்சி
வாழுங் குடிமரபின் மாழுகுறுமென் சிந்தையிந்த
வேழைவாழ் வென்படுமோ வென்று.

அழிக்கவும் ஆக்கவும் வல்ல ஆண்டவன் என் மகளைக் கண்ணுேக்கு கின்ருன்; அதனுல், பழிக்கஞ்சிவாழும் நற்குடித்தாயாகிய நான் என் ஏழை மகள் என்னுவாளோ என்று அஞ்சுகின்றே னெனல்.

24. சின்னஞ் சிறுமி சிறிதும் மதிதேருள்
வன்னந் தெரிந்த வல்லிதைபோல் -என்னேயப்
பிள்ளை பிராணுெருவன் பின்சென்ருள் வெஞ்சுரத்தே
*தள்ளையாத் தள்ளியெனைத் தான்.

* தள்ளை :- தள்ளத் தக்கவள் என்னுங் குறிப்புப்படத் தள்ளை யென்ருள்.

அறிவு தெரியாத என் சிறுமி என்னை விட்டுவிட்டுப் பாலைவனத்தில் ஓர் பெருமான் பின் சென்ருள் எனல்.

(குறள்)

25. நல்லியல் சான்றமெய்ஞ் ஞான சொரூபவருள்
வல்லியவாய்ப் பட்டாளென் மான்.

26. அருட்காத லுள்ளத் தணைகடந்து பொங்கிப்
பெருக்காய் வெளிப்பட்டாள் பெண்.

## கூ. சிவக் காதல்—தலைவி கூற்று

(வெண்பா)

27. தொல்லையிருள் வாழ்க்கை தொலைந்ததுநா
ணுண்டவனைப்
புல்லநினை ந் தில்லகன்ற போழ்திலே—
சொல்லவொணுப்
புத்துணர்ச்சி யொன் றிதயம் பொங்கிற் றறிகுறியா
வுய்த்துணர யோகவாழ் வுக்கு.

ஆண்டவனைச் சேரவிரும்பி நான் வீட்டை விட்டு வெளியேறிய வுடனேயே, பெறப்போகும் யோகவாழ்வுக்கு அறிகுறியாக ஓர் புத்துணர்ச்சி இதயத்திற் பொங்கிய தெனல்.

(கொச்சகக் கலிப்பா)

28. கடக்கவொண் ணுதசிவக் காதலுற் றேனை
மடக்கியே யிற்செறிக்க வல்லரல்லர் யாரும்;
அடக்கலுற்ற சத்தி யனைத்தையும் மீறி
நடக்கலுற்றேன் சொந்தான்ம நாதன்பால் யானே.

சிவக்காதல் மிகுந்த என்னையாரும் வீட்டில் மடக்கிவைக்க முடியாது. அடக்கு முறைகளை மீறி என் சொந்த ஆன்மநாதன்பால் விரைந்தே னெனல்

(வெண்பா)

29. அடைந்தென்னை யாண்டவரு ளாளனைப்பின் பற்றித்
தொடர்ந்தே நடந்தேன் சுரத்தே—அடர்ந்து
கவிப்புறுபைங் கற்பகப்பூங் காநிழலாக் கண்டேன்.
தவிப்புறுவெம் பாலைத் தழல்.

ஆண்டவனைப் பின்பற்றிப் பாலையில் நடந்தேன். அப்போது அது கற்பகப் பூஞ்சோலை நிழலாக இருந்த தெனல்.

30. நடையறியா வென்னை நடத்தினு னின்பக்
கிடையுணர்வே யுள்ளங் கிளர—அடைய
நெருக்கமா மென்ரு னெடுநகரங் கன்றோ
விருக்கின்ரே மென்றே னியான்.

என்னை மகிழ்வோடு நடத்திச் செல்கையில் ஆண்டவன் "நாம் சேரவேண்டிய இடம் வெகுசமீபமே" என்று தேற்றினன். "அங்கு தானே இருக்கின்றோம்" என்றேன் நான்!

31. மவுனத்தா லென்னை வசீகரித்துத் தன்பாற
கவனத்தை முற்றக் கவர்ந்தான்—பவனத்திற்
கண்ணிமையா மோனவருட் கைவல்ய சாந்தியொளித்
*தண்ணிலவே நானுறையுஞ் சார்பு.

* நிலவு—நிலாமுற்றத்துக்கு ஆகுபெயர்.

மௌனத்தால் என் கவனத்தைத் தன்பால் கவர்ந்தான். கைவல்யமோன சாந்தியொளி வீசும் அவனது நிலாமுற்றமே என் உறையுளாயிற்று.

32. ஆண்டவன் காதலுணர் வல்லும் பகலுமறு
தீண்டலின் மேன்மே லிதயத்தே—மூண்டவழ
லாமறுகுங் காத லடிச்சியே னாருயிரை
வேமளவுங் கொன்று விடும்.

என் உள்ளத்தில் அல்லும் பகலும் நீங்காமலெழும் ஆண்டவன் காதல் நெருப்பானது மேன்மேலும் மூண்டெழுந்து என் ஜீவத்துவத்தை வெந்தழியச் செய்யு மெனல்.

33. ஆண்டானைக் கண்ட வடிநாளே தொட்டுலகில்
வேண்டா விருப்பன்றி வேட்கையில்லை—
மூண்டார்வம்
முற்றமுற்ற வந்த முழுமுதல்வன் மாட்சியே
நத்திநத்தி நைகின்றேன் நான்.

ஆண்டவனைக் கண்ட அந்நாள் தொட்டே உலகச் சுவை யகன்றது. அவன் மாட்சியையே விரும்பி உருகி நைகின்றேன் எனல்.

34. புழுகணிந்த மார்பனருட் புந்தியாற சிந்தை
யிழுதழல்சேர்ந் தாற்போ லிளகித்—தொழுகுலமா
வாண்டவன்பே ரோவா தரற்றலுற்றேன் கேட்டயலா
ரீண்டவலர் தூற்ற வியைந்து.

அயலார் என்னைப் பழிக்க, நல்லவனை நினைந்துருகி, அவன்றிரு நாமமே கூவி அரற்ற லுற்றேன் எனல்.

35. மாலாகப் பெற்று மலர்ப்பதத்தில் வாழ்வெனக்கு
வாலாய மாக வளர்தலுற்றேன்—தோலா
மொழியான மோனம் முதிர்ந்துபழுத் தான்ற
விழியாளன் விஞ்சையிலே நான்.

மோனமொழி முதிர்ந்த விழியாளனான ஆண்டவனின் அருள் விந்தையால் அவன் பதத்தி லன்பு எளிதாக வளர்ந்த தெனல்.

36. கருத்தொருமித் தண்ணலைநான் காதலித்தே னங்கே
பொருத்தமாத் தானுமன்பு பூத்தான்—திருத்தமா
வொத்த வுளப்புணர்ச்சி யோகமா மெய்ப்புணர்ச்சித்
தத்துவஞா னனுபவந் தான்.

நான் ஒருமுகப்பட்டுக் காதலிக்கவே இறைவனும் அவ்வாறே அன்பு மலர்ந்தான்; அன்பால் ஒத்த இவ்வுள்ளப் புணர்ச்சியே தத்துவ ஞானனுபவ மாகிய நிஜயோக மெனல்.

(கொச்சகக் கலிப்பா)

37. வெளியா விளங்கு விசுத்த சொரூப
வொளியா லுளங்கவர்ந்த வொள்ளியோன் பாட்டுத்
தெளிவான மோனவருட் சீர்மைசேர் மெய்யன்
பளிவா லகன்றதுபா ழாசைப் பசாசே.

சொரூபவொளியால் உள்ளங் கவர்ந்த ஆண்டவனிடம் மெய்யன்பு மிகுந்து விளைவதால் பாழான உலக ஆசைகள் அகன்றன வெனல்.

38. காணக் களிசுரக்குங் காதலன்பாட டென்னுணர்வு
மாணக் கலத்தலால் வாழ்வு வசீகரமாய்ப்
பூணப் பிறிதோர் புலவிடயங் காணாது
பேணிக் கிடந்தேன் பிரான்சொருபக் காதலே.

என் ஆண்டவன் காதலிற் கலந்து வாழ்வு வசீகரமாகியதால், புலவிஷயங்க ளறியாத நிலையுற்றே னெனல்.

39. உள்ளப் பதைப்பை யொடுக்கும் பரமசுக
வெள்ளப் பிரான்பால் விழைவுற்ற வேட்கையேற்
குள்ளத்தி லுற்ற வுணர்ச்சிவே கங்களாம்
துள்ளற் பொடிப்புத் துடிப்புவெடிப் போய்ந்தனவே.

ஆண்டவனிடங் கொண்ட வேட்கையால் மனத்திலிருந்த துள்ளல், பொடிப்பு, துடிப்பு, வெடிப்பு ஆகிய உணர்ச்சி வேகங்களெல்லாம் ஓய்ந்தன வெனல்.

40. அழியாத சுத்த வருட்பதத்திற் சற்று
மொழியாத மோனவுணர் வூட்டினான் மாட்டுக்
கழிபே ருவகைசேர் காத லுணர்வாற்
பழிதீர்சற் பத்திப் பயன்படைத் தேனே.

அருட் பதத்தில் மோனவுணர்வூட்டிய ஆண்டவனிடம் கொண்ட இன்பக் காதலாற் சற்பத்திப் பயன் படைத்தேனெனல்

(குறள்)

41. ஆண்டுகொண்டான் யாவன் அவனென்
னுயிர்க்குயிராக்
காண்டலுற்றேன் காதலுற் றேன்.

42. உவந்தென்னை யாண்டவன்பா லுள்ள மொருங்கக்
கவிந்ததுமெய்க் காதல் கனிந்து.

43. ஆண்டான் சொரூபமன்றி யாதைகூர் நேசமெனக்
கீண்டமற் றொன்று மிலை.

44. எனக்கென் னினுந்தா னினியனு முள்ளான்
எனக்கு ளிலகு மிறை.

45. அமுதமா நின்றா னடியே னுயிருக்
கிமையவரின் மிக்க விறை.

## ௬. தலைவி தோழிக் குரைத்தல்

(வெண்பா)

46. அத்தகைய கூட லழகனைக்கண் டோர்பேதை
இத்தரையின் மீள வியலுமோ—முத்தரைய
னைவருட் செல்வ னகலமுறச் சேரிலன்றி
மானினிக்கோர் வாழ்வில்லை மற்று.

அக்கூடலழகனைக் கண்டபின் ஓர் பேதை மீளமுடியுமோ? அவனுடன் ஐக்கியப் பட்டாலன்றி எனக்கு வாழ்வில்லை எனல்.

47. அபராத மொன்றுநா னாற்றா திருக்கச்
சிவராம னவ்வருட் செல்வன் — நவனியா
மென்னிதயத் தூடுருவி யென்னிறையைத்
தான்கலக்கி
யின்னலிழைக் கின்றதெவன்.

தோழி, நான் அவனுக்கு யாதொரு அபராதமும் செய்யாதிருக்க, சிவராமனாம் அவ்வருட் செல்வன் என் உள்ளத்தை ஊடுருவி, என் நிறையைக் கலக்கி ஏன் இன்னலிழைக்கின்றது எனல்.

(கொச்சகக் கலிப்பா)

48. என்னோ யுரைநா னியற்பழிப்பா ராவென்னி
யென்னைநீ சற்று மிகழாதே! நின்றுங்கா
லன்றா ரதுகுறிக் கறுதியிட்டுந் தான்சொன்னநா
ளொன்றாயிற் றேநீயே யெண்ணிப்பார் தோழியே.

தோழி! என் நாதனை நான் பழிசொல்வதாக நினைந்து என்னை இகழவேண்டாம். அவன் எனக்குக் குறியிட்டுக் கூறிச் சென்ற நாள் கழிந்து போயிற்றே. நீயே நினைந்துப் பார்! எனல்.

(வெண்பா)

49 வெண்ணிலா வானத்தொடு வெய்யிலைக் காரமுதத
தண்ணிலா வாகத் தழைக்குமோ — எண்ணிலா
வாண்டகையா மண்ணாற் கபலையின்பா
லெண்ணமுண்டாய்
ஈண்டுவனோ வெண்கண் ணெதிர்.

நிலா வெய்யிலைக்காயாமல் என்று தவிருமோ? என் ஆண்டவனுக்கு என்மேற் கருணையுண்டாய் அவனை என்று அடைவேனோ எனல்.

50. காணவோ கேட்கவோ கண்ணாளன் காதலன்றி
மாணவோர் வாழ்வெனக்கு மற்றில்லை — பேணவோ
வுள்ள தெனக்கவ் வுடையா னருட்பதத்துத்
தெள்ளிதா முள்ளுணர்வே தேர்.

தோழி, என் கண்ணாளன் காதல் வாழ்வே நான் காணவும் கேட்கவும் உரியது. அவனது திருவடியாம் உள்ளுணர்வே நான் பேணுவது; மற்றொன்றும் எனக்கு இனியதல்ல.

51. துற்றிலேன் மற்றுமொரு துப்புரவு சொக்கனருட்
பற்றிலே யுற்றவருட் பைத்தியமாய்ச் செற்றதன்றி
யுற்றிலேன் மற்றோ ருறவு விநோதமாக்
கற்றிலேன் மற்றோர் கதை.

தோழி, சொக்கனருட் பைத்தியத்தால் ஆசாரம், உறவு யாவும் ஒழிந்தேன் அவனருட் சரிதத்தைத் தவிர வேறொன்றும் கற்றிலேன் எனல்.

52 மற்றுமொரு பற்று மதிக்கிலேன் காமனெழில்
செற்றசிவப் பற்றன்றிச் சேயிழைநான்—பற்றுமுற்றத்
தள்ளினே னந்தச் சுதாசிவப்பற் றல்லதுமற்
றெள்ளினே னென்னையுமுள் ளிட்டு.

தோழீ, காமனை எரித்த சிவப்பற்றைத் தவிர வேறொன்றையும் மதிக்கிலேன். யானாகிய ஜீவப்பற்றையும் விட்டேனெனல்.

(கொச்சகக் கலிப்பா)

53. வெருவுறுமா மோக வியாகுலங்கெட் டோய
மருவியமெய் யன்பர் மனமகிழ்பே ரின்பத்
திருவருட்கூத் தாடுசிவச் செம்பிரான் மாட்டுப்
பெருவிருப்புக் கொண்டு பிதற்றலுற் றேனே.

தன்னை யடைந்த அடியவரது மோக மறுந்துப் பேரின்பத் திருக்கூத்தாடும் ஆண்டவனிடம் பெருங் காதல் கொண்டு பிதற்றுகின்றே னெனல்.

54. பூண்டமெய் யன்புணர்வு பொங்கவென் னுள்ளம்புக்
காண்டவன்பா லன்றி யடியேனுக் காசையில்லை;
காண்டலரு மோனவருட் காதலால் வெந்துநொந்து
மாண்டொழிகின் றேன்மனத்தை மாற்றவல்லார்
யாவரே.

என் னுள்ளம் புகுந்து அன்புணர்வை எழுப்பிய என் னாண்டவனைத் தவிர வேறு ஆசையின்றி, அவர் காதலால் வெந்து நோகும் என் மனத்தை யார்தான் மாற்ற வல்லா ரெனல்.

55. கண்ணாக வுள்ளவருட் கண்ணாளனையெண்ணிப்
புண்ணா யழுங்கலென்ன புண்ணியமோ நானறியேன்

பெண்ணுனை மற்றைப் பிறர்தங் கொழுநரைச்சேர்ந்
துண்ணு ரமுதமா வுள்ளந் திளைக்கையிலே.

மற்றைப் பெண்களெல்லாந் தத்தம் மணாளரைச் சேர்ந்து வாழ்க்கையில் கண்ணாகவே விளங்கும் கண்ணாளனை எண்ணி நான் மட்டும் வருந்துவ தென்னே யெனல்.

56. வம்புறுமோர் மாயமிம் மாநிலத்தில் வேறுண்டோ?
நம்பியமெய் யன்பர் நலஞ்சேரத் துய்க்கும்பே
ரின்பப் பிரானையெண்ணி யானொருத்தி யெக்காலுந்
துன்பமுழக் கின்றபெருஞ் சூதென்னோ தேறேனே.

யாரைநம்பிய அடியார் நன்மை சேர்கிறார்களோ, அப்பேரின்பப் பிரானை எண்ணியெண்ணி யான் ஒருத்தி மட்டும் வருந்துகின்றேனே! இது வென்ன மாயம் எனல்.

57. ஓலமிட்டா ருள்ளத் துணர்வுருவா வோமென்று
சாலத் துலக்கமாத் தானருள்செய் தத்துவன்பால்
மாலுற் றொருத்தி வருந்தும் விதிவசத்துக்
கேலப் பரிகாரம் என்னேடி சொல்லாயே.

தன்னை வேண்டித் துதிப்பாருள் 'ஓம்' என்று விளங்குந் தத்துவன்பால் ஒருத்தி மயங்கி வருந்தும் விதிவசத்திற்கு என்ன பரிகார முண்டு, தோழீ! நீ சொல்க வெனல்.

(வெண்பா)

58 பெருமானுக் கென்னறிவு பேதுற்றுத் தோழீ
யருமா லுழந்தே னகத்தே—கருமாயக்
கண்ணன் களி ரமணக் கண்ணாளன் காதலெனைத்
துண்ணென் றடலவற்குச் சொல்.

தோழீ பெருமானுக்கே பித்தாகி நின்ற என்னுள்ளத்தில் ரமணக் கண்ணாளனது காதல் மிகவும் வாட்டுகின்ற தென்று அவனுக்குச் சொல்க வெனல்.

59. உற்ற துரைத்தே னொழியா தடிநீயென்
னற்றமறக் காக்க வறிதியென்றே —கற்றுத்
தெளிந்தமதி சான்றபெருஞ் சேடீ யினிநா
னுனைந்தொழியா துற்றது நீ செய்

கற்றுத் தெளிந்த சேடீ, நீ என்னைக் காப்பாற்றுவாயென்று நம்பி உற்றதுரைத்தேன். இனி நான் வருந்தா வகை நீ செய்வா யெனல்.

(வெண்பா)

60. தோழிநீ வாழியென் சொந்தமாம் பந்துவாய்
வாழவெனக் குண்மை வகையாகத்—தோழமைசேர்
கேள்வன்பாற் சென்று கிளத்தியோ வாண்டதடந்
தோள்வகுளஞ் சூடவொரு தூது.

தோழீ நீ என் அன்பார்ந்த கேள்வனிடம் தூது சென்று அவன் என் சொந்த நாயகனாக வாழுமாறு சொல்வாயா வெனல்.

## ரு. தலைவி குயிலொடு கூறல்

(கொச்சகக் கலிப்பா)

61. வாவாவென் றென்னை மகிழ்ந்துதன் மாணடிக்கே
ஏவாப் பணிகொண்டா னெங்கோ வகன்றெழிந்தான்
கூவாய் குயிலே குதுகலப்பே ரின்பவருள்
வாழ்வான தெய்வ மணாளனென் பால்வரவே.

என்னை "வா வா" என்று மகிழ்ந்தேற்று அடிமை கொண்ட மணாளன் எங்கோ மறைந்தானே; குயிலே, அவன் வரக் கூவாயோ வெனல்.

## சா. தோழி தலைவற் குரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

62. ஒருவப் படாத வொருவனு வுள்ள
சொருபப் பிரானுன்பாற் சொக்கியமெய்க் காதற்
பருவப்பெண் ணைமடப் பாவையைக்கண் பாராய்
குருவடிவிற் கண்முற் குலவும்பெம் மானே.

குருவடிவில் கண்முன் எழுந்தருளிய பெருமானே, நீக்கமிலா ஆன்ம சொரூபனை உன்பாற் காதலாற் சொக்கிய பக்குவமுற்ற இப் பெண்ணைக் கண் பார்ப்பாயாக.

குறிப்பு:—ஒருவனுவுள்ள சொருபப் பிரான்—ஏகான்மசொரூபமா வுள்ள இறைவன்; மடப்பாவை—அழகிய பாவை.

63. நிட்டரா வுள்ளமெய்ந் நேயர்தந் நெஞ்சத்து
நட்டமா டுற்றமெய்ஞ் ஞானப் பிரானைக் கண்
டிட்டமா ளுனன்னை யின்றி யமையாதாள்
*அட்டமா வந்துன் னருட்கடைக்கண் ணோக்குதியே.

* அட்டமா—பக்கம், சமீபம்

ஆன்மநிஷ்டர்களான உன் அன்பருள்ளத்தில் நட்டமிடும் பிரானே, இப்பெண் உன் அன்பினளானாள். உன்னையன்றி உயிர்தரியாள் அவளருகில் வந்து கடைக்கணிப்பா யெனல்

(வெண்பா)

64. பாவியேன் கண்டு பரிதபிக்க வென்றலைவி
யாவிமெலிந் துன்பே ரரற்றுகின்றாள்—மேவி
யுடன்பட் டொழுகா யுதாரவருட் செல்வ
மடமென் கொடியை மடுத்து

என் தலைவி உன் பேரைச் சொல்லிப் பிதற்றுகின்றாள், கருணைச் செல்வனே நீ அவளை ஏற்றுக் கொள்க வெனல்.

## எ. நற்றாய்க்குத் தலைவி யுரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

தன்னைக் கடிந்துரைத்த தாயர் முதலியோர்க்குத் தலைவி மறுமாற்றம்

65. *அற்கமொன் றுமில்லேன்மற் †றொற்கமொன்று
மில்லேனென்
றெற்கடிய லுற்றநீர் என்னியல்சற் றுந்தேறீர்
கற்குறுங்கல் லிக்கோர் கரையா வொளிச்சொருபத்
தற்பரன்பாற் சேர்ந்துமனந் தன்னிழந்து
நிற்கையிலே.

* அற்கம்—அடக்கம் † ஒற்கம்—ஒடுக்கம்

இதுவுமது

66. எனைவிவத்தை யற்றேனென் றெள்கலுற்ற நீரவ்
வனுபவத்தா லன்றி யறியவல்லீ ரல்லீர்
மனவவத்தை முற்றக் கடந்தொளிர்மா தெய்வப்
பனவனைப்பின் பற்றுசிவப் பைத்தியத்தின் பண்பே.

## ௪. ஆண்டவன் முன்னிலையிற் றலைவியின் கூற்று

(கொச்சகக் கலிப்பா)

67. தெள்ளியா யொள்ளியாய் சிற்பரமா வுள்ளவருள்
வள்ளியாய் மையலெழ மத்தமதோன் மத்தமனக்
கள்ளியா மென்னைக் கடைக்கணித்துச் சென்றாயே
உள்ளி யுருகலுற்றே னுள்ளம்புக் கொன்றாயே.

ஆண்டவா, முன்பு நீ என்னைக் கடைக்கணித்துச் சென்றாயே, உன்னையே நினைந்துருகும் என்னுள்ளத்திற் புகுந்து கலப்பாயாக எனல்.

68. தொக்கவனு பூதி சுரக்க வருளுவாய்
நெக்குருகு மெய்யன்பு நெஞ்சிற் கிளர்வுறுமப்
பக்குவமின் றேனும் பரமா வுனைக்கண்டு
சொக்கலுற்றே னுன்றன் சொருப விலாசத்தே.

ஆண்டவா, நான் பக்குவ மற்றவளாயினும் உன்னைக் கண்டு உன்பாற் சொக்கலுற்ற எனக்கு அனுபூதி யருள்வாயாக வெனல்.

69. நீநானென் றாக நிகழ்சொருபச் சிற்பரத்துக்
கேநா னவாவி யிரங்குகின் றேனாண்டவா!
நானாபே தங்கரக்க நானானென் றோர்நானா
ஞானானு பூதி நலங்கிளரச் சேராயே.

ஆண்டவா, நீயும் நானும் ஒன்றாகிவிடும் நிலைக்கே ஏங்குகின்றேன். பேதங்களற்று ஞானானுபூதி யடையுமாறு 'நான் நான்' என்று ஸ்புரித்து என்னைச் சேர்வாயாக.

70. கட்டமே காதலெனக் கண்டுமே நின்சொருபம்
பெட்டவருட் காதலைநான் விட்டொழியும் பெற்றி
யிலேன்;
இட்டமா வுன்னையெவ் வெத்தனைநா ளெண்ணுகின்
றேன்
கிட்ட வணைகிலா தெட்டவகல் கின்றாயே.

உன்காதலைப் பெறுதல் மிகக் கஷ்டமான தென்றறிந்தும், உன்னை விட்டகலாது எத்தனையோ நாட்கள் நினைந்திருக்கின்றேனே. ஆனால் நீயோ என்னை அணையாது அகல்கின்றாயே யெனல்.

71. படியிலே யென்னைப் பதம்பெறவாள் வாயென்
றடியளா வுன்னை யடைந்தேன் அருளுக்
குடையவா என்றா ருயிர்க்குடையாய் நானுன்
னடியிலே வாழ வணையாயுன் னோடே.

என் ஆருயிர்க் குடையானே, என்னை ஆட்கொள் என்று உன்னை யடைந்தேன். எனவே நான் உன்னடியிலேயே வாழுமாறு உன்னோடென்னை அணைக வெனல்.

(வெண்பா)

72. மெய்யாக வுன்னை விழைந்தடைந்த மெல்லியலை
ஐயா வகற்ற லறனன்றே—உய்யா
வகதியாத் துன்று மபலைநான் கண்பார்
சுகதியா நீயே துணை.

இறைவ, உன்னை உண்மையாகக் காதலித்த அகதியும் அபலையு மான என்னை அகற்றாது கடாக்ஷிப்பா யாக. எனக்கு நீயே கதியும் துணையுமா மெனல்.

(குறள்)

73. ஒரானோ ரடிச்சிக் குதவாய் சொரூபப்
பிரானே யனுபூதிப் பேறு.

௬. உள்ளங் கொள்ளை யிட்டான்

(கொச்சகக் கலிப்பா)

74. இசைக்க வொணாச் சிறையோன் விடயப்
பசிக்களை தீரப் பரசுக வாழ்வா
நிசிக்கணே வந்தென்னை நேர்ந்து சொரூப
வசப்பட வென்னை மயக்கலுற் றானே.

நான் விஷயவேட்கை யற்றுப் பரசுக வாழ்வடையுமாறு ஆண்டவன் இரவில் என்னை யடைந்து சொரூப வசப்பட மயக்கினா னெனல்.

(வெண்பா)

75. பொன்னார்செம் மேனிப் பொலிவுற்ற சீரமணன்
கன்னா ருரிக்குங் கனசித்தன்—வின்னாண்

கொளுவிப் புரமெரித்த கொல்லேற்ற னென்னைக்
களவுற்ற னுள்ளங் கவர்ந்து.

கல்லில் நாருரிக்கும் சித்தனும், முப்புரமெரித்த சிவபிரானும், பொன்னார் மேனியனுமான ஸ்ரீ ரமணன் என் உள்ளங் கவர்ந்து களவு செய்தா னெனல்.

76 கூரன்பர் தம்மனத்தைக் கொள்ளைகொளுங் கோரமணன்
சோரம் படவுளத்தைச் சூறுசெய்தே—பேரின்ப
வாரியா வென்னை வளைத்துக்கொண் டாண்டவருட்
பேரியா றெங்கள் பிரான்.

அன்ப ருள்ளங்கவர் கள்வனான ரமணபிரான் என் உள்ளத்தையும் கொள்ளையிட்டு பேரின்பக் கடலா யணைந்தா னெனல்.

77 பார்ப்பானு வென்னைப் பரிசழித்தான் பண்டொருகா
லோர்ப்பாக நான்றன்னை யுள்ளியதாற்—கூர்ப்பான
தன்னருட்கண் ணோக்கினின்று தப்பநா னெண்ணாது
கன்னமிட்டுக் கொண்டான் கருத்து.

நான் யாரென்று விசாரித்ததால், நானின்றி, தானே பார்ப்பவனாகி என் இருப்பை யழித்தான். இவ்வாறு உள்ளங் கொள்ளையிட்ட சொரூப நோக்கினின்று நான் (அகந்தை) இனித்தப்ப (எழ) முடியா தெனல்.

78. பார்வையா லென்னைப் பரிசழித்த வாண்டவன்பாற்
பேர்வதா யுள்ளுணர்வு பேதுற்றேன்—சேர்வதாய்
நானவனைக் கூடி நலந்திளைக்கி லன்றியிருப்
பூனுடலி லில்லை யுயிர்க்கு.

பார்வையால் என்னைப் பரிசழித்த ஆண்டவனிடமே மனம் பித்துப் பிடித்தேன். அவனைக் கூடித் திளைக்கிலன்றி உயிர் தரியே னெனல்

79. களைத்தொழிந்த வென்முக் கரணங் களுமக்
களைப்பொழியத் தன்னை நான் கண்டு—திளைத்தலுறப்
பேரின்ப வாழ்வாப் பெருகியென் னுள்ளத்தைச்
சோரம் புரிந்தா னிறை.

நான் முக்கரணங்கள் களைப்பொழியு மாறு என் ஆண்டவனைக் கண்டு திளைக்க, அவன் பேரின்பமாய்ப் பெருகி என் உள்ளங் கவர்ந்தான் எனல்.

80. தொக்கவருட் பேரின்பச் சொக்க னெனைத்தன்பாற்
சிக்கவருட் சூழ்ச்சிசெய்த சீராளன்—மிக்கவருட்
பார சொரூபமாப் பற்றினான் பாரவருள்
வாரவியல் பாயிற்றென் வாழ்வு.

பேரின்பச் சொக்கனை ஆண்டவன் அருட் சூழ்ச்சியால் என்னைச் சிக்கச் செய்து சொரூபமாய்ப் பற்றிக் கொண்டான். அதனால் என் வாழ்வே அருளன்பு வடிவாயிற் றெனல்.

81. பிரபு சிவரமணன் பெய்கருணை* காம
சுரபியா வின்பஞ் சுரக்கும்—மரபின்
முறையைக் கெடுத்து முயங்கினா னென்னைச்
சிறையா வுளத்திற் செறித்து.

* காமசுரபி=காமதேனு.

கேட்டதை மட்டுந் தருகின்ற காமதேனு மரபுக்கு மாறாக சிவரமணன் தன் அருளிச்சைப்படியே என்னை உள்ளத்திற் சிறை செய்தா னெனல்.

(கொச்சகக் கலிப்பா)

82. சித்தக் கல்க்கச் செருக்கா மகப்பேயைக்
குத்தியருட் குந்தத்தாற் கொன்று குடர்குமைத்தான்;
மெத்தத் தெளிந்தவருள் வீரகம் பீரனுக்கென்
புத்திமுற்றப் போக்கிப் புலம்பலுற்றேன் பேதையே.

அகப் பேயை யருட் குந்தத்தாற் கொன்ற வீரகம்பீர ஆண்டவனுக்கே என் உள்ளத்தைப் பறிகொடுத்துப் புலம்பலுற்றே னெனல்.

(குறள்)

83. கூரன்பு முற்ற முற்றக் கொள்ளைகொண்டான் சுத்தவருட்
பேரின்ப வண்ணப் பிரான்.

## ௰. நற்றாய் தலைவிக்குத் தலைவன் பெருமை கூறல்

(கொச்சகக் கலிப்பா)

84. உண்ணாடு வாரிதயத் தொட்பநுட்ப மாகவொளிர்
கண்ணாள னுண்மையியல் காணாது பேதாய்நீ
மண்ணாள னாக மதித்தாயே ; சுத்தவருள்
விண்ணாள னாக விளங்கக்கா ணுள்ளாழ்ந்தே.

பேதாய், உள்ளே நாடுவார் இதயத்தில் நுட்ப ஒளியாய் விளங்கும் உன் கண்ணாளனின் உண்மை யறியாது மனிதனாய் நினைத்தாயே. உன்னுள் ஆழ்ந்து அவனை அருள் விண்ணாக அறிக வென்றல்.

## ௧௧. ஆண்ட பிரான்

(கொச்சகக் கலிப்பா)

85. ஆடும் பிரான்மெய் யருள்வடிவா வென்னகந்தான்
கூடும் பிரான்கொடுங் கோளாம் பிரமாதஞ்
சாடும் பிரான்சொருப சாட்சாற்கா ரத்தெரிவா
நீடும் பிரான்சொருப நேயப் பிரானே.

86. ஆண்டவா வாண்டவா வாண்டவா வென்றுதன்னை
வேண்டலுற்றே னுள்ளத்தில் விஞ்சைசே
ருண்மையாத்
தூண்டுசிவ ஞான சொருபானு பூதிபொங்கக்
காண்டலுற்ற சுத்தவருட் கண்ணாளன் காந்தனே.

‘ஆண்டவா’ என்று கூவிய என்னுள்ளத்தில் சொருப ஞானனுபூதியாகவே என் காந்தனைக் கண்டேனெனல்.

87. பெண்ணான பேதையேன் பெற்றபெரும் பாக்கியமாங்
கண்ணாளன் சுத்தவருட் காட்சியையும் மாட்சியையும்
மண்ணோர் மகிழ்தலையும் விண்ணோர் வியத்தலையு
மெண்ணாநின் றேனிதயத் தெக்களிப்புப்
பொங்கியதே.

என் கண்ணாளனாகப் பெற்ற ஆண்டவனின் காட்சி, மாட்சிகளை உலகர் மகிழ்தலையும் தேவர்கள் வியத்தலையும் எண்ணியெண்ணிப் பெருமிதங் கொள்கின்றேனெனல்.

88. மண்ணாள னல்லனன்றி விண்ணாளனுமல்லன்
பெண்ணா ணலியல்லன் பேடுமல்லன் என்றாலே
கண்ணாள னாகக் கலப்புற்றேன் காரணப்பொய்ப்
பெண்ணாள னல்லன் பிரம்ம சொரூபனே.

குறிப்பு — காரணப் பொய்ப் பெண்ணாளன்—படைப்பாதிப் பஞ்ச கிருத்தியங்களுக்கும் காரணமான கற்பனா மாயா சத்தியோடு கூடிய ஈசுவரன்.

என் கண்ணாளனான ஆண்டவன் நராதி சர்வேசுவரனுமல்லன். முத்தொழில் கடந்த பிரம்ம சொரூபனே அவன் எனல்.

89. பெண்ணைப் பிறந்தவென் பெண்மை தனக்கேயாக்
கண்ணா லெனக்குட் கலந்தோன் சொரூபமன்றோ
எண்ணை லெண்ணுமெய் யோகியர் தேர்ந்துளத்
துண்ணா ரமுதமா வுட்கொண்டு வாழ்வதே.

என் பெண்மையைத் தனக்கே கொண்ட என் தலைவனின் சொரூபமே, யோகியர் அறிந்து அனுபவித்து வாழ்வதாகுமெனல்.

(வெண்பா)

90. கருத்திலே தன்சொருபக் காதலுற வென்னைத்
திருத்திப் பணிகொண்ட தெய்வம்—பொருத்தமா
வொப்பவனைத் துள்ளு முறைமோனக் கேவலசச்
சிற்பரமாந் தெய்வந் தெரி.

யாவற்றும் சமமாய் விரவி விளங்கும் பிரம்மமே எனக்குத் தன் சொருபக் காதலுண்டாகுமாறு என்னைத் திருத்திப் பணிகொண்ட தெய்வ மாகு மெனல்.

91. பொய்ஞ்ஞால மோகமறப் புத்திபுகுந் தாண்டு கொண்டான்
இஞ்ஞாலந் தன்னி லெழுந்தருளி – மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல் கழலடித்தொண் டாகவென்னைப்
பெண்ணுடைய தெய்வப் பிரான்.

மெய்ஞ்ஞானக் கண்ணைக் கொண்டவனும் என்னைப் பெண்ணாய்க் கொண்டவனுமான ஆண்டவன் றிவ்வுலகத்தில் வந்து என்புத்தியிற் புகுந்து உலக மயக்கமற ஆட்கொண்டா னெனல்.

(கொச்சகக் கலிப்பா)

92. சிரம்பணிந்த போதே திருவருட்கண் ணேக்கால்
வரம்பில்பே ரின்பவருள் வாழ்வா வணைந்த
நிரம்ப வழகியவென் னேய மணாளன்
பரம்பரனு வெல்லாம் படைத்தளிக்கின் றேனே.

நான் வந்து பணிந்தவுடனேயே தன் கண்ணேக்காற் பேரின்ப வாழ்வாக என்னை யணைந்த ஆண்டவன் முத்தொழில் முதல்வனான பரம்பொருளே யெனல்.

93. போவான் வருவானே போல மருட்டுவான்
ஓவாதெங் கெங்குமுறை யொள்ளியமெய்த்
தெள்ளியான்
சாவான் பிறவான் சதியேற்குத் நற்பரமெய்
வாழ்வா வகத்தில் வளர்சொருபப் பெம்மானே.

---

குறிப்பு :– "போனாலும் வந்தாலும் போனவன் வந்தவனு நானுகேன் போக்குவரா துடிவிலே." என்னும் ஆன்ம சாட்சாத்காரப் பிரகரணம் 47வது பாடல் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

என்மணாளனாக என்னுள்ளத்தில் வாழும் ஆண்டவன் பிறப் பிறப்பற்றவனாய் எங்குமுள்ளவனாயிருந்தும் போதல் வருதலையுடைய மானிடன் போல மருட்டுவா னெனல்.

94. பொற்புறுவாழ் வானவருட் பூரணமோ னனுபவக்
கற்பியலே சாரக் கடிமணம்பூண் டாண்டவன்பாற்
சொற்பரமன் ருகத் துலங்கு வசீகரப்பே
ரற்புதச்சிற் சத்தி யளக்கவொணு மாட்சித்தே.

என்னைக் கடிமணம் பூண்ட ஆண்டவனிடம் விளங்கும் அற்புத வசீகரச் சிற்சக்தி அளத்தற்கரிய தெனல்.

95. சும்மா துலங்கு சொரூபவருட் கட்டழகால்
இம்மா நிலத்தோரை யின்பா வசீகரித்துப்

பொய்ம்மா லகன்றெழியப் புந்தியிலே புக்கொளிரென்
னம்மானைக் காணவெனக் காயிரங்கண் வேண்டுமே.

சொரூபக் கட்டழகால் அனைவரையும் வசீகரிப்பவனும் என் புந்தியிற் புகுந்தவனுமான ஆண்டவனைக் காண எனக்கு ஆயிரங் கண்கள் வேண்டுமெனல்.

96. நீள விதயத்து ஞேயமாத் துன்றுமென்கண்
ணாள னருள்வடிவக் கட்டழகைக் கண்டோர்கண்
மீள விமையா வெளியா வொளிர்வதன்றி
மாளுவதன் றூன மனோமயமாம் புன்புலத்தே.

என் கண்ணாளன் கட்டழகைக் கண்டோர் விழி இமையாமல் அருள் வெளி வடி வாகுமே தவிர உலக மயக்கி லகப்படா தெனல்.

(குறள்)

97. அன்பினா லென்னை யணைந்தநல் லாண்டவனுக்
கின்பவுணர் வுண்மை யுரு.

98. தெளிந்த சிவா னுபவச் சீர்மையா லென்னை
யளைந்த பிரான்வடிவே யன்பு.

99. விரும்ப விரும்பவென்னை வேட்டணைந்த பெம்மான்
கரும்பினுமிக் கின்னினியன் காண்.

100. மன்ன வெனைத்தன் மயமா மடுத்தபிரான்
தன்னந் தனித்தத் துவன்.

## கஉ. மர்மம் அறியேன்

(கொச்சகக் கலிப்பா)

101. மாதரார் முன்னென்னை மானங் கெடுத்தலே
காதலுற வாகக் களிக்குமோர் நாணிலியை
வேதவே தாந்த விழுப்பொருளென் றுண்மையுணர்
மாதவரெல் லோருந்தேர் மன்ம மறியேனே.

மற்ற மாதர்களிடையே என்னை (தேகாபி) மானங் கெடுப்பதையே காதலுறவாக மகிழும் நாணமிலா நாயகனைப் பெரியோர் பரபொருள் என்று புகழும் மர்மம் அறியே னெனல்.

102. மஞ்ச மணாளனா வந்தொருநா ளென்மனத்தில்
உஞ்சலா டுற்றபிரான் கண்மாய மாக்கரந்தான்;
சஞ்சலத்தி லாழ்ந்து தவிக்குங்கால், உன்னுருவா
நெஞ்சிலிருக் கின்றேனை நீமறந்தா யென்றானே.

ஓர் நாள் என்னுள்ளத்தில் என் மணாளனாகத் தோன்றிய பிரான் பிறகு மறைந்தான். நான் வருந்தியபோது ''உன்னுருவாகவே இருக்கும் என்னை நி ஏன் மறந்தாய்'' என்று விளக்கினானெனல்.

103. அன்னியனோ வல்லனவன் யானே யெனத்தக்கான்
அன்னியனை போலென் னறிவை மருட்டினான்;
உன்னதுண்மை சொல்லென் றுசாவலுற்றே
னுக்குமற்
றென்னை யுசாவலின்முன் னுன்னையுசா வென்றானே.

ஆண்டவன் எனக்கு அன்னியமாகாமல் யானேயாவன். ''உன் உண்மை யாது?'' என்று நான் வினவவே, ''என்னை விசாரிக்கு முன் உன்னை நீ யார் என்று விசாரி'' என்றருளினானெனல்.

## ௧௬. சிக்கெனப் பிடித்தேன்

(கொச்சகக் கலிப்பா)

104. மீப்பால மெய்யனருள் வித்தகமாய் மாலங்கூ
ரேய்ப்பா லிதயத் திருந்தும் புலப்படான்;
வாய்ப்பாக வென்னறிவில் வந்துசிக் கிக்கொண்டான்;
கூர்ப்பாற் குறிக்கொண்டேன்; கோகுசெய்யப்
போகானே.

---

குறிப்பு :—அருள் வித்தகமாகிய மாய்மாலம்; கோகு—சூது, ஏய்ப்பால் புலப்படான் எனவியையும்.

யாவருள்ளத்திலு மிருந்தும் தன் மாய வித்தையால் யாருக்கும் புலப்படாத ஆண்டவன், கூர்ந்து தன்னை நாடியதால் என்னறிவில் வந்து சிக்கிக்கொண்டான்; இனி சூதுசெய்து அகலமாட்டானெனல்.

(வெண்பா)

105. உண்ணீர்மை சான்ற வொளிசேரப் பேதையேன்
கண்ணீரை மாற்றியவென் கண்மணியைப்—
பெண்ணீர்மை
மிக்கவருட் கற்பு விளங்கத் தொழுகுலமாச்
சிக்கெனவுட் சேர்த்தேன் செறித்து

என் கண்ணீரை மாற்றிய கண்மணியான பகவனை அருட்கற்பு விளங்கச் சிக்கெனப் பிடித்து உள்ளத்திற் சேர்த்தேனெனல்

(குறள்)

106. மயல்போ யறிந்தேன் மறதியற வாண்டான்
இயல்பான சொந்தவிறை யென்று.

குறிப்பு:— என்று மெவர்க்கு மியல்பா யுளபொருளை (உள்ளது நாற்பது); ஈசனவ னெவ்வுயிர்க்கு மியல்பானான் சாழலோ (திருவாசகம்).

107. எல்லாமொன் றாக வியல்சிற் பரசொருப
நல்லானென் னுன்மநா தன்.

௧௪. களவிற் கலந்தான்

(வெண்பா)

108 களவிலே வந்தென் கருத்திற் கலந்தான்
உளவுதா னேதோ வுணரேன்—அளவிலாப்
பேரின்ப மானவருட் பெம்மாற் குலப்பிலா
வோரன்பு பூண்டே னுளத்து.

களவில் வந்து என் கருத்திற் கலந்த கருணை யாதோ அறியேன். அதனால் அப்பெருமான் மேல் எனக்கு அளவற்ற அன்புபிறந்துவிட்ட தெனல்.

109. களவிலே வந்து கலந்தான் கணத்தி
லளவில்பே ரின்ப மளித்தான்—உளவறிந்து

பற்றிக் கொள் ளென்று பகர்ந்தா னகம்பரமா
முற்றக்கண் டற்றேன் முனைப்பு.

களவிற் கலந்தான்; பேரின்பம் அளித்தான்; அவ்வுளவைக் கண்டு தன்னைப் பற்றிக் கொள்ளக் கூறினன் அதனால் நான் அவனே எனக்கண்டு அகந்தை முனைப் பற்றே னெனல்.

110. களவிலெனைத் தோய்ந்தவருட் காதலனே யின்ப
வளவறு மிந்த மணாளன்—அளவிலாப்
பூரணசுத் தாத்துவித பூமிக்* கதிபதியாய்க்
காரணவா ஞானக் கதிர்.

* அதிபதியாய்க் கதிராவான் என ஆக்கச்சொல் வருவித்து முடிக்க.

களவில் எனைக்கலந்த காதலன் மணாளனாகிய இன்பவளவனும் சுத்தாத்துவிதபூமிக் கதிபதியாய் விளங்கும் ஞான சூரியனேயாகு மெனல்

111. கள்ளப் புணர்ச்சி கரையிலாப் பேரின்ப
வெள்ளப் புணர்ச்சியாய் வென்றதால்—உள்ளப்
புணர்ச்சியே முற்றமுற்றப் பொங்கு சொருபப்
புணர்ச்சியாப் போர்த்த துலகு.

இறைவனின் கள்ளப் புணர்ச்சியே பேரின்ப சித்தியாகி, இதயங் கலந்த ஆன்ம சொருபத்திலேயே இவ்வுலகு முற்றும் சேர்ந்துள்ள தாயிற்றெனல்.

112. திருவாண மாக நிறுத்தினன் ஞான
குருவான தெய்வக் குரிசில்—பருவ
மடப்பேதை யானநான் மானமுங் கற்புங்
கேடப்பேது பட்டேன் கிறி.

பக்குவமுற்றிருந்த என்னை ஞானகுரு மானபிமானங் களைந்து நிருவாண நிலையில் நிறுத்தின னெனல்.

113. ஒளிவட்ட மார்ந்த வுளத்திலே தன்மெய்
தெளிவித் தருள்சுரந்த தேவன்—களவுப்
புணர்ச்சியா லார்ந்தவருட் பூரணமாம் போக
வுணர்ச்சியுரு தென்று முளத்து.

என் உள்ளத்தில் தன்னுண்மையைத் தெளிவித்த இறைவனது களவுப் புணர்ச்சியா லடைந்த அருட்போக வின்ப வுணர்ச்சி எனக்கு என்றும் நீங்கா தெனல்.

114. கன்னியான் றன்சொருபக் காதலுறக் கண்காட்டித்
தன்னே ரிலாமெய்த் தனித்தலைவன்—கன்னக்
களவுறுப் புக்குக் கலந்தா னருட்சீ
ருளவறியாப் பேதை யுளத்து.

அருள் உளவு அறியாக் கன்னியான என்னை ஆண்டவன் கண் காட்டிக் கவர்ந்து, உள்ளத்தே களவிற் புகுந்து கலந்தா னெனல்.

115. தொடர்ச்சிமிகத் தொன்றுதொட்ட தோழமைசே
ராண்டான்
அடிச்சியைமிக் கன்பா லணைந்தான்—அடிச்சியகத்
தாகங் கலந்தவபோ டைக்கியமா மோனவருட்
போகங் கிளர்ந்ததப் போது.

பழம் பிறவிகள்தோறும் என்னோடு தோழமை கொண்டுவரும் பெருமான் இவ்வடிச்சியை யணைந்து அகங்கலந்தபோது மோன வருட் போகங் கிளர்ந்த தெனல்.

116. அப்போ தலர்ந்த வருட்போத மோனமெனக்
கெப்போதும் பிற்கூம்ப லின்றாக—உற்போத
வாழ்வகத்து மேன்மேல் வளரவென் னுருயிருக்
*கேழ்பிறப்புஞ் சேரு மினிது.

* எழ்பிறப்பும்—எழுவகைப் பிறப்பிலும்

அப்போது மலர்ந்த மோனஞானம் எப்போதும் குன்றாது மேன்மேல் வளர்ந்து எப்பிறப்பிலும் தொடர்ந்து விளங்கு மெனல்.

(கொச்சகக் கலிப்பா)

117. உள்ளமா வுள்ள வொளிப்பிரான் பேரின்ப
வெள்ளமா மோன வெளிப்பிரான் சுத்தவருட்
கள்ளத்தா லென்னைக் கவர்ந்துகலந்
தாண்டுகொண்டான்
தெள்ளமுத மான சிவச்செம் பதத்திலே.

உள்ளத் தொளியாகவும் மோனவெளியாகவு முள்ள ஆண்டவன் அருட் கள்ளத்தால் என்னைக் கவர்ந்து சிவபதத்திற் பேரின்ப வெள்ளமாய்க் கலந்தா னெனல்.

(குறள்)

118. களவினு லுள்ளங் கலந்தோன் சொரூப
வளவனுந் தெய்வ வரன்.

## கரு. இன்பக் கலவி

(வெண்பா)

119. ஞானவொளி காட்டி நடத்தினன் மோனவெளிக்
கூனமில்சை யோக முணர்த்தவே—யானவனே
டேகாந்த மானபே ரின்பக் கலவியா
லோர்காந்த னுனு னுளத்து.

ஆண்டவன் ஞானவொளிகாட்டி என்னை மோனவெளிக்கு நடத்திச் சென்று ஏகாந்த இன்பக் கலவியால் என் உள்ளத்தில் ஒப்பற்ற காந்தனுனு னெனல்.

## கசு. ஊர் தூற்றல்

(வெண்பா)

120. காரிருவிற் சேரியுற்றுக் கன்னிமையின் சீரழிய
வாரிவனைத் தென்னை மடுத்தொழிந்தான்—
ஆரியனே
டோரியலா வுற்றமறை யூரலரா யாருயிரை
யீரியவா ளாயிற் றிகத்து.

சேரிப் பெண்ணுன என்னை ஆரியன் இருளில் வந்து கன்னிமை தீர்த்து மணந்து சென்றுன். ஆரியன் சொரூபத்தோடு நான் ஒன்றுகிவிட்ட இவ்விரகசியம் ஊரறிந்து தூற்றப்பட்டு என் ஜீவத்துவத்தை யறுக்கும் வாளாயுத மாயிற் றெனல்.

## கஎ. தலைவி உலகோர்க் குரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

121. அளவிலாச் சீருடைய வம்மான் அருளாற்
களவில்வந் தென்னைக் கலந்தலால் அங்கந்
தளர்வுற் றதுகண்டு சுத்தமக்குத் தக்காங்
கிளிவுரையால் யாருமென்னை யீர்கின்ற தென்னே.

ஆண்டவன் என்னைத் தன்னருளாற் களவில் புகுந்து கலந்ததால் என் அங்கந் தளர்வுற்றது கண்டு மற்றோர் பழிப்பது ஏன் எனல்.

122. அனைத்துப் பிறப்பிலுமென் னாண்டா னவனென்
றெனைத்துந் தெரியார் இனியேனுந் தேர்ந்து
தனித்தபர மார்த்தத் தலைவனைத்தாம் போற்றும்
மனத்தினா லென்னை மருவுவது நன்றே.

எப்பிறப்பிலும் எனக்கு அவனே ஆண்டவன் என்பதை இனியேனும் நீவிர் அறிந்து அவனைப் போற்றுமுகத்தால் என்னை யடைவது நல்லதெனல்.

## கஅ. கன்னிமை கழிதல்

(வெண்பா)

123. பழுத்த சொரூபவருட் பார்வையா லிந்தத்
தொழுத்தையையெம் மம்மான் றொடர்ந்தான்— விழித்த
விழிப்பாலே முற்ற விழுங்குண்ட தென்றன்
கொழுப்பான கன்னிக் குணம்.

ஆண்டவன் என்னைத் தொடர்ந்து சொரூபப் பார்வையால் விழிக்கவே என் கன்னிக்குணம் விழுங்கப்பட்டதெனல்.

124. அதிரா வடிகளா யண்ணலென்முற் றோன்றிக்
கதிரார்ந்த தெய்வவருட் கண்ணால் — பிதிரா ந
சாந்த சொரூபச் சதிராண்மை காட்டினான்
சாய்ந்ததென் கன்னிச் சதிர்.

ஆண்டவன் என்முன்றோன்றி, அருட்கண்ணுற் சொருபச் சதிராண்மை காட்டியதால் என் கன்னிமை கழிந்த தெனல்.

125. தன்னிமையா வாள்விழியாற் சட்டெனவே வெட்டினன்
கன்னிமையா மென்னகந்தைக் கட்டறவே—
அன்னியச்சுட்
டானமோ காவேச மற்றொழியத் தன்னளவின்
மோனமுற்றே னுண்டான் முகத்து.

ஆண்டவன் தன் ஞானவிழியால் என் அகந்தைக் கன்னிமைக் கட்டை வெட்டலும், அன்னியத்தைச்சுட்டி யறியும் ஆவேசமற்று மோனமுற்றே னெனல்.

126. என்னியலே யாக விறைவனருட் பார்வையாற்
கன்னியிளம் பேதை கருத்தூடு—கன்னிமையின்
மோகவகங் கார முரண்குலைந்து மூண்டதுமா
யோகசிவ போக வுணர்வு.

ஆண்டவன் அருட்பார்வையால் மோகவகங்காரக் கன்னிமை யழிந்து மகாயோகமாகிய சிவபோகவுணர்வு மூண்டதெனல்.

(கொச்சகக் கலிப்பா)

127. துன்னு துரீய சொரூபானு பூதியா
மன்னுசுப வாழ்வு மடுக்கவென் னுள்ளத்திற்
பின்னலுற்ற மோகப் பிணக்கா மகங்காரக்
கன்னிமையைச் செற்றுக் கலந்தான்கண் ணாளனே.

எனக்குச் சொரூபானுபூதியாகிய சுபவாழ்வு கிட்டுமாறு ஆண்டவன் அகங்காரக் கன்னிமையை அழித்துக் கலந்தா னெனல்.

128. அள்ளக் குறையா வனந்த சிவாம்புதியாத்
தெள்ளத் தெளிந்தவருட் செல்வன் அடிச்சியே
னுள்ளத் துறுதிசே ருண்மையா வொன்றலாற்
கள்ளமனக் கன்னிமையின் கட்டுக் குலைந்ததே.

அருட் சிவக் கடலான ஆண்டவன் இவ்வடிச்சியின் உள்ளத்தில் சத்திய வஸ்துவாகக் கூடியதால் மனக் கன்னிமைக் கட்டழிந்த தெனல்.

129. அறிவா வணைந்தமெய் யன்பன் சொரூப
நிறைவா மனுபூதி நெஞ்சத் தொளிர்வால்,
சிறவாத மோகச் செருக்கா மகப்பேய்
வெறியான கன்னிமையின் மித்தையற் றேனே.

ஆண்டவன் அறிவாக என்னை யணைந் தளித்த சொரூபானுபூதியால் அகப்பேய் வெறியான கன்னிமை கழிந்தே னெனல்

130. நேயவுணர் வூறவென் னெஞ்சத் தருள்வடிவாத்
தோயலுற்ற சொந்த சொரூபப் பிரான்பதச்செஞ்
ஞாயிற்று முன்பு நசித்தது நானெனும்பொய்ம்
மாயவகங் கார மயக்கமாங் கன்னிமையே.

என் உள்ளத்தில் அன்பூற அருள்வடிவாகத் தோய்ந்த சொரூப ஞாயிறின் முன்னிலையில், மாயாமயக்கமான கன்னிமை நசித்த தெனல்.

131. கள்ள வகந்தைமனக் கன்னிமையின் கட்டழியத்
தெள்ளத் தெளிந்த சிவமா வெனைக்கலந்தான்
எள்ள வொணாத வியற்சிற் பரசொருப
வெள்ளமா மோன விளக்கமுற வுள்ளத்தே.

அகந்தைக் கன்னிமைக் கட்டழிந்து சொரூப விளக்கமுறும்படி ஆண்டவன் சிவமாக என்னைக் கலந்தா னெனல்.

132. மன்றவென் னுள்ளத்தில் வாழ்சொருபச் சிற்பரனோ
டென்றுமொன் றாயபே ரின்பவியல் காண்டலாற்
பொன்றியது மாயப் புணர்ப்பாகத் தோற்றுமகிற்
சன்றியவெம் பாசமாங் கன்னியகங் காரமே.

உள்ளத்திலுள்ள சிற்பரனோடு ஒன்றாய்க்கலந்து பேரின்பங் கண்டதால், மாயவுலகப் பாசமான அகங்காரக் கன்னிமை யழிந்த தெனல்

133. அளவற்ற வாணவப்பா ழாசையற வுள்ளத்
தொளிர்வுற்ற வுண்மை யுடையான்கண் ணோக்காற்
களவுற்ற மோகவகக் கன்னிச் செருக்கற்
றளைவுற்ற தான்றசொரூ பானுபவ வாழ்வே.

ஆணவமற உள்ளத்திலுற்ற ஆண்டவன் கண்ணோக்கால் அகங்காரக் கன்னிச் செருக்கழிந்து சொரூபானுபவ வாழ்வுற்றே னெனல்.

134. அடங்க வொண்ணாத வகப்பே யடங்கி
யொடுங்க வுளத்தொளி ரொட்பநோக் கத்தால்
முடங்கிநா னென்னும் முனைப்பான கன்னித்
திடங்குலைந்து சாந்தித் திறந்தெளிந் தேனே.

அடங்கா அகந்தை யழியுமாறு உள்ளத்திலுற்ற ஞான நோக்கால், நானென்னுங் கன்னிமுனைப் பழிந்து, சாந்தி நிலை தெளிந்தே னெனல்.

135. அன்பான நம்ப னருட்செம் பதத்திலெனக்
கின்பான மோன வியல்விளங்கப் பெற்றதால்,
வன்பா மகந்தை மனக்கன் னிமைமுரண்கெட்
டன்பாக் கரைந்தேன்மெய் யன்புருவாந் தன்னிலே.

ஆண்டவன் பதத்தில் மோனானந்தம் விளங்கப் பெற்றதால், மனக் கன்னிமைத் தடையழிந்து, அவனது அன்புருவில் அன்பாகவே கரைந்தே னெனல்

136. அடக்கமே யோரா வகந்தைமனப் பேதை
மிடுக்கறவென் கன்னிமையின் மேட்டிமையைச் செற்றான்
ஒடுக்கமுறு மோன வுணர்வால் உடையா
னடிக்கீ ழடங்கி யமைதலுற் றேனே.

ஆண்டவன் என்மிடுக்காம் கன்னிமையை யழித்தலும், அவனடிக் கீழ் மோன வுணர்வோடு அடங்கி யமைந்தே னெனல்.

137. ஒன்றியபே ரின்ப வுணர்வாக மோனவருள்
வென்றியா லென்னுள் விசைத்தெழுந்த சிற்பரன்மாட்
டென்றுமொன் றான வியல்விளங்கத் தோற்றொழிந்தேன்
கன்றியமோ கப்பாழ்ங் கடுப்பான கன்னிமையே.

மோனத்தாற் பேரின்ப வுணர்வாக என்னுள் விசைத் தெழுந்த ஆண்டவனிடம் அகந்தைத் திடுக்கான கன்னிமை யழிந்து ஏக நிலை விளங்கப் பெற்றே னெனல்.

138. நயக்கவே தக்கமெய்ஞ் ஞான சொரூபன்
முயக்கமே வாழ்வா முகந்துகொண் டேனுக்
குயக்கமோ வன்றிக் கயக்கமோ வில்லை
மயக்கவகக் கன்னிமனக் கட்டற்ற தாலே.

ஞானசொரூபனை ஆண்டவனோடு சேர்ந்த வாழ்வில் அகங்காரக் கன்னிமைக் கட்டழிந்ததால் வருந்தமோ கலக்கமோ இல்லை தொழிந்த தெனல்.

139. வஞ்ச மயக்கமற மாற்றுங்கண் ணேக்காலென்
னெஞ்சங் கவர்ந்த நிரதிச யானந்த
மஞ்சன் மணாளன் மதர்க்கக் கலத்தலான்
முஞ்சியது நானென்னும் மோகமனக் கன்னிமையே.

கண்ணேக்கால் என்னுள்ளங் கவர்ந்த நிரதிசயானந்த மணாளனின் கலப்பால் அகங்கார மோகக் கன்னிமை யழிந்த தெனல்

(குறள்)

140. உள்ளங் கலந்தவோ ரொள்ளியாற் கியானென்னுங்
கள்ளமனக் கன்னிமைதோற் றேன்.

## கக. தோழி தலைவிக் குரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

141. நாடி யகத்துமெய்ஞ் ஞானப் பிரானொடுநீ
கூடிக் குலாவிக் கொழுங்களிகூர்ந் தாயேபின்
னாடிமற் றேதோ வுறுகணுழக் கின்றுயுன்
மீனடிரண் டற்றவன் வொள்ளியனை யெள்ளியே.

உள்ளத்தில் மெய்ஞ்ஞானப்பிரானோடு கூடி யின்புற்றிருந்தாயே, பின் நீ ஏன் இரண்டற்ற அப்பெருமானை நீங்கி புறமுகத்தில் துன்புறுகின்று யெனல்.

## உ௰. என் மதியீனம் (தலைவி)

(கொச்சகக் கலிப்பா)

142. அருஅப் பெருங்கருணை யாளன்முன் னோர்காற்
கருஅதின் ருற்போற் கடுஞ்சொல் லுரைத்தான் ;
செருஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கும்
உருஅர்போன் றுற்றார் குறிப்பென்றே ரேனே.

குறிப்பு :– செருஅச்சிறு........ ...குறிப்பு :—(திருக்குறள்-1097)
ஓரேன் – அப்பொழுது அறிந்திலேன்.

பெருங்கருணைப்பிரான் ஒருமுறை என்பாற் கடுஞ்சொற் கூறினான். (அது திருக்குறள் 1C97 பாடலின்படி) அன்புள்ளோர் காட்டும் பொய்க்கோபம் என்பதை அப்போது அறியாதவ ளானே னெனல்.

143. மணக்கலுற் றென்னை மகிழ்ந்த மணாளன்
உணக்கலுறு தென்னை யுணர்வொளியா லாட்கொண்
டிணக்கமா வுள்ளபே ரின்பப் பிரான்பாற்
பிணக்குற்றே னென்னிலென் பேதைமைதா
னென்னே.

குறிப்பு : — மணாளனையப் பிரான்பால் எனை இணையும்

என்னை மணந்து அறிவொளியாலாண்டு இணைந்த ஆண்டவன்பால் நான் பிணங்கினேன் என்றால் என் அறிவீனம் என்னே யெனல்.

144. ஓர்தப்பு மில்லா வுடையானைச் சற்றேதா
னேதப்பட் டாற்போ லெயற்பழித்த பேதையேன்
பேதமனக் கற்பனையிற் பேர்ந்தபோ தத்தெளிவால்
ஏதப் பிழையவன்பா லில்லாமை நேர்ந்தேனே.

அப்பழுக்கற்ற என் தலைவனை அறியாமையாற் குறை கூறிய யான் பிறகு அகந்தை ஒழிந்த போது சிந்தித்துப் பிழையற்ற பெருமானை யறிந்து கொண்டேனெனல்.

145. உள்ளமா வுள்ள வுடையானை யள்ளியன்போற்
கள்ள மனத்தாற் கடியலுற்றேன் சுத்தவருள்
வள்ள லடிச்சியேன் வஞ்ச மடமையைக்கண்
டெள்ளி நகைத்தானஃ திப்போதே தேர்ந்தேனே.

குறிப்பு :—அப்போது தேர்ந்திலேன் என்பதாம்

என் உள்ளமேயான ஆண்டவனை என்நாதனென் றறியாது கடிந்த என் மடமையைக் கண்டு அவன் நகைத்தான். நான் அவனுக்கே உரியள் என்பதை அப்போது அறிந்திலே னெனல்.

(வெண்பா)

146. இனிதாக வென்னிதயத் தென்றுமுள்ள மோனத்
தனிநா யகனைத் தணந்தே—அனியாயம்
வெட்கவே தக்க வியாமோகப் புன்புலத்தை
நட்கலுற்றே னென்ன நவை.

மோனமாம் நாயகனை அகன்று இதுகாறும் மோகப் புன்புலத்தில் உழன்றேனே என்று கழிந்ததைக் கிரங்கல்.

147. செம்மாந்து சும்மா திளைத்தலன்றிச் சிற்பரமாம்
பெம்மான் சொரூபவருட் பேரின்பம்—உன்மாதச்
சிந்தையாற் பேதைச் சிறுக்கிநா னூடியகன்
றிந்தனமா வெந்தெரிகின் றேன்.

சும்மாவிருந்து பெம்மானின் சொரூபப் பேரின்பம் துய்ப்பதைவிட்டு, பேதையாகிய நான் பிரிந்து வெந்து எரிகின்றே னெனல்.

148. ஏதா யினுமென் னிதயத்து வாழ்க்கையிலெப்
போதா யினுங்குறைவு புக்கதேல்—வாதாடு
மூர்க்கவகப் பேய்முனைப்பால் மூண்டதன்றி
யாண்டவன்செய்
யாக்க வருட்குறைவா லன்று.

என் வாழ்வில் ஏதேனும் குறைதோன்றுமாயின் அது அகந்தையாலன்றி ஆண்டவனின் அருளின்மையா லல்ல எனல்.

(குறள்)

149. வடிவாக வுள்ளவருள் வள்ளலைநான் பேதை
கொடியா னெனக்குறைப்பட் டேன்.

150. அடியர்பால் வன்கணு லாற்றக் கொடியனென்ற
யானே யறக்கொடி யேன்.

## உக. சிவ ஜீவத் திருமணம்

(வெண்பா)

151. ஆண்டா னருட்சீ ரறிந்தடங்கும் மோனவொளி
யீண்டலா லுள்ளத் தியல்பாக—மூண்ட
சிவானுபவ வாழ்வே சிவத்தோ டெனக்கு
விவாகமண மங்கலமாம் பேறு.

ஆண்டவனின் மோனவொளி என் உள்ளத்திற் சேரவே, அதனல் மூண்ட சிவானுபவமே என் விவாகமண மங்கலப் பேருகு மெனல்

152. பாரா சரரமணன் பார வனுபூதிக்
கோரா சயமா வொளிர்பதத்தான்—பேராசை
வாரியா வென்னை யடுத்தவருட் காவலனே
டோரியல்வாழ் வுற்ற துணர்வு.

ஞானனுபூதிக் கிருப்பிடமான பராசர ரமணன் என்னைப் பேராசை வாரியா யணைத்தலால் அவனேடு ஏக வாழ் வுற்றே னெனல்.

153. பழிப்புற்ற பாசப் படரகற்றித் தன்பேர்
விழுப்புகழா லோங்க விளங்கி—விழுப்பமுற
வென்னகத்து நீங்கா தினிதுகொலு வீற்றிருக்கும்
மன்னவற்கே மாலையிட் டேன்.

என் பாசமறுத்துப் புகழோங்கி, என்னகத்து நீங்காது கொலுவீற்றிருக்கும் மன்னவனுக்கே மாலையிட்டே னெனல்.

154. மாலையிட்டே னந்த மணாளனருள் வல்லபமே
கோலியிட்டேன் கற்புக்கோர் வேலியாத்—தாலிகட்டிக்
கொண்டவருட் கொற்றக் குடைமன்னன்
றன்பெருங்கோப்
பெண்டெனச்சொல் பேறுபெற் றேன்.

தன்னருளே என்கற்புக்கு வேலியாகத் தாலிகட்டிக் கொண்ட ஆண்டவனின் பெருங்கோப் பெண்டுநான் என்று சொல்லப்படும் பேறு பெற்றே னெனல்

155. அபலையாம் பேதை யடிச்சியேன் புத்திச்
சபலமறத் தன்னெடுநா னென்ருய்—விபவமுறு

மோனனு பூதி முகப்பத்தன் னின்பவருள்
வானாக வென்னைமணந் தான்.

ஆண்டவன் தன்னோடு தான் ஒன்றுபட்டு இன்ப அருளாகாயமாய் என்னை மணந்தான் எனல்

156. துறக்கலரு சொந்த சொரூபன் றனைநான்
மறக்கலரி தாக மணந்தான்—உறக்கவிழிப்
பற்று விளங்கு மதீதத் துரீயவெளிப்
பற்றான மோனப் பதத்து.

துயிலும் விழிப்புமற்ற துரியவெளியாம மோனநிலையில் ஆன்ம சொரூபத்தை நான் மறக்கமுடியாதவாறு ஆண்டவன் என்னை மணந்தானெனல்.

157. ஆசையாம் பாசந்தீ ரான்மானு பூதிக்கோ
ராசயமா நின்ற வருட்பதத்தான்—தேசியல்பே
ராசைமய லூட்டி யடிச்சியைமிக் கைக்கியமா
நேசமணம் பூண்டா னகத்து.

ஆண்டவன் தன்னருட பதத்தில் இவ்வடிச்சிக்கு ஆசைமய லூட்டி ஐக்கியமாக மணம் பூண்டான் எனல்.

158. மணாளனா வென்னுளத்தே மன்னினன் சாந்த
குணாளனந் தெய்வருட் கோமான்—வினாளரெலாங்
கண்டு களிக்குங் கனசொருபன் காதல்கூர்
பெண்டுநா னானேன் பெரிது.

கடவுளர் கண்டுகளிக்கும் சொருபனும், சாந்த குணாளனுமான ரமணன் என்னுள்ளத்தில் மணாளனாகச் சேர்ந்தான். நானும் அவனது காதற் பெண்டானேனெனல்

159. இதய வெளியூ டிருந்தொளிர்பே ரின்ப
நிதியமா நின்ற சொரூபன்—பதியாக்
கிடைத்தலால் வாழ்க்கைக் கிளர்ச்சியுற முற்றப்
படைத்தே னருட்பாக் கியம்.

பேரின்ப நிதியான ஆண்டவனைப் பதியாய்க் கிடைக்கப்பெற்றதால் அருள் வாழ்க்கைப் பாக்கிய முற்றேனெனல்.

160. பிணிப்புண்டே னேழ்பிறப்பும் பேரருளா லாறற
விணிப்புண் டிறைவனடிக் கேநான்
—துணைப்பெண்டா
யாண்டவன் வாழ்க்கையூ டாசைப் பிணைவாநா
னீண்டலா லுற்றே னிசை.

ஆண்டவனாடிக்கே ஏழ்பிறப்பும் நான் அருளாற பிணைத்திணைக்கப் பெற்றேன். அவனுக்கே இனிதரு துணைப்பெண்டாகிப் பெருமை யுற்றேனெனல்

161. மோன வருட்பரமாய் மோகங் கடந்தொளிர்மெய்ஞ்
ஞான சொருபகுரு நாதனை நான்—ஈனமறக்
கொண்டிதய மெல்லணையிற் கூடிக் குலாவுமகிழ்
கண்டுகொண்டே னன்பு கலந்து.

மோனஞான சொரூப குருநாதனை இதய மென்மலரணையில் பக்தியாற் கூடிக் கலந்து குலாவும் பேரின்பத்தைக் கண்டுகொண்டேனெனல்.

162 காட்சியால் யாவுங் கடந்தசிவக் கேவலமா
யாட்சியா னென்னை மணந்துகொண்டான்
—ஆட்சியிலே
அன்னான் சொரூப வருள்விலாசத்தையன்றி
என்னான் புலப்படக்காண் பேன்.

சிவக் கேவலனான ஆண்டவன் என்னை மணந்து கொண்டான், அவனருளாட்சியில் அவன் சொரூபத்தைத் தவிர 'நான்' என்று யாரையும் காணேனெனல.

163 பாழ்க்கலுற்ற வென்னைப் பகவன் சொரூபவருள்
வாழ்க்கையுற நன்கு மணந்துகொண்டான்—
ஊழ்க்கையுரு
துள்ளங் கிளர்சொருப மோனமா முண்மைநலத்
துள்ளன்பு பற்றிற் றுயிர்க்கு.

பாழான என்னைப் பகவான் சொரூப மணம் பூண்டான். அதனால் என்னுயிர்க்குச் சொரூப மோனமாகிய பெருநலன் உண்டாயிற்றெனல்.

164. பரசொருப நாட்டம் பதிந்த மனத்தால்
அரசமாப் போக வகிலம்—சுரசமா
ஏக சொருப விருப்புணர்வே பற்றியருட்
போகம் புணர்ந்த தெனக்கு.

எனக்குச் சொருப நாட்டத்தால் உலகருசியற்று, சொருப விருப் புணர்வு மேலோங்கி, அருட்போகம் புணர்ந்த தெனல்.

(கொச்சகக் கலிப்பா)

165. உண்ணனவா வுற்ற வொளியா வளர்சொருபக்
கண்ணனையே முற்றமுற்றக் காதலித்து மாலையிட்டேன்
திண்ணனவா வுற்ற செருக்கான கன்னிமையை
அண்ணலழித் தாண்டா னருட்செம் பதத்துக்கே.

துரியவொளியான ஆண்டவனையே காதலித்து மாலையிட்டேன்; அவன் என் செருக்கான கன்னிமை யழித்தாண்டா னெனல்.

166. கன்றி யெழுந்தவகக் கன்னிமையை மாற்றியகத்
தோன்றியசற் போத வுரம்படநன் காண்டதொடு
மன்றறிய வந்துமண மாலையுமேற் றுன்பதத்தில்
என்றுமொன் றாக விருக்கலுற்றேற் கென்குறையே.

குறிப்பு: அகக் கன்னிமை—அகங்காரமாகிய கன்னிமை. அகங்காரக் கன்னிமையை மாற்றிச் சற்போதந் தந்ததோடு, யாவரு மறிய மணமாலையும் ஏற்ற ஆண்டானடியில் ஏகமாயிருக்கும் எனக்கு எக்குறையு மில்லை யெனல்,

(குறள்)

167. மாணவே யென்னை வரித்தான் சொருபமாப்
பேணவே தக்க பிரான்.

168. நயக்கவெனக் குள்ளான்மெய்ஞ் ஞான சொருபன்
மயக்கமற வென்னை மணந்து.

## உஉ. மங்கல நாண் பூட்டுதல்

(வெண்பா)

169. துப்புறுமெய்ஞ் ஞான சொரூபத்தே தெய்வவருட்
கற்புறநான் மங்கலநாண் கட்டினன்—சிற்பரமா
மோனகுரு வான முனீந்திரனென் கண்டத்தே
நானுகர வுண்மை நலன்.

மோனகுருவான முனீந்திரன் மெய்ஞ்ஞான சொரூபத்தில் நான் கற்புற்று மெய்ந்நலனுற என் கழுத்தில் மங்கல நாண் பூட்டினனெனல்.

170. வரோதயனு மங்கலநாண் பூட்டியென்னை யாண்டான்
ஓரேதெய்வ மாகவுளத் துள்ளான்—விரோதமகன்
றொத்த சமரசமா முண்மைஞா னனுபவப்
புத்தமுதம் பொங்கப் பொலிந்து.

என் ஒரே தெய்வமான ரமணவரன், இருமை யற்ற ஞானனுபவப் புத்தமுதம் பொங்குமாறு எனக்கு மங்கல நாண் பூட்டி யாட்கொண்டா னெனல்.

171. அமங்களமங் கில்லா வருண்மங் கலநாண்
சுமங்களமெய்ஞ் ஞான சொரூபன் — ரமங்கமொன்றப்
பெய்ததா லென்கழுத்திற் பேரின்ப வாழ்வரசாச்
செய்தா னகத்தே செறித்து.

ஞான சொரூபனும் ஆண்டவன் என் கழுத்தில் அருள்மங்கல நாண் பூட்டியதால் அகத்தே பேரின்ப வரசாட்சி எய்தினெ றளல்.

(கொச்சகக் கலிப்பா)

172. மங்கலநாண் பூட்டி மனைவியா வேற்றுக்கொண்
டங்கணு லென்னையடிக் காண்டபிரான்
பொன்னருட்சீர்
பொங்கலா லுள்ளத்திற் புத்தமுத போகமாத்
தங்க நிரம்பியது சச்சிதா னந்தமே.

---

குறிப்பு : தங்க நிரம்பியது—நிரம்பத் தங்கியது

கண்ணேக்கால் ஆட்கொண்ட பெருமான் என்னை மங்கலநாண் பூட்டி மனைவியாய்க் கொண்டதால் உள்ளத்தில் சச்சிதானந்தமே புத்தமுத போகமாய் வாய்த்த தெனல்

173. ஒளியா ருள்ளேபோல் ஓவா வொளிவெளியாக்
கள்ளியே னுள்ளுங் கரவா தொளிர்சொருபன்
வள்ளிமைசேர் தெய்வமண மங்கலநாண் பூட்டலாற்
றெள்ளியவாழ் வான சிவத்துவஞ்சேர் வுற்றதே.

குறிப்பு :— உளளேபோல — உள்ளத்திற் போல், உள்ளும் — உள்ளத்திலும்.

மேலோ ருள்ளத்திற் போலவே கள்ளியே னுள்ளத்தும் விளங்கும் ஆண்டவன் எனக்கு மங்கலநாண் பூட்டியதால் சிவத்துவம் சேர்ந்த தெனல்.

174. இதுகா ணுனக்குறிக் கேற்றதெனா ஆண்டான்
புதுநூ தனவருட்செம் பொற்றாலி பூட்டி
வதுவாக்கிக் கொண்டமண மங்கலத்தால் வாடா
மதுவார் நறுமணப்பூ மாலையா னேனே.

அருட்பொற்றாலி பூட்டி ஆண்டவன் மணந்துகொண்டதால் வாடா மணமாலை யானேனெனத் தலைவி மகிழ்தல்.

175. கன்றலுற்ற மோகக் கருத்தால் உடலுருநா
னென்றலுற்ற போதையே நோக்கமறக் கண்ணோக்கா
லொன்றலுற்ற றுள்ளத் துணர்வுருவா, ஊரார்முன்
மன்றறிய வந்துமண மாலையேற் றண்டவனே.

“உடலே நான் என்றிருந்த ஜீவபோதையை ஆண்டவன் கண்ணோக்கால் உள்ளத்திற் கலந்து, ஊரறிய வந்துதன் மணமாலையையும் ஏற்றுக் கொண்டா னெனல்.

176. என்றுமென் னுள்ளத் தினியனா யுள்ளவிறை
மன்றறிய வந்தென் மணமாலை சூடினன் ;
ஒன்றிரண் டென்னு முறைகடந்த மோனவுணா
வொன்ற விளங்கிற் றுளப்பாட்டுத் தன்மையே.

எனக்கினியனாய் எப்போதும் என் உள்ளத்திலுள்ள ஆண்டவன் யாவருமறிய வந்து என் மணமாலையை ஏற்றுக்கொண்டான். அதனால், கடந்த மோன வுணர்வு விளங்கிற் றெனல்.

177. பொக்கமறப் பொங்கும் பூரண சொருபவருட்
சொக்கனுக்கே முற்றான சொந்தமா மாலையிட்டேற்
கைக்கவுணர் வானமோ னனுபவச் சீர்விளங்கத்
தொக்கபெரு வாழ்வு சுபாவமா நீடியதே.

ஆன்மஸ்புரண சொருபனுக்கே நான் மாலையிட்டதால் ஐக்கிய உணர்வான மோனம் விளங்கி, பெருவாழ்வு சகஜ மாயிற் றெனல்

## உரு இல்லா ளானேன்

(வெண்பா)

178 ஒருவனே யாருயிருக் குற்றதுணை யுளளக
கருவகமென் ருர்க்குங் கடவுள் — திருவருளை
பற்றிநா னவ்வகத்தின் பற்றுவிடாப் பான்மையால்
இற்றுணையா யூற்றே னிறைக்கு.

உள்ளத்தில் நான் நான் என்று நடமிடும் கடவுளையே பற்றி நிற்ப தால் நான் அவனது இல்லா ளானேன் எனல்.

(கொச்சகக் கலிப்பா)

179. ஆருயிருக் கோருயிரா யாண்ட வருட்பிரான்
சீரியவாழ் வான சிவானுபவஞ் சேரவெனக்
கோரியல்பா வென்றோ டுணர்விற் கலந்தலுற்ருன்
பாரியையா மோனப் பரமபதம் பெற்றேனே.

---

குறிப்பு —பாரியையாய் —மனைவியாக என்பதேயன்றி, உலகம் இயையாத எனவும் பொருள.

என் உயிருக்குயிரான ஆண்டவன் எனக்குச் சிவானுபவ முண்டாகு மாறு என்னோடு கலந்தான் அவனது பாரியையாகிப் பரமோனப் பதம் பெற்றே னெனல்.

180. எள்ள வொணுத வியற்சிற் பரசொருப
வள்ளியா னுக்குரிய வாழ்க்கைத் துணைவியாக்
கள்ளமறு சுத்தவருட் கற்பியல்பூண் டுள்ளத்து
நள்ளுறுபே ரின்பமெழ நல்லறஞ்செய் கின்றேனே

சொருப ஞான வள்ளலான ஆண்டவனுக்குரிய வாழ்க்கைத் துணை வியாக அருட் கற்புப்பூண்டு பேரின்ப நல்லறம் நடாத்துகின்றே னெனல்.

## உச. அறக் கற்பு

(வெண்பா)

181 தானச்சி யென்னைத் தலைப்பெய்து முன்னமே
நானெச்சி லாக நலனுண்டான் — ஈனச்சொல்
லாயினுந்தா னாகவெனக் கம்மே சிவரமண
நாயகனுக் கேயுரியேன் நான்

ஆண்டவன் என்னை முறையாய் மணக்கு முன்பே நான் அவனாற் சுவைக்கப்பட்ட எச்சி லானேன். இது ஈனச் சொல்லாயினும் ஆகுக; நான் அச் சிவரமணனுக்கே உரியே னெனல்.

(கொச்சகக் கலிப்பா)

182 பிரானுக்கே யாகப் பிறந்தேன் உலகைத்
துராலுக்கொப் பாகத் துறந்தேன் உணர்வில்
விராவுற்ற சுத்தவருள் வெள்ளஞ்சீ பாதப்
பராகத்தில் வண்டாப் படிந்தொளிர்கின் றேனே.

---

குறிப்பு — துரால்—செத்தை; விராவுதல்—கலத்தல்; பராகம்—மகரந்தம்

பிரானுக்காகவே பிறந்தேன். உலகைத் தூசியாத் துறந்தேன். அவன் திருவடிமலரில் வண்டாக அயர்ந்தே னெனல்.

183 கள்ளத்தா லென்னைக் கவர்ந்துகொண்டு சுத்தவருள்
வெள்ளத்தே னாக விளைந்ததன்றி வேறறவென்
னுள்ளத்தே நாளு முயிர்க்குயிரா வொன்றலுற்ற
வள்ளற்கே யென்னை மடுத்துவாழ் கின்றேனே.

கள்ளத்தால் என்னைக் கவர்ந்ததோடு இரண்டற என்னுள்ளத்தில் உயிர்க்குயிராகவும் சேர்ந்த வள்ளலுக்கே என்னைக் கொடுத்து வாழ்கின்றே னெனல்.

(வெண்பா)

184. கண்ணாள னென்று லவனேமெய்க் கண்ணாளன்
விண்ணுளும் பற்பல் விபுதருள்ளும் — பெண்டா
வெனையடையத் தக்கா ரெவருமில்லை நானுந்
தனையடைந்து தன்னியளா னேன்.

ஆண்ட ரமண னொருவனே என் மெய்க் கண்ணாளன்; தேவமேலோர் எவருங்கூட என்னைப் பெண்டா யடையத் தக்காரல்லர். நானும் அவனையே யடைந்து தன்னிய ளானே னெனல்

185. அவனுக்கே நானடிமை யானே னபலே
யிவளுக் கவனே யிறைவன்—கவளக்
களிற்று மதமடங்கக் காணரிமா நோக்கால்
வெளிற்றுமன மாய்த்தான் விழித்து.

நான் அவனுக்கே அடிமை; எனக்கு அவனே இறைவன்; யானையைக் கொல்லும் சிங்க நோக்கால் என் மனத்தை இறைவன் நோக்கி யழித்தான் எனல்.

186. உள்ளொளியா நின்ற வொருத்தனுக்கே வாழக்கைப்பட்
டுள்ளுணர்வு பூண்ட வுறவாலே—துள்ளுமனப்
பாசக் கலக்கமாம் பாழ்விடயப் பற்றுவிட்டுத்
தேசளவா நின்றேன் சிவத்து

உள்ளொளியான ஒருவனுக்கே வாழ்க்கைப்பட்டதால், விடயப் பற்றற்றுச் சிவ வொளியாய் நின்றே னெனல்.

187 இன்பக் கொழுந னெனக்குச் சிவரமணன்
அன்புப் பிரியை யவற்குநான்—இன்பப்பே
ரன்புமய மாக வடிச்சியோ டொன்றிறை
னின்பமய மாவென் னியல்.

எனக்கு இன்பக் கொழுநன் சிவரமணன்; நான் அவனுக்கு அன்புப் பிரியை; என்னியல்பே பேரின்ப மயமாகுமாறு அவன் என்னை அன்புமயமாக அணைந்தான் எனல்.

188. கற்பனையற் றேயவருட் கண்ணொளியாற் கைவல்யக்
கற்பளித்த வாண்டான் கழலுக்கே—கற்புக்
கடம்பூண்ட பத்தினியாக் காதலுற்று வாழுந்
திடம்பூண்ட துள்ளந் தெளிந்து.

கண்ணொளியாற் கைவல்யக் கற்பை யருளிய ஆண்டவனுக்கே கற்புக்கடம் பூண்ட பத்தினியாய் வாழும் திடஞானம் உண்டாயிற் றெனல்.

189 பெட்புறவந் தாண்ட பிரான்பதத்துக் கன்றியொரு
நட்புறவா மோக நசையிலேன் — நட்புறுமெய்ச்
சிற்பரமா மோனச் சிவபதமே ஜீவனமாக்
கற்புறவாழ் கின்றேன் கலந்து

ஆட்கொண்ட பிரானுடையைத் தவிர வேறொரு மோக நசையும் எனக்கில்லை. மோனச் சிவபதமே ஜீவனமாம் கற்புடன் அவனைக் கலந்து வாழ்கின்றே னெனல்.

190. அறிவிலே யென்னையணைந் தாண்டவனுக் கன்றிற்
பிறிவிலாக் கற்புநிலைப் பெண்டாய் — வெறிசேர்
புலப்பகையை மாற்றியருட் பூரணமாம் மோன
நிலப்பரப்பில் வாழ்வுறுமென் னெஞ்சு.

அறிவில் அணைந்த ஆண்டவனுக்குக் கற்புப் பெண்டான என் மனம் புலன்வழிப் போகாமல் பூரண மோனத்தில் நிலைத்து வாழு மெனல்.

191, தற்பரமாந் தன்னைத் தவிர்த்துநோக் காதவருட்
கற்பளித்தா னென்னிறைவன் றன்கழற்கே — கற்புக்
கரசியா வென்னை யருட்பதத்துக் காண்ட
பரிசினல் வாழ்ந்தேன் பரத்து.

தன்னைத்தவிர அன்னியம் நோக்காத அருட்கற்பளித் தாட்கொண்டா னுதலால் கற்பரசியாக பரத்தில் வாழ்வுற்றே னெனல்.

192. காந்தமா வென்னுட் கலந்தான் கடவுளா
மீந்தியல்பா நின்ற விழுப்பொருளான் — சாந்தமய
சம்பத்தா வாய்ந்த சதாசா ரியரமணத்
தம்பத்தே நான்றனையுண் டேன்.

கடவுளா நின்ற அவன் என்னுள் காந்தமாகக் கலந்தான். சாந்த நிதியாக எனக்கு வாய்ந்த குருரமணத் தம்பத்திலேயே நான் கட்டப்பட்டே னெனல்.

193. குணமுளோ னைகமுழுக் குற்றமுளோ னை
மணஞ்செய்து கொண்ட மணாளன் — மணம்பூண்ட
கொண்கன் குருதெய்வம் மாதா பிதாவென்போற்
பெண்களுக்கு மற்றும் பிற.

மணந்த மணாளன் துணைவாவோனே நற்றமனாவோனே அத்தகையனாயினும் என் போன்ற பெண்களுக்கு மாதா, பிதா, குரு, தெய்வம் யாவும் அவனே யாமெனல்.

194. கண்கண்ட தெய்வமாக் கண்டதுநா னென்னைத்தன்
பெண்கொண்ட ஞானப் பிரானையே —விண்கண்ட
மாட்சியா லென்னை மணந்தான் சொரூபவருட்
காட்சியே யென்சற் கதி.

* பெண்கொண்ட—பெண்டாகக்கொண்ட

என்னைப் பெண்கொண்ட பிரானே என் கண் கண்ட தெய்வமாகும்; என்னை மணந்த அவன் சொரூபாகாரக் காட்சியே என் சற்கதி யாகும் எனல்.

195. பொற்புறுசற் பத்தி புகட்டினான் பொற்பதமே
கற்புரிமை பூண்டு கலந்துற்றேன் — அற்புறுமவ்
வாண்டவனே யன்றியெனக் கன்னியமாந் தெய்வ
மொன்று
காண்டலிலேன் றானே கதி.

சற்பத்தி புகட்டிய என் ஆண்டவன் பாதத்திற்கே கற்புரிமை பூண்டு கலந்தேன். அவ்வன்பனைத் தவிர அன்னிய தெய்வம் யாரையும் கதியாகக்காணே னெனல்.

196 சொற்பரமன் ஏகச் சுடர்சொரூப மோனவருள்
வெற்பகமா யென்மதியை வென்றுகொண்டான்—
கற்புற்
றடியவளா வாண்டா னருட்கழலுக் கேநான்
படிகடவாப் பத்தினியா னேன்.

மோன அருண் மலையாக என்னை வெற்றி கொண்ட ஆண்டான் கழலுக்குக் கற்புற்றுப் படிகடவாப் பத்தினியானே னெனல்.

197. எனக்குவாழ் வாக விதயத்தி லுள்ள
தனக்கே சதியாத் தழைத்தேன் —மனக்கேதம்
கூட்டுவதா மோகமறக் கூடினே னாண்டவன்மெய்த்
தாட்டுணையா மோர்சற் கதி.

இதயத்தில் என் வாழ்வாகவுள்ள ஆண்டவனுக்கே சதியாகி, மோக மறக்கூடி, அவன் திருவடியே சற்கதியாகப் பெற்றேனெனல்.

198. உற்றதுணை யாக வுடையா னுளமுறையப்
பெற்றவெனக் கேனோ பிறருதவி - சுற்றமெனக்
கெல்லாமா வாண்டா னிடம்பொருளோ டேவல்மற்
றெல்லா மவனே யெனக்கு.

எனக்கு என் உடையானே யாவுமாய் உள்ளத்தில் உற்றதுணையாய் உறைவதால் பிறர் உதவி வேண்டேன் எனல்

199. எனக்கேன் பிறரென்னைப்பே ரின்புருவா வாண்டான்
றனக்கேநா னட்பட் டொழிந்தேன் - தனக்கேவல்
செய்துநான் சாந்துணையுஞ் சாவாச் சிவபதத்தை
எய்துவே னண்டா னிடத்து.

என்னை ஆண்டவனுக்கே ஆட்பட்டொழிந்தேன. நான் சாகும் வரை அவனுக்கே ஏவல்செய்து அவன்பத மெய்துவேனே தவிர பிறர் எனக்கு வேண்டா மெனல்

200. அவனே யெனக்கடைய வேண்டுவதொன் றன்றி
அவனளிக்கும் மற்றெதுவு மன்றே - அவனை
அடையநான் பெற்றேற் கசிலமுமவ் வென்னால்
அடையத்தாம் பெற்றனவே யாம்.

அவனே எனக்கு வேண்டுமன்றி அவனளிக்கும் எப்பொருளு மல்ல; யான் அவனை அடைவதே அனைத்தையும் அடையப் பெற்றதாகும் எனல்.

201. தன்னுட் பரமாகத் தானே சுடர்சொருபன்
மன்னுயிருக் கின்னுயிரா வைகுவோன் - என்னுட்
குலவுசிவ ஞானக் கொழுந்தாக வுள்ளான்
தலைவனென் னுருயிர்க்குந் தான்.

மன்னுயிர்க்கு இன்னுயிரான ஆண்டவன் என்னுள் சிவஞானக் கொழுந்தாகவும் என் உயிர்க்குத் தலைவனாகவும் உள்ளானெனல்.

(கொச்சகக் கலிப்பா)

202. பெம்மா னெனக்குடல் பெம்மா னெனக்குயிர்
பெம்மா னெனக்குக்கண் பெம்மான் செவியெனக்குப்
பெம்மா னெனக்குளம் பெம்மா னெனக்குணர்வு
பெம்மா னெனக்குமற் றெல்லாப் பிறங்கலுமே.

எனக்கு யாவும் என் பெருமானே யெனல்.

203. சொற்பாற் படாத சொரூபஞா னானுபவப்
பொற்பாற் பொலிவுறவென் புந்தியிற்புக்
காண்டவற்குக்
கற்புக் கடம்பூண்ட காதலாற் றொண்டுபட்டுத்
தப்பாத் தவநியம சாதனை நான் செய்வேனே.

சொரூப ஞானந்துலங்க ஆட்கொண்ட தலைவற்குக் கற்புக்கடம் பூண்டு, தொண்டு பட்டுத் தவறாத தவநியம சாதனை செய்வேனெனல்.

204. சிற்பரமாத் துன்று சிவானுபவச் சீர்மையளித்
தற்பமடப் பேதையைத்தன் னாசை மணாட்டியாப்
பொற்புறநன் காண்டவருட் புண்ணியன்றுட்
கேழ்பிறப்புங்
கற்பறம்பூண் டேன்காண் கசிந்துருகு மன்பாலே.

அற்பப் பேதையா மெனக்குச் சிவானுபவ மளித்துத் தன் ஆசை மணாட்டியாக ஆட்கொண்ட தலைவனுக்கு எப்பிறப்பும் கற்பறம் பூண்டே னெனல்.

205. மறக்க வொணாதவியல் வாலறிவா னுண்மை
சிறக்க வுணர்ந்தேன் செருக்கற் றொழிந்தேன்
துறக்க வொணாத சொரூபமா வுள்ளத்
தறக்கற் புடையேன்மெய் யன்புணர் வாலே.

சொரூப பக்தியால் பிரமாதமற்ற ஞான முணர்ந்தேன், செருக்கற்றேன்; நீங்காச் சொரூப நிஷ்டையே கற்பு அறமாக உடையே னெனல்.

206. பூண்ட வருட்பொலிவாற் பொங்கவென் னுள்ளம்புக்
காண்டவனுக் கன்றிநா னார்க்கு முரியளல்லேன்;
காண்டவரு மோனக் கடவுட்பே ரின்பவுணர்
வீண்டலுற வாண்டவனை யின்றி யமையேனே.

நான் ஆண்டவனுக் கன்றி யாருக்கும் உரியவளல்ல: கடவுட் பேரின்பமும் அவனையன்றி எனக்கு வேறில்லை யெனல்.

207. எம்பெருமான் றன்னடிக்கே யானுரிமை யன்றிமற்
றிம்பரோ வும்பரோ யார்க்கு முரிமையல்லேன்;
செம்பரமாத் துன்றுசிவச் சிற்பரயோ கங்கிளர்வுற்
றம்பரமா வாண்டவனோ டைக்கியமா வுள்ளேனே.

வேறு யார்க்கு மின்றி என்னை ஆண்ட எம்பிரானுக்கே நான் உரியளாகி, பரசிவ யோகங் கிளர்வுற்று அவனோடு ஐக்கியமா யிருக்கின்றே னெனல்.

208. பாதமே சற்கதியாப் பற்றினோர் பாழ்படா
தேதமறக் காக்கு மியல்பான சுத்தவருட்
காதலா லென்னைக் கடிமணம்பூண் டாண்டபிரான்
மீதலா லில்லை விருப்பெனக்குச் சற்றுமே.

அடைந்தோரைக் காக்கும் கருணைக் காதலால் என்னை மணம் பூண்ட ஆண்டவன் மேலன்றி வேறெதிலும் விருப்பில்லை யெனல்.

209. நன்பான மோன நயப்பா வகங்கிளர்மெய்
யன்பா வறிவா வவிர்சொருபக் காமர்பே
ரின்பா விதயத் திதயமாய் நானான
நம்பானை யன்றி நயக்கவெனக் கொன்றுமின்றே.

---

குறிப்பு:—நம்பான்—நம்பன்.

மோனமாய், அன்பாய், அறிவாய், சொரூப அழகாய், பேரின்பமாய், இதயத்தி னிதயமாய், நானே யான ஆண்டவனைத் தவிர வேறு விருப்பமில்லை யெனல்.

210. படையாக வுற்றபசு பாசக் குழாமாந்
தடையோட வெற்றித் தடுத்தாண்ட வாற்றால்
நடையா லுயர்ந்தமெய்ஞ் ஞானப் பிரானு
முடையானோ டன்றிமற் றோருறவில் லேனே.

---

குறிப்பு: நடை—ஞானசாரம்

பசு பாசத் தடையறுத்துத் தடுத்தாண்ட நாதா நாயகனைத் தவிர மற்ற யாரிடமும் உறவில்லை யெனல்.

211 உண்ணா ரமுதவுணர் வூறியென் னுள்ளத்திற்
கண்ணா லெனைக் கலந்த கண்ணாளன் றந்தவருள்
பண்ணாதின் னன்பாற் பரந்தாமங் கண்டலால்
எண்ணேனி னிநான்மற் றெந்த நலனுமே.

என்னுள்ளத்திற் கண்ணூற் கலந்த கண்ணாளன் அருளாற் பரந்தாமங் காண்பதால் வேறு எந்த நலமும் வேண்டே னெனல்.

212. சுவைப்புறுபே ரின்பவருட் சொக்கனைச்சார் வுற்றேன்
உவப்ப வெனக்கினிமற் றென்றுநான் வேண்டேன்
தவப்பயனா வுள்ளத்திற் சாரக் கிடைத்தேன்
சிவப்பழமாத் தித்திக்குஞ் செஞ்சே வடியே.

என் தவப் பயனாகப் பெற்ற அருட் சொக்கனது திருவடியே தித்திக்குஞ் சிவப்பழமாவதால் வேறு நலன் வேண்டே னெனல்.

213. பல்லூர் களிலும் பயில்பரமன் றன்பரிந்து
நல்லூரா வென்மனமே நள்ளலுற்றான் சிந்தையால்
எல்லேயென் சோபையிழந் தெல்லா
மறந்தொழிந்தேன்
கல்லே னவன்சொருபக் கல்வியன்றி யாதுமே.

எல்லையற்ற தலத்துமுள்ள இறைவன் என்னுள்ளத்தில் எழுந்தருளவே அவனது பானத்தால் எல்லாக் கல்வியும் மறந்தேன் அவன் சொரூபக்கல்வியைத் தவிர பிறவற்றைக் கல்லே னெனல்.

214. பொய்ம்மா லகன்றெரியப் பொங்கு கடாட்சத்தாற்
சும்மா சொரூப சுவானுபவந் தேக்கவெனக்
கம்மா னருளினா னதலால், அந்தவருட்
பெம்மானை யன்றிப் பிறதெய்வம் பேணேனே.

ஆண்டவன் தன் கடாக்ஷத்தால் எனக்குச் சொருபானுபவந் தந்ததால் அவனைத் தவிர வேறு தெய்வம் பேணே னெனல்

215. காண்டலரு சுத்தவருட் கைவல்ய பூமியா
மூண்ட சொரூப முகவிலா சப்பதத்து
ளண்ட வகத்திலெனக் கின்பமெழப் பொங்குவித்த
வாண்டவனை யின்றி யமையாதென் னுருயிரே.

என்னுள்ளத்திற் கைவல்ய பூமியாக மூண்ட சொரூபப் பதத்தில் எனக்கு இன்பம் பொங்குவித்த ஆண்டவனை என்னுயிருக் கின்றி யமையாதவ னெனல்.

(குறள்)

216. ஆண்டவனே போலவெனக் காத்தரிலர்; ஆன்மாவா
வாண்டவனே யென்னு ருயிர்.

217. உடையானுக் கேநா னுரியளா வுள்ளத்
தடையலுற்ற தோர்மெய் யறிவு.

218. இன்பவருள் வாழ்வா விதயத் தொளிர்சொருப
நம்பனெனக் கெல்லா நலன்.

219. நல்ல சொருபமெய்ஞ் ஞானப் பிரானொடன்றி
யில்லை யெனக்கோ ரியைபு.

## உரு. ஆண்டவன் முன்னிலையிற் றலைவி முறையீடு

(கொச்சகக் கலிப்பா)

220. அன்னியங்க ளெல்லா மகற்றி யுனையேநம்
பென்னைநீ சற்று மிகவா திதயத்து
மன்னவே வாலறிவா வாழ்திகண்டாய் மோகமனக்
கன்னியா மென்னையருட் கன்னாலம் பூண்டோயே.

குறிப்பு : நம்பென்னை — நம்புமென்னை

உன்பால் மோகமுற்ற கன்னியாகிய என்னை மணந்த ஆண்டவனே, அனைத்தையுந் துறந்து உன்னையே நம்பிய என்னை நீங்காது என் உள்ளத்தில் வாழ்வாயாக.

(குறள்)

220-a. பின்னமற்ற வத்துவிதப் பெம்மான் ! பிரிக்கவொணு
துன்னொடெனக் குள்ள வுறவு.

220-b உன்னெடெனக் குள்ளதோ ருண்மைப்
பொருத்தமுணர்ந்
துன்னெடு நா னென்றலுற் றேன்.

உகூ. யார் என்சொல்லின் என்?

(கொசசகக் கலிப்பா)

221. இன்னினிநா வென்னகம்புக் கென்னெடுதா
னென்றலுற்ற
நன்னலஞ்சேர் சுத்தமெய்ஞ் ஞான சொரூபன்பாற்
பின்னலுற்ற காதலாற் பெண்மைநலந்
தோற்மொழிந்தேன்
என்னியல்கண் டன்னையுமே யேசலுற்றுளென்னையே.

என்னுள்ளத்தில் நான் தானுகக் கலந்த ஆண்டவனிடம் என் பெண்மை நலம் தோற்ற என்னை என் தாயும் ஏசுகின்ருளெனல்.

222. துரிய சொரூபவருட் சொக்கனுக்கு நான்முற்
றுரியளாய் மெய்யன் புழுவலாற் சற்றும்
பிரிய வொணுதபெரும் பித்துக்கொண் டேனைப்
பிரியம்யார் பாலுமிலாப் பிச்சியென் பாரே.

---

குறிப்பு : உழுவலால் உரியளாய் எனக் கூட்டுக.

ஆண்டவனுக்கே முற்றும் உரியவளாய் அன்பு பூண்ட என்னை உலகோர், யாரிடமும் பிரியமில்லாப் பிச்சி என்பர் எனல்.

223. இம்மா நிலத்திலெனக் கெச்சுவையுங் கைச்சொழியப்
பெம்மான் சொரூபவருட் பேரின்பந் துய்த்தலால்
விம்மிதமாய் மெய்மறந்து வேற்றுணர்வுந்
தோற்றொழிந்தேன்
இம்மா நிலத்திலென்னை யாவரெவ்வா றேசிலென்னே.

ஆண்டவனேடு பேரின்பந்துய்ப்பதால் பிற யாவும் மறந்தேன். அதனல் உலகத்தார் யார் என்னை எவ்வாறு ஏசினுமென்ன வெனல்

## உஎ. கலந்தான்

(வெண்பா)

224. விண்ணுளோர் காணா விழுப்பொருளான் பேதைமடப
பெண்ணொருத்தி காணப் பெரிதுவந்தே — மண்ணி
லருளுருவாத் தோன்றி யபயாத் துவிதப்
பொருளா வகம்புணர்ந் தான்.

பிரம்ம விஷ்ணுக்களாலும் காண்டற்கரிய பரம்பொருள் பேதையாகிய யான் காண குருவுருவாகத் தோன்றி அத்துவிதமாகப் புணர்ந்து அபய மளித்தா னெனல்

225. நித்த மணாளனா நெஞ்சகத்து விஞ்சினான்
சுத்தவருட் போத சுகசொருபன் — மத்தமனப்
பேதைமைசேர் துன்பப் பிரிவிலா* வோர்சொருப
போதமா வென்னைப் புணர்ந்து.

* ஓர் சொரூபம் — சுத்தாத்துவிதமான ஏகாத்ம சொரூபம்

பிரிவற்ற ஆன்ம சொரூப ஞானமாக என்னைப்புணர்ந்து ஆண்டவன் நித்த மணாளனாய் என் இதயத்தில் விளங்குகின்றா னெனல்

226. மலிந்த வருட்காந்த மாட்சியா லீர்த்தான்
கலந்தருளித் தன்மயமாக் கண்டான் — சலந்தவிரக்
காத்தானென் னுருயிரைக் காந்தா மணியாகப்
போர்த்தான் புளகாங் கிதம்.

ஆண்டான் அருட்காந்தமாக என்னை முழுதுந் தன்மயமாகக் கலந்தான். என் உயிரின் அசைவை நீக்கிப் புளகாங்கித முறச்செய்தா னெனல்.

227. இருளற் றிதயத் தியல்பா வொளிர்மெய்ப்
பொருள்வாழ்வாம் போகம் புணர்ந்தேன் — அருள்வீர
வெற்றிக் கழலணிந்த வேந்தன் குருரமணன்
கொற்றக் குடைவாழ் குடி.

மெய்ப்பொருள் வாழ்வாம் போகம் புணர்ந்து குருரமணன் குடியானே னெனல்.

228. காண்டலருந் தெய்வக் கருணையா லென்னகத்துத்
தூண்டுபரஞ் சோதி சொரூபமுற்றப் - பூண்டவருட்
காதலாற் கூடிக் கலந்து திளைக்கலுற்றேன்
ஆதலாற் றன்னியளா னேன்.

ஆண்டவன் என் உள்ளத்தில் தூண்டிய சொருபக் காதலாற் கூடிக் கலந்து தன்னியளானே னெனல்.

229. காயத்தி லுள்ளக் கருவாக நின்றசிவ
ஞாயிற்றை நோக்குமெய்ஞ் ஞானமின்றிப் — பேயொத்
தலைந்தே னறிவை யகமுகமாக் கூட்டிக்
கலந்தா னருட்செங் கணான்.

உடலிற் குடியிருக்கும் சிவசொரூபத்தை நோக்கும் ஞானமில்லா திருந்த என்னறிவை ஆண்டவன் அகமுகமாக் கூட்டிக் கலந்தா னெனல்.

230. ஒத்துப் பொருந்திறு ருள்ளத் தொளிர்சொருப
முத்திப் பரமான மோனகுரு — புத்திக்
கமுதமா மோன வருள்வெளியா வென்னை
யமிதமாத் தான்கலந் தான்.

ஆட்பட்டா ருள்ளத்தில் முத்திப்பரமாக விளங்கும் மோனகுரு என்னை மோனவருள்வெளியாக, அமிதமாகக் கலந்தா னெனல்.

231. எண்ணெழுத்து நோக்கமே யில்லாக் குருட்டுக்குக்
கண்ணொளிதந் தான்சொரூபங் காணவே —
வண்ணவருட்
கண்ணாலம் பூண்டு கலந்தான் கருத்தொருமித்
துண்ணீர்மை யுற்றே னுளத்து.

ஆண்டவன் சொரூபங் காணவைத்துக் கண்ணாலம் பூண்டு கலந்ததால் உள்ளத்தில் ஒருமையுணர் வுற்றே னெனல்.

232. அருள்வெள்ள மாக வணைந்திதன் னகத்தே
பொருள்வெள்ள மாகப் புணர்ந்தான் — மருள்வெள்கி
மாயப்பொய் யாக மனத்துள் ளொளிர்வதந்த
ஞேயப் பொருளே நிலைத்து.

அருள்வெள்ளமான ஆண்டவன் புணர்ப்பால், மாயை பொய்யா யொழிய, பரம்பொருளே நிலைந்து ஒளிர்கின்றது எனல்.

233. நெஞ்சிற் பிரியாமெய்ந் நேய வுணர்ச்சியெழக்
கொஞ்சிக் குலா ரமணன் கூடினன் — மிஞ்சிக்
கிளர்கின்ற வூற்றுமணற் கேணியிற்பே ரின்பம்
வளர்கின்ற தென்றன் மனத்து.

நீங்காத மெய்யன்பு பொங்க ரமணன் கொஞ்சிக் கூடினன்; அதனால் என் நெஞ்சக்கிணற்றில் பேரின்பவூற்று பெருகுகின்ற தெனல்.

234. வாடிநான் சிந்தை வருந்தா திரங்கியெனைக்
கூடினு னன்புக் கொழுநனு — நீடியசற்
போத சொருபவருட் புண்ணியன்பே ரின்பவுணர்
வோதவொணு தூறு முளத்து.

ஆண்டவன் நான் வருந்தாது இரக்கமுற்று என்னை அன்புக் கொழுநனுகக் கூடினன். அவனது சொருப சுகம் உரைகடந்து என் உள்ளத்தில் ஊறுகின்ற தெனல்.

235. பந்தம் பறியப் படர்சொருப முத்தியொளி
விந்தையா வீசு விழியாளன் — சொந்தவருட்
கண்ணுள ணுகைக் கலத்தலா லுட்கலந்த
துண்ணு ரமுதவொளி யூற்று.

அருட்பார்வையாற் பந்த மறுக்கும் எம்பிரான் என் கண்ணுளனுக்க கலத்தலால் அமுதவொளியூற்று உள்ளே கலந்த தெனல்.

(கொச்சகக் கலிப்பா)

236. ஏகமாந் தன்னை யநேகமாத் தோற்றுவிக்கும்
மோகமனக் கற்பனையை முற்றவடர்த் தத்துவித
யோகமா முண்மையுணர் வூட்டியுளத் தான்றபர
போகவாழ் வாகப் புணர்ந்தான் குருபரனே.

அருட்போக வாழ்வாக ஆண்டவன் அகத்திற் புணர்ந்தா னெனல்.

237. உணங்கலுற்ற வென்னை யுவப்பக்கண் ணேக்கி
மணங்கலந்த வாண்டவன்பொன் மார்பங் கலந்தேன்;
குணங்கடந்த மெய்யன் குலாச்சேர் சொருப
வணங்கலந்த வாழ்வு மனேதீத மாண்பே.

என்னைக் கண்ணேக்கால் மணந்த ஆண்டவன் மார்பங் கலந்தேன்; சொருப வழகான இவ்வாழ்வு மனேதீத மாட்சி யுடைய தெனல்.

238. உணர்தலற்ற வுண்மை யுணர்வா முடையான்
புணர்தலா லுள்ளம் பொலியப்பெற் றேனுக்
கணவியது சுத்த வருட்பெருமெய்த் தன்மை;
தணவுற் றதுசகல கேவலப்பொய்ந் நோக்கே.

---

குறிப்பு — உணர்தலற்ற — யானென்றோ அன்றி இதுவதுவென்றோ ஒன்றையும் வேறுபட அறிதலற்ற, உண்மையுணர்வு— உண்மையளவாக ஒளிர்கின்ற, பினைமற்ற பிரஞ்ஞானப் பிழம்பு.

ஆண்டவனது புணர்ப்பால் உள்ளந் தெளிந்த எனக்கு என் மெய்த் தன்மை விளங்கி. சகல-கேவலப் பொய்யறிவு நீங்கிற்றெனல்

239. ஜகமுகமா வோடிமனந் நட்டழிந்த காலத்
தகமுகமா வென்னறிவைத் தன்னடிக்கே யாக்கித்
தகவுறுமெய்ஞ் ஞான சமாதியா லென்னை
மகிழ்வுறுபே ரின்ப மணங்கலந் தானே.

நான் புறமுகப்பட்டு வருந்திய காலத்தில் என்னை அகமுகப்படுத்தி, ஞானசமாதியால் என்னைப் பேரின்ப மணங் கலந்தானெனல்.

240. கணக்குவழக் கெல்லாங் கழிந்தொழிய வென்னோ
டிணக்கமுறச் சேர்ந்தா னிறையோ னியல்பா
உணக்கலரு மோன வுணர்வே தணவா
மணக்கலப் பானபெரு மாட்சியுற் றேனே.

இறைவன் என்னோடியல்பாக விளங்கலால் மௌனவுணர்வே மணக் கலப்பான மங்கல மாட்சி பெற்றேனெனல்.

241. நலிந்தொழிந்த வென்னைத்தன் னல்லருட்கண்
ணோக்கால்
வலிந்தணைந்த தெய்வ வசீகரப்பெம் மானைக்
கலந்தபே ரின்பக் களியா லடிச்சிக்
குலந்ததுபாழ் மோகவுணர் வுள்ளங் கிளர்ந்தே.

நலிந்து போன என்னை அருட் கடாக்ஷந்தா லணைந்து கலந்த ஆண்டவனின் பேரின்பத்தால் மோகமற்று உள்ளம் பூரித்ததெனல்.

242. உள்ளக் கலக்கந்தீ ரொடபருட்பச் சிற்பரத்திற்
கள்ள வகப்பேய் கரந்தொழியப் பேரின்ப
வெள்ளவெளி யான விசுத்த சொருபமா
வள்ளிக் கலந்தா னடிச்சியைநன் காண்டவனே.

ஆண்டவன் சிற்பரத்தில் அகந்தை யழிய, பேரின்ப வெளியான சொருபமாக என்னை அள்ளிக் கலந்தா னெனல்.

243. அருட்பெற்றி யாலே யகம்புகுந் தாண்ட
பொருட்பெற்றி யாலே புமானன் சொருப
விருப்புற் றுணர்வு வெறுப்பா தெனைத்தீங்
கருப்புச் சுவையாக் கலந்தனன் காணே.

என்னுள்ளம் புகுந்தாண்ட பெருமானது வேட்கையால் நான் வெறும்பாதவாறு என்னைக் கலந்தா னெனல்.

244. கண்ணாக வுள்ளவென் கண்ணானை நத்தவருள்
விண்ணாக வென்னை விழுங்கிக் கலத்தலால்
உண்ணா ரமுதா யொளிர்பிழம்பாய் வெள்ளைமனப்
பெண்ணான நான்சற் பிரம்மமா நின்றேனே.

அருட்பார்வையாக ஆண்டவன் தம்மைக் கலத்தலாற் பிரம்ம நிஷ்டானுபூதி சித்தித்த தெனல்.

245. கட்டக் கடுங்காயாக் கன்றியவென் கன்னெஞ்சிற்
சிட்டப் பிரானருளாற் சேர்ந்து திளைத்தலாற்
கட்டக் கடுங்காய் கனிந்து சிவானுபவக்
கட்டிக் கருப்புருசி காட்டியதோர் கன்னிக்கே

காயாயிருந்த என் கன்னெஞ்சை ஆண்டவன் சேர்ந்து திளைத்ததால் கனிந்து சிவானுபவக் கற்கண்டாக இனிப்புற்ற தெனல்.

246. வண்ணமிக்க வொண்ணாத வண்ணப் பிரானடியேன்
உண்ணெக் குருக வுளம்புக் குணர்வுருவா
நண்ணிக் கலந்த நலத்தைநா னெண்ணவெண்ண
அண்ணிக்குந் தண்ணார் அமுதாமவ் வெண்ணமே.

ஆண்டவன் என் உள்ளம் புகுந்து உணர்வுருவாகக் கலந்ததை எண்ண வெண்ண அமுதமா யுள்ள தெனல்.

வலிய வந்து என் உள்ளமுருக்கிக் கொள்ளை கொண்ட ஆண்டவன் தன் கண்ணோக்கால் அவித்தையிருள் கெடுத்து அருள்வெளியாய்ச் சேர்ந்தா னெனல்.

252. துன்றியார் தம்மைத் துலங்கு சொரூபமா
என்று மிதயத் தியல்விக்குங் கண்ணோக்கால்
வென்றிசே ருண்மை விளக்கமா வென்னகத்து
மன் றவே யொன் றலுற்ற னன் மாட்சிசே ரம்மானே.

அடைந்தவரை ஆன்ம சொருபமாய் உய்விக்குங் கண்ணோக்குடைய ஆண்டவன் என்னுள்ளத்தில் உண்மை விளக்கமாய்க் கலந்தா னெனல்.

(குறள்)

253. எங்குங் கலந்த விறையே அடிச்சியே
னங்கங் கலந்தவாண் டான்.

254. கள்ளியே னுள்ளங் கலந்தான் சொரூபமா
ஒள்ளியவோ ருண்மைப் பிரான்.

255. விளங்குபே ரின்ப வியன்பர வாழ்வா
வுளங்கலந்தான் என்னுடை யான்.

256. உள்ளலரு மோன உணர்வுருவா யுட்கலந்தான்
பிள்ளலரு முண்மைப் பிரான்.

257. காணக் கிடைத்தேன் கலந்து களிக்கலுற்றேன்
மாணக் கிளர்சொருபன் மார்பு.

258. உண்மையா வென்னை யுடையானென் னுண்மையே
யாக வகங்கலந் தான்.

259. கண்மணியே யாகக் கலந்தான் பிரஞ்ஞான
விண்மணியா வுள்ள விபு.

260. நித்த மனுளமு நெஞ்சத் தமர்ந்தவருட்
கர்த்தனில்யான் கண்ணயர்கில் லேன்.

261. ஒடுங்கலுற்ற வுள்ளத் தொளிர்சொருபன் றன்னோ
டுடன்கலத்த லுற்ற துயிர்.

261-a. உணர்வூற வூறவென் னுள்ளத் தியல்பாப்
புணர்வோன் சொரூபப் புமான்.

261-b நானற் றொழியவென் னை னெனைக்கலந்து
மோனத் தொளிபெருக்கி னன்.

## உஅ. சொக்க லுற்றேன்

(கொச்சகக் கலிப்பா)

262 உறவுற்ற வாற்றல் உடையான் சொரூப
வறிவு துலங்க வருள்வெளியே யாக,
நிறைவுற் றியல்சொரூப ரேயானு பூதித்
துறையிலே கூடிமனஞ் சொக்கலுற் றேனே.

ஆண்டவனோடு சொரூபஞானம் விளங்குமாறு அருள்வெளியிற் கூடிச் சொக்கினே னெனல்.

263. பொய்க்கனவா மோகப் புலவுலக வேட்கையறத்
தக்கவா றென்னைத் தலையளித்தே தற்பதத்திற்
சிக்கெனவாழ் மோனவருட் சீர்மையளித் தாண்டவன் பாற்
சொக்கினே னுற்ற சுவானுபவங் கூறரிதே.

நான் உலக வேட்கையற்றுத் தன்னடியில் அருள்மோன வாழ்வு பெறுமாறு என்னை ஆட்கொண்ட ஆண்டவன் பாற் சொக்கிய என் சுவானுபவம் சொல்லற்கரிய தெனல்.

264. அன்புக் குரியவென் னம்மா னருளியபே
ரின்பக் கலவியா லெக்களித்தேன் சொக்கியவவ்
வின்ப வுணர்வெனக்கெவ் வெக்காலும் பொய்க்காது
நம்ப னடிக்கீழ் நவநவமாப் பொங்கியதே.

என் ஆண்டவன் அருளிய பேரின்பக் கலவியிற் சொக்கினேன். அது என்றும் பொய்க்காது நவநவமாகப் பொங்கிய தெனல்

265. சத்தி நிபாதச் சதிரளித்த சற்குருநன்
முத்த வருட்பதத்திற் சொக்கலுற்ற வுள்ளுணர்வாற்
புத்தமுத போகம் பொருந்தலுற்ற துள்ளத்திற்
பொய்த்தொழிய மோகப் புணர்ப்பான துன்பமே.

சக்தி நிபாத மளித்த சற்குரு பாதத்திற் சொக்கலால், மோகத்தால் வந்த துன்பந் தொலைந்து உள்ளத்திற் புத்தமுத போகம் பொருந்திய தெனல்.

266. மத்த வகப்பேய் மனப்புன் கலக்கமகல
சுத்தத் தெளிவாந் துலங்கு சொரூபவியற்
பத்திக் கடலிற் பதித்தென்னை யாண்டவன்பால்
உத்தமசற் போகவுணர் வுள்ளஞ் சுரந்ததே.

மனக் கலக்க மகற்றிச் சொரூப பக்திக் கடலில் என்னைப் பதித்த ஆண்டவன் பால் சற்போக வுணர்வு சுரந்த தென்க.

267. சொக்க னருள்வடிவிற் சொக்கவுற்ற வென்னகத்து
மிக்கநன வாக விளங்கு துரீயமாச்
சிக்கெனவந் துற்றசிவச் சோமவியற் சீர்மையால்
ஒக்க வொழிந்ததுபா ழுந்தையகப் பேய்மனமே

ஆண்டவன் அருள் வடிவில் நான் சொக்குவதால் துரிய நிலையாகிய சிவச் சீர்மை ஓங்கி அகந்தை யொழிந் தெனல்.

(வெண்பா)

268. மனமவற்கே முற்ற வசப்பட்டேன் சற்று
மெனதுவச மின்றி யிழந்தேன் — மனந்தன்
சொரூபவருள் வெள்ளந்நிற் சொக்கினேன் மோகத்
திரோபவமின் றாகத் தெளிந்து.

மனம் என் வசமிழந்து ஆண்டவனுக்கே வசப்பட்டேன் மோக மறைவற்று சொரூப அருள் வெள்ளத்தில் மனம் சொக்கினே னெனல்.

269 நெக்குநெகு நெஞ்சுநிறை பாவநற் பூரணமாப்
புக்கதே போதுவெள் ளுந்தியுள்ளே — சொக்கு
சுகுமார மான சொரூபவருட் பெம்மான்
சுகமோன மூறுஞ் சுரந்து.

சொரூபப் பெருமான் என் உந்தியிற் புகுந்தவுடனேயே நெக்குருகும் என்னெஞ்சில் மோனசுகப் பெருக்கைச் சுரந்து செழிப்பித்தனன்.

269-அ தானென தன்மை தவிர்ந்தெல்லாந் தன்சொரூப
வானதை யுண்மை வழங்கலால் — ஞானமய
நானெனு நின்றவென் னையகனை நான்றினைக்கை
மோனனு பூதி முகப்பு.

என் நாயகன் செய்யுபகாரமே பெரிதாதலால் அவனை நான் நினைத்தலாவது என் மோனானுபூதியே யெனல்.

(குறள்)

270. கொடுக்கக் கொடுக்கக் குலவுமின்பே போலும்
மடுக்க மடுக்க மகிழ்வு.

## ௨௬. குருதி பாரா தாண்டான்

(கொச்சகக் கலிப்பா)

271. உணங்கிக் கிடந்தவோ ருத்தைப் பிணையை
அணங்குக் கணங்கா வருட்பே ரழகால்
வணங்கவினக் காதல் வதுவாக்கிக் கொண்டான்;
மணங்கலந்து வாழ்ந்தேன் மனோதீதன் பாலே.

ஊத்தைப் பெண்ணான என்னை அருளழகு பெற்ற தெய்வப் பெண்ணாக்கி மணந்து கொண்ட ஆண்டவனைக் கலந்து வாழ்ந்தே னெனல்.

(வெண்பா)

272. யானே மடப்பேதை யென்னையடிக் காண்டவிறை
தானே பராத்பரமாந் தத்துவனாமற் — றீனோர்முன்
மானுடனே போன்றான் மனத்தூ டபேதமாத்
தானுறவு பூண்டான் சதிர்த்து.

யானோ அறிவில்லாப் பெண்ணாயினும் என்னை ஆண்டவனோ மக்கள் கண்ணுக்கு மானிடனாகத் தோன்றினும் பரமாத்ம சொரூபனாகையால் உள்ளத்தில் அபேத வுறவு பூண்டானெனல்.

273. யானே வடிச்சி யவனேயென் னாண்டான்மற்
றேனோதா னிந்த விபரீதம் — நீநா
னிரண்டலா வொன்றன்றி யில்லையிரண் டென்றான்
மருண்டொழிய வென்றன் மனம்.

யானே அடிச்சி; அவனோ ஆண்டவன். இவ்வளவு பெரும் விபரீத பேதவுறவுடைய என்மனம் ஒழியுமாறு, "நீயும் நானும் இருவேறல்லாத ஒன்றே என் றருளினா னெனல்."

274 பட்டியாந் துட்டமனப் பாய்ச்சலற நோக்கினன்
நிட்டையாந் தன்பதத்து நிற்கவே — துட்டையாந்
தூர்த்தைக் கறிவுச் சுடர்கொளுத்தித் தன்பதத்தூ
டீர்த்துக் கலந்தா னிறை.

தூர்த்தையாய்ப் பாயும் பட்டிமனத்தைக் கடைக்கணித்து அறி
வூட்டித் தன்பதத்திற் கிழுத்துக் கலந்தா னெனல்.

275. கொண்டியா யிவ்வுலகக் கோலா கலப்புலத்தே
மண்டிமனம் பாழ்த்தொழிந்த மாதிமையாற் —
றெண்டியற்றச்
சற்றுந் தகுதியின்மை தான்கருதா தாட்கொண்டு
முற்றவருள் செய்தான் முனி.

உலகக் கோலாகலத்துத் திரிந்த என் தகுதியின்மையையும் பாராது என்னை யாட்கொண்டு பூரண அருள் செய்தா னெனல்.

276. அடர்த்தழித்துத் தன்னடிமைக் காண்டான் முரட்டு
மடத்தொழுத்தை யான மனத்தை — மடுத்துக்
கருத்துத்தன் செம்பதத்திற் கற்பரசா யிப்போ
தருத்தியுற வாழ்கின் றது.

முரட்டுத் தொழுத்தையா யலைந்த என்மனத்தை அழித்து அடிமை கொண்டான்; இப்போது அது அவன் பதத்தில் கருத்தொன்றிக் கற்பரசாய் வாழ்கின்ற தெனல்.

## ௩௦ ஸுமங்கல வாழ்வு

(கொச்சகக் கலிப்பா)

277. பண்ணார் தமிழின்பப் பாட்டேபோல் என்னகம்புக்
குண்ணா ரமுதவுணர் வூற்றாக வுட்கலந்தான்
கண்ணா ரமுதமாக் கண்டேனை யாண்டவன்பாற்
கண்ணாலை வாழ்வெனக்குக் கைகூடப் பெற்றதே.

இசைத் தமிழ்ப்பாடல் போன்று அமுதவூற்றாக என்னுட் கலந்த ஆண்டவனது கன்னாலை வாழ்வு கைகூடிற் றெனல்.

278. எங்கு மிலாததோ ரின்பமென் பாலதாப்
பொங்குசிவ போதப் பொருட்புனையல் காட்டியகத்
தங்கம் புளகிக்க வாண்டவருட் கண்ணாளன்
மங்கலவாழ் வுற்று மதர்த்தே னடிச்சியே.

இணையற்ற பேரின்ப சிவஞானப் புனலைக் காட்டி யருளி யாட்கொண்ட கண்ணாளனது மங்கல வாழ்வைப் பெற்று இவ்வடிச்சி பெருமித முற்றே னென்றாள்.

279. ஒன்றினு ருள்ளத் துணர்வொளியா யுள்ளவிறை
துன்று சொருபாத் தெருள்சிவமோ னானுபவ
மன்ற வியல்பா மருவுசுப மங்கலப்பே
ரின்பவருள் வாழ்வா லிதயம் பூரித்ததே.

அடங்கிய மனத்தில் அறிவாய் விளங்கும் ஆண்டவனது மோனானுபவ சுப மங்கல வாழ்வால் இதயம் பூரித்தே னென்றாள்.

280. அங்கைக் கனியினுமிக் கான்ற சொரூபவருட்
கங்கையென் னுள்ளக் கருத்தூடு பாய்தலாற்
துங்கமா மோனத் துரியஞா னானுபவ
மங்கலவாழ் வுற்று மதர்த்தேன் சிவபதத்தே.

சொரூப அருட் கங்கை மிகத் தெளிவாக என்னுள்ளத்திற் பாய்வதால் துரிய ஞானானுபவ மங்கல வாழ்வு பெற்றே னென்றாள்.

281. எங்குமாத் தங்கு மியற்பிரான் சற்குருவாய்ச்
சிங்கநோக் காலென் செருக்கறச்செற் றாண்டதாற்
பொங்குசிவ போகப் புணரியாம் பொற்பதத்து
மங்கலவாழ் வார்ந்து மதர்த்தேனோர் பேதையே.

ஆண்டவன் குருசிங்க நோக்கால் என் செருக்கை யழித்தமையாற் சிவ போகக் கடலான திருவடியில் மங்கல வாழ்வு படைத்தே னென்றாள்.

282. எங்குங் கலந்தியல்பே ரின்ப வருள்வெளியாத்
தங்குமுப சாந்தி தழைக்கவுந்தேன் உள்ளுணர்விற்
பொங்கிப் பொலிசொருபப் பூரண மோனானுபவ
மங்கலவாழ் வாக மடுத்தா னடித்தலத்தே.

சொரூப மோனானுபவ மங்கல வாழ்வாக அமைந்த ஆண்டவன் பதத்தில் எங்கும் அருள் வெளியான உபசாந்தி பெற்றே னென்றாள்.

283. பங்கமா மோகவகப் பாசமற வுள்ளுணர்விற்
பொங்குசிவ மோனுனு பூதிப் பொலிவுசேர்
மங்களவாழ் வாக மடுத்ததெனக் கென்னையகத்
தங்கணர சாகவணை ந் தாண்டான் சொரூபமே.

என் இதயவரசனு யென்னை யணைந்த ஆண்டவன் சொரூபமே பாசமற்ற சிவமோனுனுபூதி நிறைந்த மங்கள வாழ்வாக எனக் காயிற் றெனல்.

284. மாக்காதல் பொங்க மனத்தே தயாசொருப
நோக்கா லென்னைக் கலந்த நுண்ணணியான் சிற்பதத்தில்
வாக்கால் வழுத்தலரு மங்கலவாழ் வற்புதப்பே
ராக்கமாப் பற்றி யருளிற் றடிச்சிக்கே.

கருணை நோக்கால் என்னைப் பேரன்பு பொங்கக் கலந்த ஆண்டவன் பதத்திற் சொல்லரிய மங்கல வாழ்வு எனக்குக் கிடைத்த தெனல்.

285. எங்குமே பேரா திதயமே கோயிலாத்
தங்கலுற்ற னேடு தழைத்தொளிர்மெய்க் கூட்டுறவாற்
பொங்குசிவ போகப் புளகமெழப் பூரிக்க
மங்கலமா மோனவருள் வாழ்வகத்து மல்கியதே.

உள்ளக் கோயிலில் நீங்காது விளங்கும் ஆண்டவனேடு கூடி சிவ போகப் புளகம் பூரித்து மங்கல வாழ்வு பெற்றேனெனல்.

286. பொங்குமுப சாந்தப் புணரியாப் புக்ககத்துத்
தங்கலுற்ற வாண்டான் சதாசா ரியரமணன்
மங்கலவாழ் வாக வழங்கியதன் மாணடிக்கீழ்
மங்கியதென் மோக மனக்கிலே சங்களே.

ஆசாரிய ரமணன் சாந்த சமுத்திரமாய் என்னுட் புகுந்து, தன் திருவடியே என் மங்கல வாழ்வாக அளித்ததால், மோக மனக் கிலேசங்கள் மறைந்தன வெனல்.

287. மோக வடிவ முனைப்பாம் அகந்தைமனே
வேகமறப் பொங்கு விசுத்த சொரூபவொளி
ஏகமா வுள்ளத் திறைவனே டென்னை அருட்
போகவாழ் வெய்தப் புணர்ந்திற்று மங்கலமே.

துரியசொருபவொளி அத்துவிதக் கலப்பான அருட்போக வாழ்வெய்த, இதயத்தில் இறைவனேடு தம்மை மணமங்கலம் புணர்ந்திற் றெனல்.

288. பங்கமுற வழுத்தமலப் பாழி லமிழ்ந்துமனம்
மங்கலுற்ற வென்னை மணந்த மணாளனுற்
றுங்கவருள் வாழ்வாத் துலங்கு சுவானுபவ
மங்கலமுண் டாகவென் மாட்சி மலர்ந்ததே.

பாழ் மலத்தில் மிகுந்த என்னை மணந்த ஆண்டவனால் அருள் வாழ்வான சுப மங்கலம் உண்டாயிற் றெனல்.

289. வளங்குலவு மங்கலச்சீர் வாழ்வாக வென்னுள்
விளங்கலுற்ற சுத்த விபூதிநிலை, வேகக்
களங்கமுற்ற மோகக் கலதியைக்கண் ணேக்கா
லுளங்கலந்த வுண்மை யொளியோ னருளே.

என்னுள் மங்கல வாழ்வாக விளங்கும் சுத்தவிபூதி நிலையானது, கண்ணேக்கால் என் உள்ளங் கலந்த ஆண்டவ னருளே யெனல்.

290. மனக்கேத மற்ற மகிழ்ச்சி யளித்தான்
வினைக்கேட னன விகிர்த சொருபன்;
தனிக்கேள்வ னனபெருந் தக்கோனைக் கூடித்
துனற்கே யரிய சுமங்களமுற் றேனே.

ஆண்டவன் கேடிலா இன்ப மளித்தான் அம் மணாளனைக் கூடிச் சுமங்கள வாழ்வுற்றே னெனல்.

291. மங்கலவாழ் வுள்ளத்து மல்க மணக்கலுற்ற
செங்கணன் சுத்தவருட் செல்வந் திளைக்கவெனச்
கெங்கெங்குஞ் சற்று மிடையின்றித் தன்னியல்பாப்
பொங்கியது பூரணசற் போத சொருபமே.

உள்ளத்தில் மங்கல வாழ்வாக என்னை மணந்த ஆண்டவனது அருட் செல்வஞ் செழித்து, எங்கெங்கும் சொரூப போதம் பொங்கிய தெனல்.

292. தன்பரமா வென்னைத் தடுத்தாண்டு கொண்டநல்
லெம்பெருமா னென்னே டிதயத் தியைநலால்
அன்புசிவ மானமெய்ஞ்ஞா னனுபவம் மிக்கவருட்
செம்பரவாழ் வாகத் திளைத்தே னடிச்சியே.

தனக்காக என்னைத் தடுத்தாண்ட இறைவன் உள்ளத்திற் கலத்தலால் அன்பே சிவமான ஞானானுபவ வாழ்வு பிணைந்தேனெனல்

293. மிக்க சொரூப விலாசஞ்சேர் சுத்தவருட்
சொக்கனொடு பூண்ட சுமங்கலவாழ் வாலெனக்குப்
பொக்க மனக்கலக்கப் பூசலறப் பொங்கியது
தக்க சதாசிவசாந் தானுபவச் சீர்மையே

சொரூப வருட் சொக்கனோடு சுமங்கல வாழ்வு பூண்டதால் மனக் கலக்க மற்றுச் சாந்தானுபவம் பொங்கியதெனல்.

294. கணிக்கவொண் ணாதவருட் காருண்ய மூர்த்தி
அணைக்கலுற்ற வொற்றை லகத்திலெனைத் தன்னோ
டிணைக்கமுற்றேன் சற்று மிருவேறின் றாக
மணக்கலுற்று வாழ்ந்தேன்செம் மாண்பதத்து
நன்றே.*

* நன்று—நன்றாக

ஆண்டவன் என்னைத் தன்னோடு இருமையற்று அணைத்ததால் அவன் திருவடியில் அருள் மணவாழ்வு பெற்றேனெனல்.

295. கன்றியபா ழாணவப்பேய்க் காழ்ப்பால் உடல்வடிவாத்
துன்றியமா மோகமனக் கூதான கற்பனையைப்
பொன்றவே கொன்றுசிவ பூரணமா வென்னுணர்வில்
மன்ற விளங்கு மணாளனால் வாழ்ந்தேனே.

"நான் இவ்வுடலே" என்று எழுந்திருக்கும் கற்பனையை அழித்து, சிவ பூரணமாக என்னுள்ளே விளங்கு மணாளனால் வாழ்ந்தேனெனல்.

296. உவக்க வுவக்க வுவகைமேற் பொங்கு
சிவக்கே வலமாச் சிறந்தொளிர்மெய்ஞ் ஞானத்
தவக்கே முருவாற் றழுவலுற் றன்பாற்
சுவத்தவாழ் வுற்றேன் சொரூபங் கலந்தே.

உவக்க உவக்க மேன்மேலும் இன்புறும் சிவக்கேவல ஞானவொளியால் என்னைத் தழுவிய ஆண்டவன் சொரூபங் கலந்து சுவத்த வாழ்வுற்றேனெனல்.

297. விருத்தமா மோக விகற்பமற வுள்ளக்
கருத்தில் விளங்குசிவக் கண்மணியைக் கண்டாங்

கருத்திசே ரார்வ மகங்கிளர வுண்மைத்
திருத்திசேர் வாழ்வு நிலைக்கலுற் றேனே.

மோக விகற்பம் அறியுமாறு உள்ளத்தில் விளங்கும் சிவக்கண்மணியைக் கண்டு ஆர்வ முண்டானதும் மெய்யான திருப்தி நிறைந்த வாழ்வு பெற்றே னெனல்

298. நிரந்தரவாழ் வாக நிகழ்சொருபப் பெம்மான்
ஓரந்தரமின் றுக வுயிர்க்குயிரா வுள்ளோன்
கரந்தொழிய நாமனறுமகங் காரவகப் பேயைத்
துரந்தருளி யீந்தான் சொருபசுப வாழ்வே.

உயிர்க்குயிரா யுள்ள சொருபப் பெருமான் அகங்காரப் பேயை யழித்துச் சொருப சுபவாழ்வு தந்தா னெனல்.

299. கரவற்ற வுன்னைக் கடவுளா வுள்ளம்
மருவலுற்ற சொந்த மனுளன் பதத்திற்
பிரிதலற்ற சுத்தவருட் பேரின்ப மோனம்
பரமசுப வாழ்வாய்ப் படைக்கலுற் றேனே.

மெய்க்கடவுளாக என்னுள்ளத் துற்ற மனுளன் பதத்திற் பிரியாப் பேரின்ப மோனமே சுப வாழ்வாக அடைந்தே னெனல்.

300. அம்மா னுருவே யனுசந்திக் கின்றேனுக்
கம்மா னருள்வெளியா வாகக் கலந்தணைந்தான்;
அம்மான் சொரூப வருட் பரத்தில் யானென்னும்
பொய்ம்மை யகன்றொழியப் பூரணவாழ் வுற்றதே.

ஆண்டவன் உருவையே அனுசந்திக்கின்ற என்னுள் அருள்வெளியாகக் கலந்தணைந்தான். அவனடியில் அகந்தையற்றுப் பூரண வாழ்வு பெற்றே னெனல்.

301. முன்வினையைப் போக்க முறையான சாதனந்தேர்ந்
தாள்வகையா லாற்றகில் லாத வடிச்சிக்குக்
கேள்வியா லென்னைக் கிளர்வித்த சுத்தவருட்
கேள்வன்பாற் கைவல்யக் கேமவாழ் வார்ந்ததே.

முறையான சாதனை செய்தறியாத இவ்வடிச்சியைக் கேள்வியினாலேயே உள்ளக்கிளர்வித்த ஆண்டவனிடம் கைவல்ய க்ஷேம வாழ்வு கிட்டிற் றெனல்.

302. கள்ளமற்ற வுண்மைக் கடவுட் பரவெளியே
யுள்ளமா மோனவுணர் வூட்டியென் னுட்கலந்த
தெள்ளமுத மான சிவக்கொழுந்தோ டைக்கியமா
நள்ளலுற்ற வாழ்வுசிவ ஞானவருட் போகமே.

கடவுட் பரவெளியே என் உள்ளமாக அறிவித்த சிவக்கொழுந்தோடு ஐக்கிய முற்ற என் வாழ்வு சிவஞான போகமே யெனல்.

303. நனந்தலை ஞாலத்து நானென்றோர் பேதை
மனந்தடுமா றுற்ற மயக்கமற வுள்ளத்
தனந்தவருள் வாழ்வா வணைந்தபிரான் சீர்மை
நினைந்திடவொண் ணாது நிரம்பியது நெஞ்சே.

பேதையாகிய என் அகந்தை மயக்கமற, உள்ளத்தில் அருள் வாழ்வாக வணைந்த ஆண்டவன் சீர்மை நினைப்பைக் கடந்து நெஞ்சில் நிரம்பிய தெனல்.

304. தானுன முற்றமுழுத் தன்மை விளங்குசிவ
மோனானு பூதி முகப்பித்த வாண்டவன்பால்
ஊனு னொனவுருத்த வூத்தையகப் பேய்முனைப்பற்
ருன வருட்பெருவாழ் வார்ந்தே னிரண்டறவே

ஆன்ம சொரூபம் விளங்க சிவமோனானுபவம் தந்த ஆண்டவனிடம், அகந்தையற்ற அருள்வாழ் வடைந்தே னெனல்.

305. நுண்மையிலு நுண்மைசேர் நோக்கமாக் கூர்-
சொருபத்
திண்மைசேர் சுத்த சிவானுபவந் தேக்கவெனக்
குண்மைக் கலையென் னுளம்புகட்டி மோனவருள்
வண்மைசேர் வாழ்வா மலர்ந்தான்கண் ணுளனே.

அதிநுட்ப சொரூப சிவானுபவம் உண்டாகுமாறு எனக்கு மெய்க்கலை புகட்டி, அருள் வாழ்வாகவே என் கண்ணுளன் மலர்ந்தா னெனல்

306. சொந்த சொரூபத் துலக்கமாத் தோய்தலால்
அந்தரங்க மான வருள்வாழ் வருளினன்;
தொந்தபந்த மற்ற சுவானுபவ மோனவுணர்
வெந்தரமில் லாதே யிதயத் தெழுந்ததே.

சொந்த சொரூபமாகவே ஆண்டவன் விளங்கி அருள் வாழ்வளித் தான். அதனால் என்னிதயத்தில் மோனானுபவம் எழுந்த தெனல்.

307. மனமெனும்பொய்க் கற்பனை மாயமறக் காணுந்
தனது சொரூபசாட் சாற்கார வுண்மை
யனுபவமா மோன வருட்பெருவாழ் வுள்ளத்
தினிதியல்பா நண்ணிற் றிறைரமணன் பாலே.

என் இறைவனான ரமணனிடம் மனத்தைப் பொய்யாக்கும் சொரூப சாட்சாற்காரமாகிய அருள் வாழ்வு கிடைத்த தெனல்.

308. மாழ்காம லென்னை மணந்துமே யின்பவருள்
வாழ்வா விதயத்தில் வைகு சொரூபன் மாட்
டாழ்வா லகன்சிற் பரவெளியா வற்றேன்பால்
ஊழ்வா தனையொட்ட வொன்றா தொழிந்ததே.

என்னை மணந்து இதயத்தில் வீற்றிருக்கும் ஆண்டவனிடம் ஆழ்ந்து, என்னை இழந்ததால் ஊழ்வாதனை யொழிந்த தெனல்.

309. மானாபி மான மயக்கமறக் காண்டலான்
மோனானு பூதி முகக்கவென் னுள்ளத்துத்
தானாகி யென்னைத் தலையளித்த தத்துவன்பா
லானா வருள்வாழ் வடிச்சியே னார்ந்தேனே.

என்னுள்ளத்தில் மோனானு பூதியால் மணந்த ஆண்டவனிடம் மானாபிமான மற்று அருள் வாழ்வடைந்தே னெனல்.

310. களிவளர்மோ காணவப்பாழ்ங் கட்டறவே நோக்கி
யொளிவெளியா வுள்ளத் துறைசொருபன் மாட்டுத்
திளைதலுற்ற சுத்த சிவானுபவ மேநா
னளைதலுற்ற மோனானு னுபவ வாழ்வே.

ஆணவக் கட்டறுத்து, உள்ளத்தில் ஒளிவெளியாக விளங்கும் ஆண்டவனுடன் திளைத்த சிவானுபவமே நான் பெற்ற பெருவாழ் வெனல்.

311. மண்டிப் பரந்த மனோதீதச் சிற்பரவாழ்
வண்டியதென் னுள்ளத் ததுதானா நான்விளங்கக்

கண்ட சொரூபவருட் கண்ணாளன் காதலுணர்
வெண்டிசையும் மண்டியகண் டேகரச மாகவே.

மம்முத்தச் சிற்பரவாழ்வே தானாகக் கண்ட சொரூபக் கண்ணாளனின் காதலுணர்ச்சி எனதுள்ளத் தெழுந்து எங்கும் ஏகரசமாகப் பரவிற் றெனல்.

312. அற்ப வடிச்சிலையைநன் கற்புதமா வாண்டபிரான்
கற்பனைதீ ருண்மைக் கழலுக்கே முற்றமுற்றக்
கற்பொழுக்கம் பூண்ட கருத்தா றெளிந்தவருட்
சிற்பரவாழ் வுள்ளந் நினைக்கலுற்றேன் பேதையே.

இவ்வடிச் சிலையை அற்புதமாய் ஆண்டபிரான் கழலுக்கே கற்பொழுக்கம் பூண்டதாற் சிற்பர வாழ்வு நினைத்தே னெனல்.

313. ஆண்டவனென் னுள்ளத் தகமகமென்
னும்புரிப்பாற்
காண்டவரு ஞானக் கலையனுபவங் காட்டினன்;
வீண்டருக்க மான விதண்டைமயல் வேகமனம்
மாண்டொழிய மோனவருள் வாழ்வு மடுத்ததே.

ஆண்டவன் என் உள்ளத்தில் அகமகம் என்னும் ஞானக் கலையைக் காட்டவே, மனம் நாசமுற்று மோன அருள்வாழ்வு கிட்டிற் றெனல்.

314. உண்ணவு பொங்கியென் னுள்ளத்தே
தன்சொருபக்
கண்ணொளியா லூடுருவிக் காரா ணவங்கெடுத்தான்
வண்ணவருள் வாழ்வா மலர்ந்தவனு பூதிதிருக்
கண்ணமுதா வைம்புலனுங் கைப்பக் கடிந்ததே.

ஆண்டவன் கண்ணொளியால் ஆணவமலங்கெட அருள்வாழ்வாக அலர்ந்த அனுபூதி ஐம்புல விஷயங்களை வெறுப்பக் கடிந்த தெனல்

315. உருத்துருத்துச் சுட்டுணர்வா லோர்த்தழுங்கா
துள்ளக்
கருத்தி லொளிர் சொந்தக் கடவுட் பிரான்பாற்
றிருத்திசேர் சித்தந் திருவருள்வாழ் வுற்றேன்
அருத்திசேர் மெய்யன் பனையமேன் மேலே.

குறிப்பு:— சொந்தம்—சொந்த சொரூபம்

சுட்டறிவில் புரியாமல் உள்ளத்திலுள்ள ஆண்டவனிடம் திரும்பி மேன்மேலும் மெய்யன்பு பொங்கி அருள் வாழ்வுற்றே னெனல்.

316. அன்பு சிவமா வகங்கிளரப் பொங்கும்பே
ரின்ப வுணர்வா லிதயம்பூ ரிப்பித்த
நன்பனருள் வாழ்விலிது நண்ணலுற்றுங்
கற்றதுமற்
றிம்பரும்ப ரன்றிமற் றெம்பரின்ப வேட்கையுமே.

அன்பே சிவமாக இதயத்திற் பொங்கும் ஆண்டவனது அருள்வாழ்வு கிடைத்தவுடன், இவ்வுலக மறுவுலக மட்டுமன்றி எவ்வுலகச் சுகங்களிலும் ஆசையற் றொழிந்த தெனல்.

317. தெள்ளிதா வுள்ளத்துத் தேறவொளிர் சுத்தவருள்
வள்ளியோ னான மணாளன் மலர்மார்பத்
தள்ளாக் குறையா வமோக வருட்பெருவாழ்
வள்ளியள்ளி யுண்கின்றே னார்வமேன்
மேலெழவே.

ஆண்டவன் மார்பிலணைந்து, குறைவற்ற அருட்பெருவாழ்வை யள்ளியள்ளி யுண்கின்றே னெனல்.

318. உந்துமகப் பேயை யுடற்றியுளத் தொட்பநுட்ப
விந்தைசேர் மோன வெளிவடிவா வாண்டபிரான்
சொந்தவடி வான துரியமாத் தோய்தலால்
அந்தமில்பே ரின்ப வருள்வாழ் வடைந்தனே.

அகப்பேயை யழித்து மோனவெளியாக என்னையாட்கொண்ட பெருமான் என் சொரூபத் துரியமாகவே ரமித்தலாற் பேரின்ப வாழ் வடைந்தே னெனல்.

319. நம்பனென் னாருயிர் நாதன் அடிச்சியேன்
வன்பு பொதிந்த மனத்தூடு நோக்கலால்
அன்பு மலிந்த வருட்பெரு வாழ்வுற்றேன்
இன்பமா மோன வியற்சிற் பரத்திலே.

என் நாதனை ஆண்டவன் என் மனத்தை ஊடுருவி நோக்கலால் சிற்பரத்தி லன்புற்று அருள் வாழ் வடைந்தே னெனல்.

320. உணக்கலுற்றுப் பாழ்படநா னாழ்த்தொழிந்தே னுள்ளத்
திணக்கிலா மோன வியற்பரமாப் புக்கு
மணக்கலுற்ற தெய்வ மணாள னடிக்கீழ்
வணக்கமுற வைகுமது வைகுந்த வாழ்வே.

கீழ்ப்பட்டஎன் னுள்ளத்திற் புகுந்து மணந்த தெய்வ மணாளனடியில் வணங்கி யிருப்பதே எனக்கு வைகுந்த வாழ்வாகு மெனல்.

321. கள்ளமா மோகவகக் கன்னிமைமுற் றக்கரைய
உள்ளமே யாக வொளிர்சொருபத் தெள்ளமுத
வெள்ளமா வென்னை விழுங்கியசற் போதவருள்
வள்ளலா லுற்றதுசெம் மாண்பதவாழ் வேழைக்கே.

உள்ளமாய் விளங்கும் சொருப அமுத வெள்ளத்தில் என் கள்ளக் கன்னிமையை முற்றுங்கரைத்த வள்ளலாற் பரமபத வாழ்வு கிட்டிற் றெனல்.

322. அருட்பூ ரணமா வமைந்த சிவத்தில்
விருப்பூர் மனத்தால் விபூதியுண் டாகத்
திருப்பூட்டி யாண்டசிவச் செம்மலென்னோ டொன்றுப்
புரிப்பா லிதயத்திற் பொங்கியது வாழ்வே.

சிவபக்தியால் எனக்கு மேன்மையுண்டாகுமாறு மங்கல நாண்பூட்டி மணந்த ஆண்டவனோடு ஒன்றாக ஸ்புரிப்பதால் எனக்கு வாழ்வு பொங்கிய தெனல்.

323. நள்ளலுற்ற வென்னைமெய்ஞ் ஞானப் பிரானான
வள்ளல் சொரூபவருள் வண்பதத்தில் வாழவைத்தான்;
துள்ளு மகந்தைச் சுழலான பாசபந்தக்
கள்ள மயக்கமனக் கலக்கம் பேர்ந்ததே.

ஆண்டவன் காதல் கொண்டு என்னைச் சொரூபநிலையில் வாழ வைத்தான். அதனால் பாசபந்த மனமயக்க மொழிந்த தெனல்.

324 மோனத்தா லென்னை முயங்கினான் றன்னோடு
நானைத் தொழுகலுற்ற ஞானானு பூதியால்

ஊனவெம் பாசவுணர் வோய்ந்தொழிய வுள்ளத்தில்
வானப் பரசொருப வாழ்வு மடுத்ததே.

மோனத்தாலென்னைக் கலந்த ஆண்டவனுற் பெற்ற ஞானுனுபூதியால் பாச வுணர்வொழிந்து பரசொரூப வாழ்வு கிடைத்த தெனல்.

325. சத்தி நிபாதவருட் சால்பளித்த சற்குருவாங்
கர்த்தனுக்கே கற்புக் கடன்பூண் டொழுகலுற்றேன்;
பத்தினியா வென்னைப் பரிந்தேற் றருளியடிக்
கத்தனளித் தான்சொரு பானந்த வாழ்க்கையே.

சக்திநிபாத மளித்த என் சற் குருவாகிய தலைவனுக்கே கற்புக்கடம் பூண்டேன். அவன் என்னைப் பத்தினியாக ஏற்றுச் சொருபானந்த வாழ்வளித்தா னெனல்.

326. விருத்தமா வுள்ள விபூதியால் உள்ளக்
கருத்தின்ன தென்றெவருங் காணவொண்ணுப்
பெம்மான்
பொருத்தமற்ற வென்னைப் புணர்ந்தான் சொருபத்
திருத்தியுற்று வாழ்வு திருந்தப்பெற் றேனே.

ஆண்டவன் பக்குவமற்ற தம்மை அருளாற் புணர்தலின் வாழ்வு திருந்தப்பெற்ற தெனல்.

327. அருள்வாழ்வு வாழவெனக் காணையிட்ட வாண்டான்
அருள் வாழ்வு தானு வகந்துலங்கச் சேர்ந்தான்;
அருள்வாழ்வா வுள்ளத் தமைந்த சொருபத்
தெருள் வாழ்வு சுத்த சிவக்கே வலமே.

" அருள் வாழ்வு வாழ்க" என்று ஆண்டவன் எனக்கு ஆணையிட்டதோடு, தானே அருள் வாழ்வாகவும் என்னைச் சேர்ந்தான், அது கைவல்ய சிவ சொருபமே யாயிற் றெனல்.

328. வணக்கி யெனைத்தன் மலர்ச்சிற் பதத்துக்
கணுக்கத்தொண் டாக வருளினன் றன்மாட்
டிணக்கமுற்றே னுள்ளத் திறைவன் சொருப
மணக்கலப்பா மைக்கியமெய் வாழ்வலர்வுற் றேனே.

என்னைத் தன்னடிக்கு வணக்கி அணுக்கத் தொண்டாக்கிய ஆண்டவனோடு பெற்ற மணக்கலப்பால் மெய்வாழ் வடைந்தே னெனல்.

329. அணைந்த சொரூப வருளாந் தெருளாற்
றணந்ததுமா மோகத் தடுமாற்றம் பொன்றத்
தணிந்ததுநா னென்னுமனத் தாபங்கூர் வேட்கை
புணர்ந்ததுப சாந்தமியற் பூரணமெய் வாழ்வே.

அருள் ஞானத்தால் அடைந்த அரும்பெரும்பயன்.

330. மயக்க வகப்பேய் மனத்தா லுலகத்
துயக்கமுற் றேனை யுணர்வுருவாந் தேற்றிக்
கயக்கமறு சுத்தவருட கைவல்யந் தன்மை
நயக்கவளித் தாண்டதயா நாதனென்மெய்
வாழ்வே.

அகங்கார மயக்கத்தால் துன்பமுற்ற என்னை அறிவுமயமாய் விளக்கிக் கைவல்ய மளித்தாண்ட நாதனே எனக்கு மெய்வாழ்வாகு மெனல்.

331 ஒள்ளியோ னான வொருத்தனென் பாலருளிக்
கள்ளியே னென்மன் கருத்தைத் திருத்தியருள்
வள்ளியோ னாக மடுத்தங் கிதயத்துத்
தெள்ளியதெய் விகத் திருவருள்வாழ் வுற்றதே.

ஆண்டவன் தன்னருளால் என் கள்ளக் கருத்தைத் திருத்தி இதயத்தெழுந் தருளியவுடன் திருவருள்வாழ் வுற்றதெனல்.

332. நீளத் தொடர்ந்துசிவ நேயவுணர் வூறவுளத்
தாளன் கலந்தமோ னனுபவ மாட்சியாற்
கோளரா வாம்பொய்க் குடிலகப் பேயுணர்வு
மாளப் பரசொருப வாழ்வு மடுத்ததே.

உள்ளத்தில் அன்பு தொடர்ந்தூற ஆண்டவன் கலந்ததால் அகந்தை யுணர்வழிந்து பரசொருப வாழ்வு எய்திற் றெனல்.

333. ஒளிவெளியா வுள்ளத் தொளிர்சொருப மாண்பால்
இளிவரல்சே ராமலெனைக் கலந்த பெம்மான்
தெளிவளர்பே ரின்பத் திருவடியெங் கெங்கு
மனைவதாற் பற்றிற் றகண்பரமெய் வாழ்வே.

கீழ்மை சேராதவாறு என்னை உள்ளத்திற் கலந்த ஆண்டவனது திருவடி எங்கெங்கும் அனுபவ மாவதால் அகண்ட பரவாழ்வு பெற்றே னெனல்.

334. ஆழக்கண் ணோக்கி யணைந்தகண் ணாளனால்
ஊழற் றொழிய வுணர்வு சிவமயமா
வாழக் கிடைத்தேன் வளஞ்சே ரருள் வைப்பிற்
பாழற் றொளிர்சொருபப் பார்வை பரக்கவே.

ஆழ்ந்த அருணோக்கால் என்னைக் கண்ணாளன் அணைந்ததால் பிராரப்தம் ஒழிந்து, சொரூபப்பார்வை கிடைத்து, உணர்வு சிவமய மாகிய வாழ்வு பெற்றே னெனல்

335. கூர்மை யிலாதமடக் கொச்சையேன் சுத்தசிவச்
சீர்மைசேர் வாழ்வு திளைக்கலுற்றேன், மோனவியற்
பார்வையா லுள்ளுணர்விற் பற்றவின் பப்புளக
நீர்மை யருளியவென் னேய னருளாலே.

---

குறிப்பு : நீர்மை பார்வையால் பற்ற எனக்கூட்டலேயன்றிப் பார்வையால் அருளிய எனக் கூட்டினு மமையும்.

கூர்றி வற்ற மடக் கொச்சையான நான் எனது நேயனின் அருளால் உள்ளுணர்விற் பார்வை பற்றி இன்பப்புளகமெழும் சிரருள் வாழ்வு திளைக்கப் பெற்றே னெனல்.

336. மயலால் வருந்திய மாய மனத்தேன்
உயலாக நோக்கி யுணர்வித்த வாற்றல்
அயலற் றொளிர்சொருப வாண்டவனைக் கூடி
யியல்வாழ் வடைந்தே னிநயத் தலத்தே.

ஆண்டவன் என்னைக் கண்ணோக்கால் உய்வித்ததால் ஏக சொரூபனான அவனைக் கூடி ஸஹஜ வாழ் வடைந்தே னெனல்.

337. தனிமையில்வந் தென்னைக் கலந்தான் சொருப
வினிமையிலாழ்ந் தென்னை யிழந்தேனுக் கூன
மனமெனும்பொய்ம் மாயமற மல்கியது சிந்தைத்
துனிமையற்ற மோன சுயசொருப வாழ்வே.

தனிமையில் வந்து கலந்த ஆண்டவனது சொரூப சுகத்தில் என்னை யிழந்தேன். அங்கு மனமழிந்து மோன சுய சொரூப வாழ்வு பொங்கிய தெனல்.

338. யானுரோ தானுரோ வென்றதடு மாற்றமற
மோனுனு பூதி முயங்கலா லோரியல்பா,
யானென வென்னை யிழந்தே யிதயவருள்
வானு மவன்சொருப மாட்சியில்வாழ் கின்றேனே.

'நான்-தான்' என்ற பேதமற்று ஞானுனுபூதி விளங்குவதால், என்னையிழந்து அருளாகாயமான அவன் சொருபமாகவே வாழ் கின்றே னெனல்.

339. ஒரானொருபே ரின்பவுணர் வூற்றன வுண்மைப்
பிரான்சொருப வாழ்வாற் பெருகலுற்றேன், காமக்
குரோதமுத லான கொடும்பிணிசேர் வஞ்சத்
திரோத மயக்கமறச் செற்றவரு ளாலே.

திருவருளாற் காமக் குரோதங்களை யழித்த பேரின்ப வுண்மைப் பெருமானின் சொருப வாழ்வு பெருகலுற்றே னெனல்.

340. அருளாலே யென்னை யணைந்தபிரான் பாதத்
திருள்சே ரகந்தை யிகத்தலால், அன்பே
சொருபமாத் துன்று சுவானுபவ மோனப்
பெருவாழ்வு பெற்றுப் பிறங்கலுற் றேனே.

என்னை யணைந்த ஆண்டவன் பாதத்தில் அகந்தை யழிந்து, அன்பே சொருபமான மோனப் பெருவாழ்வு பெற்றே னெனல்.

341. தண்ணளியா லாண்டபெருந் தம்பிரா னெம்பிரான்
உண்ணனவா வென்னேடு டுறவு கலத்தலாற்
பெண்ணரசி யாயப் பிறங்குபெரும் பாக்கியவாழ்
வண்ணலா லுற்றேனே ரற்ப வடிச்சியே.

ஆண்டவன் ஞானநனவாக இவ்வடிச்சியை உறவு கலத்தலால், பெண்ணரசியாகும் பெரும் பாக்கிய வாழ்வுற்றே னெனல்.

342. முகத்தலரு மோன முழுமுதல்வாழ் வுள்ளத்
திகத்தலரு தன்மெய் யியல்பாக வென்று
மகத்தொளிர வென்னை யணைந்தபிரா னுண்மை
மகத்துவத்தோ டொன்று மலர்ந்ததென் வாழ்வே.

மோனமே என் மெய்யியல்பாக உள்ளத்தி லணைந்த ஆண்டவனின் மகத்துவத்தோடு என் வாழ்வும் ஒன்ருகி மலர்ந்த தெனல்.

343. மஞ்சன் மணாளன் மனோதீத வாழ்வாவென்
னெஞ்சிலே புக்கு நிரம்பினான் சுத்தவருள்
விஞ்சையா லென்னுள் விளங்கியமெய்த் தற்பரத்தில்
வஞ்சவகங் கார மயக்கமறக் கெட்டதே.

என் மணாளனான ஆண்டவன் என்னுள்ளத்தில் நிரம்பியதால் தற்பரம் விளங்கி அகங்கார மயக்க மழிந்ததெனல்

344. இருந்தொளிர்பே ரின்ப வியற்பிரான் என்னுட்
பொருந்துசிவ ஞானானு பூதிப் புலமாத்
திருந்த வொளிர்வாற் செழிக்கவாழ் கின்றேன்
கரந்தொழிய மோகவகங் காரப் பிழையே.

சச்சிதானந்தப் பெருமான் என்னுள் ஞானானுபூதிப் புலமாக விளங்குவதால் அகங்காரம் நீங்கிச் செழித்து வாழ்கின்றேனெனல்.

345. இருள்சே ரகப்பா ழிகப்பவென் னுள்ளத்
தருளா லவனை யறிந்தாங் ககச்செம்
பொருள்வாழ் வமோகமாப் பொங்கலான் மங்கிற்
றிருவா தனைசெய் யிடரின் படரே.

ஆண்டவனை உள்ளத்திலறிந்தவுடன் அவ்வகப்பொருள் வாழ்வு அளவற்றுப் பொங்கவே, வாதனைத் துன்பங்கள் மாய்ந்தன வெனல்.

346. மருள்வளஞ்சே ராணவப்பொய்ம் மானுபி மான
வெருள்விகற்பக் கற்பனையின் மித்தையற வுள்ளத்
தருள்வளவ னானவென் னாண்டவனைக் கூடிப்
பொருள்வளஞ்சேர் வாழ்க்கைப் பொலிவுபெற்
றேனே.

மானுபிமானக் கற்பனையற உள்ளத்தில் என் ஆண்டவனைக்கூடி மெய்ப் பொருள் வாழ்வு பெற்றேனெனல்.

347. கோயிலா வுள்ளமே கொண்டபிரான் சிற்பதத்து
நேய மெனக்கு நிரதிசயா னந்தமா
வேயலா லுற்றே னியற்பரமெய்க் கைவல்ய
நாயகவாழ் வான நமச்சிவா யப்பதமே.

உள்ளமுற்ற ஆண்டவனிடம் எனக்கு நிரதிசயானந்த அன்பு மேலிட்டதால் கைவல்ய நாயக வாழ்வான நமச்சிவாயப் பதம் பெற்றேனெனல்.

348. எள்ளத் தனையுமனக் கேதமா மேக்கமறத்
தெள்ளமுத வாழ்வாத் திளைப்பதுநான் சிக்கெனவென்
னுள்ளத்தைக் கொள்ளைகொண்ட வொள்ளியான் பாலெனக்கு
வெள்ளமே யாக விளைந்தசிவ போகமே.

நான் தெள்ளமுத வாழ்வாகத் திளைப்பது என்னுள்ளங் கவர்ந்த ஆண்டவனிடம் விளைந்த சிவபோகமே யெனல்.

349. சோரஞ்செய் கன்னிமையின் சூதாற் சுழலாது
பேரின்ப வாழ்வாப் பிறங்கு சிவானுபவச்
சீரன் புளஞ்சுரக்கச் செவ்விதின்வந் தாண்டவன்பால்
வாரம் படைத்தேன் வசிகரவாழ் வுற்றேனே.

அகந்தைக் கன்னிமையின் சூதாற்கெடாமல் சிவானுபவ முண்டாகும்படி என்னை யாண்ட தலைவனிடம் அன்பு பூண்டு வசீகர வாழ்வுற்றேனெனல்

350. உணங்கலுற் றேனை யுளங்கனிந்து நோக்கி
மணங்கலந்த வாண்டான் மனத்தோ டொருமித்
திணங்கலுற்ற வாழ்வே யியற்பரவீ டாக
நுணங்கியமோ னனுபவ நோக்கவசி யென்னே.

. ........

குறிப்பு :— வசி — வசீகரம்

என்னைக் கனிவோடு கடாக்ஷித்து மணங்கலந்த ஆண்டவனோடு மன மொத்து நின்ற வாழ்வே மோக்ஷமாயிற் றெனல்.

351. தனக்குரிமை யாகத் தடுத்தாண் டிதயத்
தெனக்கினிய னாக வியல்சொருபப் பெம்மான்
மனைக்கிழத்தி யாக மடுக்கலுற்ற வாழ்வு
நினைக்கரும்பே ரின்ப நிரதிசய வீடே.

தனக் குரிமையாக என்னைத் தடுத்தாண்ட பெருமானது மணைக் கிழத்தியான என் வாழ்வு நிரதிசய மோக்ஷானந்தமே யெனல்.

352. ஆசை யகன்றொழிய வாண்டவன்பாற் பொங்கியபே
ராசையால் வாழ்வுமெய் யன்புமய மாகவெனக்
கேசகல்பே ரின்ப வியற்சிற் பரவெளியாப்
பாச வுலகு பரிணாம முற்றதே.

ஆண்டவனிடம் பெருகிய ஆசையால் என்வாழ்வு அன்புமயப் பேரின்பமாகி, உலகு சிற்பரானந்த வெளியாக மாறிற் றெனல்.

353. துன்றியதெய் வத்தின் சுபவிளைவால் வந்திதய
மன்றிலே யென்னை மடுத்தபிரான் சிந்தனையில்
ஒன்றியநெஞ் சத்தே னுணர்வூ டொளிர்சொருப
வென்றிசேர் வாழ்வு விசுத்தப் பரவெளியே.

முற்றவப் பயனுய் வந்து என்னைக் கலந்த என் ஆண்டவனின் தியானத்திற் பதிந்த என் வாழ்வு விசுத்தப் பரவெளியே யெனல்.

354. பிதிர்வுறுபொய்ம் மோகவகப் பேய்கரப்பத் தன்சிற்
பதவொளியா லென்னைப் பளீரென் றொளிர்வித்
துதவியவாண் டானொடுநா னென்றுபட்ட வாழ்க்கை
இதவியபே ரின்பவுணர் வென்றுமரு வூற்றே.

அகப்பேய் மறைந்து ஆன்ம தரிசனம் பளீரென்று காட்டிய ஆண்டவனோடு நான் ஒன்றுபட்ட வாழ்வின் இன்பம் என்றும் மாறா தெனல்.

355. வலிந்துபற்றி யென்னையருள் வண்மையால் *இன்ப
நலங்கலந்த சொந்தான்ம நாதனொடு கூடிக்
கலந்தவியல் வாழ்வே கழிபே ருவகை
மலிந்தசுப மோனம் மதித்தலரு மாண்பே.

---

*இன்பநலங்கலந்த—பேரின்பநலன் உண்டாகக் கலந்த.

என்னை வலிந்து கூடிய ஆன்மநாதனோடு கலந்த பேரின்ப மோன வாழ்வு மதித்தற் கரிய தெனல்.

356. அன்பி லழுந்தலுற்றேன் ஆசாபா சக்கலக்கத்
துன்ப மறக்கழனமற்றேன் சுத்தப் பரசொருப
நன்பனே நாதனு ஞானவருள் வாழ்க்கைநடாத்
தின்பமீ தூர வியைதலா லுள்ளத்தே.

உள்ளத்தில் பரசொருப ஆண்டவனே நாதனுகி ஞானவாழ்க்கை நடத்துவதால் அன்பிலழுந்தி ஆசாபாசத் துன்பம் அகன்றே னெனல்.

357. தென்னன் பரமார்த்த சித்த னடிச்சியா
மென்னன்பு முற்ற வினிதுகொளே கொண்டபிரான்
றன்னடியில் வாழ்வு தழைத்தவாற் ருலிதயத்
தின்னமுத மாக வியன்ற தனுபவமே.

என்னன்பைக் கொள்ளை கொண்ட பரமார்த்த சித்தனை ஆண்டவ னடியில் வாழ்வதால் உள்ளத்தில் அமுதானுபவம் பெற்றே னெனல்.

358. ஓதவொரு சற்று மொணுத வுதாரவருட்
போத சொருபானு பூதிப் புலம்பொங்கக்
காதலா லென்னைக் கலந்தபிரா னன்பணைப்பிற்
பேர்தரா தென்றும் பெருகவாழ் கின்றேனே.

சொருபானுபூதி விளங்க என்னைக் காதலாற் கலந்த ஆண்டவனது அன்பணைப்பினின்றும் நீங்காது என்றும் வாழ்கின்றே னெனல்.

359. என்னவொண் ணுத வியற்பிரான் சுத்தவருள்
வண்ணமா வாழ்வு மலர்ந்திடக்கண் ணோக்கினுன் ;
உண்ணனவு முற்ற வுடையான் சொருபமா
அண்ணனிக்க லுற்ற வருள்வாழ் வழகிதே.

ஆண்டவன் தன் கண்ணோக்கத்தால் என் வாழ்வை அருள் வண்ண மாக மலர்வித்தான்; அதனுல் அவன் சொருபமயமேயான என் வாழ் வின் அழகுதான் என்னே யெனல்.

360. சிற்பரமா வாண்ட சிவன்கழலே யன்றியெனக்
கற்பமுமே வேருே ராணில்லை ; சுத்தவருட்
கற்பகமா வென்னுட் கலந்த பிரான்சொருபப்
பொற்பதமே தாரகமாப் பொங்கவாழ் கின்றேனே.

ஆட்கொண்ட சிவன்கழலே எனக்கு அரண். அருட் கற்பகமாக என்னுட் கலந்த அவன் பதமே காப்பாக வாழ்கின்றே னெனல்.

(வெண்பா)

361. தவஞ்செய்ய நானுர் தவமே யுருவா
மவன்சொருப மாக வணைந்தான்—சிவமே
மனம்பொறிக ளோடு மடுத்தலால் வாழ்வே
தனம்பெருகு மோனத் தவம்.

தவமே உருவான ஆண்டவன் என் சொரூபமாகவே அணைந்ததால் தவம் செய்ய நானுர்? என் வாழ்வே தவந்தா னெனல.

362. சிவனியல்பாந் தன்மத் திருத்தக்க மாண்பால்
அவனியில்வந் தன்புருவா வாண்டான்—தவனியா
நோற்றநான் முன்செய்த நோன்புகை கூடப்பெற்
றுற்றவருள் வாழ்வடைந் தேன்.

அவனியிற் குருவா யவதரித்த சிவனுகிய ஆண்டவனுல் என் முற்றவம் முடிந்து அருள் வாழ் வடைந்தே னெனல்.

363. அபரிமித மாக வருட்செல்வ வாழ்க்கை
யபலையாம் பேதைக் களித்தான்—சபலமுறு
மாயா விலாச மயக்குவிட் டோய்ந்தது தன்
னேயானு பூதியிலென் னெஞ்சு.

ஆண்டவன் அபரிமிதமான அருட்செல்வ வாழ்க்கையை எனக் களித்ததால் மயக்கமற்று என் நெஞ்சு அவனது நேயானுபூதியில் ஓய்ந்த தெனல்.

364. அற்றமறு ஞான வருட்பிரான் மோனவொளி
யுற்றதா லுண்மை யுணர்வுண்டாய்—முற்ற
வபலையாம் பேதை யலமரலற் றுர்ந்தேன்
கவலையற்று வாழுங் கருத்து.

அருட்பிரானது மோனவொளியால் அபலையாகிய எனக்கு மெய் யுணர்வு உண்டாகிக் கவலையற்று வாழும் பேறு பெற்றே னெனல்.

(குறள்)

365. அகப்பொருள் வாழ்வென் னகத்தே முகப்பத்
திளைப்பதென் சிந்தை சிவத்து.

366. அகப்பொருளா வுள்ளவென் னம்மானைச் சற்று
மிகப்பிலா வாழ்வுபெற் றேன்.

367. அணுக்கத்தொண் டானநா னேர்ந்தே னவனால்
மணக்கப்பெற் றேங்குமனை வாழ்வு.

368. மங்கலவாழ் வாக மடுத்த மணாளனருட்
பொங்கலாற் புந்திபொலிந் தேன்.

369. குணநலங்கூ ரின்பவருட் கோமானோ டுண்மை
மணமலிந்த வாழ்வு மகத்து.

370. மங்கலவாழ் வாக மடுத்தானென் னுள்ளுணர்விற்
பங்கமில்பே ரின்பப் பரன்.

371. மங்கலவாழ் வாக மணங்கலந் தாண்டபிரான்
பங்கமிலா வுண்மைப் பரன்.

372. கலந்தென்னை யாண்டவருட் கண்மணியால் வாழ்வு
மலிந்தமன மின்ப வடிவு.

373. நிறைவுணர்வா நீடு நிஜானுபவத் தென்னைப்
பிறிவறவாழ் வித்தான் பிரான்.

374. என்னின்வே றன்றா யிதயத் தொளிர்சொருப
மன்னன்பால் வைகியதென் வாழ்வு.

375. இன்புணர் வாக விதயத் தியல்சொருப
நம்பனருள் வாழ்வே நலன்.

376. தானாக வென்னைத் தலையளித்த வாண்டவன்பால்
வானு மலர்ந்ததென் வாழ்வு.

377. உணர்வாக வுள்ளவோ ருண்மைப் பிரானைப்
புணர்வாற் பொலிவுபெற் றேன்.

378. கொண்டான் குறிப்பறியப் பெற்றவருட் கூட்டத்தாற்
பெண்டாள் பெருஞ்சிறப்புற் றுள்.

## ௬௪—மெய்யன்பு மலர்தல்

### (கொச்சகக் கலிப்பா)

379. தன்பாலே யென்னைத் தலையளித்துத் தற்பரமா
வென்பாலென் றென்று மிலிர்துறையும் பெம்மானை
முன்போலே யன்றிநான் முற்றமுழுச் செம்மனத்தா
லன்பே சொரூபமா வாராதிக் கின்றேனே.

என்னையாட் கொண்டு உள்ளத்துறையும் பெருமானை, முன்பு போலன்றி, இப்போது அன்பே சொரூபமாய் ஆராதிக்கின்றேனெனல்.

380. கூரன்ப ருள்ளங் குடிகொண் டொளிர்சொருபப
பேரின்ப வாழிப் பிரானுன் சொரூபவருள்
வாரம் பயிலாவுன் மத்தையே னுள்ளத்திற்
கூரன் புணர்வூறக் கூடிக் கலந்தானே.

அன்பருள்ளங் குடிகொள்ளும் ஆண்டவன் சொரூபத்தில் அன்பற்ற என்னுள்ளத்தில் அன்புணர்வு ஊறுமாறு அவன் கூடிக் கலந்தானெனல்.

381. அந்தமிலா வண்புகழ்மே ரம்மான் அகத்தேற
வந்தமரப் பெற்றேன் மணிமங் கலவாழ்வா
எந்தையா ராண்டவன்பே ரின்பவருள் வாழ்வினைந்து
சந்ததமெய் யன்பு தழைத்துப் பழுத்ததே.

ஆண்டவன் மணிமங்கல வாழ்வாக அகத்தே அமர்தலால் பேரின்ப வாழ்வில் மெய்யன்பு பழுத்த தெனல்.

382. எஞ்சிற் றெதிலுமெனக் கிச்சை யெழாதொழிய
நெஞ்சத் தலத்து நிரதிசயா னந்தவருள்
விஞ்சத் துலங்க விளைவித் தருளியவென்
மஞ்சற்கென் னுள்ளம் மலர்ந்ததுமெய் யன்பலர்ந்தே

பிறவற்றில் எனக்கு இச்சை சிறிதும் எழாதவாறு உள்ளத்தில் நிரதிசயானந்தம் விளைந்த மணாளன்பால் எனக்கு மெய்யன்பு மலர்ந்த தெனல்.

383. நள்ளிதயத் தூடுமெய்ஞ் ஞான வருட்பிழம்பாத்
தெள்ளியதன் னுண்மைத் திருவுருச்சாட் சாற்கரிக்க
உள்ளலரு மோன வுணர்வளித்த காதலன்பால்
வெள்ளமாப் பொங்குசுப வேட்கைபொங் குற்றதே.

உள்ளத்தில் ஞானப்பிழம்பான தன்னுண்மையை நான் சாக்ஷாத் கரிக்குமாறு மோனவுணர் வளித்த காதலன்பால் சுப வேட்கை பொங்கிற் றெனல்.

384. வருந்தலுற்ற மோக மனக்கலக்கம பேரத்
திருந்த விளங்கு சிவானுபவ மோனம்
பொருந்த வளித்தவருட் பூரணன்பா லூற்றுச்
சுரந்தமெய் யன்புணர்வாற் சோபனமுற் றேனே.

மனக் கலக்க மகற்றிச் சிவானுபவ மோன மளித்த ஆண்டவனிடம் பெருகிய அன்பாற் சோபன முற்றே னெனல்.

385. கறையுற்ற பாழகங் கார முனைப்பாங்
குறையற்ற மோன நிறைவா வகத்தே
இறையெற் கருளியபே ரின்ப வுணர்வால்
வறையற் றெழிய மலர்ந்ததுமெய் யன்பே.

குறிப்பு :—வறை - வறட்சி, வறட்டியல்பு

அகந்தையற்ற மோன நிறைவாக ஆண்டவன் எனக்கருளிய பேரின்பத்தால் மெய்யன்பு அளவற்று மலர்ந்த தெனல்.

386. பின்னியவெம் பாசப் பிணக்கறத்தன் கண்ணேக்காற்
றன்னடிக்கே முற்றத் தலைப்படுவித் தாண்டபிரான்
மன்னியமெய்ஞ் ஞானவருள் வாரிதியே யுள்ளமாத்
துன்னுவித்தாற் கன்பு சொருபமாப் பெற்றேனே.

பாசமற என்னைக் கண்ணோக்கால் தன்னடிக்கே யாண்டு, என்னுள்ளத்தை யருட் கடலாக்கிய ஆண்டவன்பால் நான் கொண்ட என தன்பே ஆன்ம சொருப மெனல்.

387. காரா ணவத்தேன் கடவுட் பிரான்கருணைக்
கூரார்கண் ணேக்கக் குறியே குறிக்கொண்டு

சீரார் சொரூபந் திளைக்கலுற்றேற் குள்ளுணர்விற்
பேராசை வாரி பெருக்கெடுக்க லுற்றதே.

ஆண்டவன்றன் கருணைக் கண்ணோக்கத்தையே குறியாகக் கொண்டு சொருபந் திளைப்பதால் என்னுணர்வில் அவனது பேராசையே பெருக்கெடுத்த தெனல்.

388. கற்பனை மோகக் கலக்க மலக்கமறச்
சிற்பரவாழ் வாகத் தெளிந்த சிவானுபவத
தற்பமடப் பேதையைநன் காழ்த்தலுற்ற
வாண்டவன்பால்
அற்புணர்வு தப்பருநல் லாற்றொழுங்கா நீண்டதே.

கற்பனையற்ற சிற்பர வாழ்வான சிவானுபவத்தில் என்னை ஆழ்த்திய ஆண்டவனிடம் ஆற்றொழுக்காக அன்பு மிகுந்த தெனல்.

389. பேரின்ப மோனவருட் பெம்மான் சொரூபமாக்
கூரன்பென் னுள்ளங் குலாவ வருளினான் ;
சோரம் படுபாசச் சூதகல்சுத் தானுபவ
சாரம் பொதிந்த சமாதி தழைத்ததே.

குறிப்பு : அனுபவசாரம் – சாரமான அனுபவம்; சமாதி- ஞான சமாதி.

ஆண்டவன் எனக்குச சொரூப பக்தியருளவே பாசமற்றுச் சுத்தானு பவ சாரமாம் சமாதி எனக்குத் தழைத்த தெனல்.

390. உய்யவென் னுள்ளத் துணர்வொளியா மற்றசிவச்
செய்யன் சொரூபவருட் சிற்பரவாழ் வெய்தலால்
ஐயறிவு மோரறிவா வான்றமோ னானுபவ
மெய்யன் பியல்பா விளங்க விளைந்ததே.

ஆண்டவனின் சொரூப வாழ்வைப் பெற்றதால் மோனானுபவ மெய்யன்பு என்னுள் விளைந்த தெனல்.

391 ஐயன் பதத்திலெனக் காரா வமுதமாம்
மெய்யன் புணர்ச்சி விளைதலால், யானெனும்பொய்ம்
மையலற்ற சுத்தவருள் வாழ்வு மலிந்ததகம்
பொய்யா வொழியமற் றெல்லாப் புலன்களே.

ஐயன் பதத்தில் எனக்கு மெய்யன்பு விளைதலால், புலனறிவுகள் நீங்கி, அகந்தை மையலற்ற அருள் வாழ்வு நிறைந்த தெனல்.

392. அன்பா லணைந்த வருட்பிரான் அந்தமில்பே
ரின்பா லிதயத் தியைதலால் யானெனும்பாழ்
வன்பான துன்ப மனங்கரையப் பொங்கியது
தன்பா லெனக்குச் சனித்தமெய்க் காதலே.

ஆண்டவன் அன்பா லென்னை யணைந்து பேரின்பமாக உள்ளத் துறைதலால் அவனிடம் எனக் கேற்பட்ட காதல் மனோநாசமாக்கிப் பொங்கிய தெனல்.

393. ஈரம் பொதிந்த விரக்கமில்வன் னெஞ்சுருகக்
கூரும் பரிவுணர்வாற் கூடிக் குலாவலுற்றான்;
பேரின்ப மோனவருட் பெம்மான் பதத்திலெனக்
கூரன் புணர்வா லுளங்கிளரப் பொங்கியதே.

ஆண்டவன் என்வன்னெஞ்சம் உருகப் பரிவாற் கூடிக் குலாவினான் அப் பேரின்பப் பதத்தில் மிகுந்த அன்புணர்வால் உள்ளங் கிளரப் பெற்றே னெனல்.

(வெண்பா)

394. என்புக்கி லாக வியல்சிற் பதரமணற்
கன்புற்ற வாழ்க்கை யமுதமாம்—இன்பக்
களிமயமாப் பொங்குசிவக் காதலன்றி மற்றோ
ரொளிமயநான் காணே னுயிர்க்கு.

என் புக்ககமான ஸ்ரீ ரமணனுக்கு அன்புறுவதே அமுத வாழ் வாகும். பேரின்பமாகப் பொங்கும் இச் சிவக்காதலைத் தவிர உயிருக்கு ஒளி வேறொன்று மில்லை யெனல்.

(குறள்)

394. (a) இன்பவியல் காட்டிக் கொடுத்த விறைரமணற்
கன்புமயல் பூண்டே னகத்து.

395. கலந்தவருட் கண்ணாளன் காதலா லுள்ளத்
தலர்ந்ததிரண் டற்றமெய் யன்பு.

396. தெளிந்த சொரூபவருட் சிற்பரன்பா லுள்ளத்
தளைந்த தெனக்குமெய் யன்பு.

397. இன்பக் கடலான வெம்மா னருட்பதமெய்
யன்பிற் களித்த தறிவு.

398. விழைவிலா வென்னை விழைவூட்டி யாண்டான்
பிழைதீர் சொரூபப் பிரான்.

399. இன்பவியல்பா மிறைவன்பால் யானுழுவ
லன்பலரக் கண்டே னகத்து.

400. கேவலசச் சித்தாக் கினர்சொருபன் மாட்டடியேற்
கார்வமெழப் பொங்கிற் றகத்து.

401. ஒள்ளியவொ வாண்டவன்பால் உட்கூரக்கப் பொங்கியது
விள்ளவொணா வுண்மை விருப்பு.

402. கற்பொழுக்கம் பூண்ட கருத்தாலே சிற்பரமெய்
யற்பொழுக்கம் பொங்கிற் றகத்து.

403. பேரின்ப வாழ்வாப் பிறங்கலால் ஆண்டவன்மாட்
டோரன் பளைந்த துளத்து.

404. இருப்புணர்வா வுள்ளபே ரின்பப் பிரான்பால்
விருப்புணர்வூர் கின்றதுமேன் மேல்.

405. தன்னந் தனிப்பர மான சதாசிவமா
வன்னமுற்றே னன்பு மலர்ந்து.

## ௩௨—உறவு

(வெண்பா)

406. பிரானடியே பேணப் பிறந்தவெனக் கேனை
யொராளொருவ ரோடு முறவேன்—பராபரமா
மோனவருட் கேவலத்தே மூண்டொளிரப்
பெற்றுமனந்
தானவனுக் கேயாந் தகைத்து.

ரமணபிரானடியே பேணப் பிறந்த எனக்குப் பிறரொருவர் உறவு ஏன்? என் மனம் அருட் கேவலத்தை யுற்று அவனுக்கே உரிமை உடையதாயிற் றெனல்,

407. மனக்கேதஞ் செற்றாண்ட மன்னனுக்கே யன்றி
யெனக்கேயு நா னுரிமை யில்லேன்—தனக்கே

முழுக்க முழுக்க முறியடிமை யானேற்
கொழுக்கமன்று மற்றோ ருறவு.

மனக்குற்ற மறுத்தாண்ட ரமணபிரானுக்கன்றி எனக்குக்கூட நான் உரிமையில்லேன். அவனுக்கே முற்றடிமையான எனக்கு மற்றவர் உறவு கூடா வொழுக்க மெனல்.

408. அறிவுமெய் யன்புமொன்றே யாகவகத் தென்னோ
டுறவுபூண் டுள்ளா னுடையான்—மறலிசேர்
பேதக் கருத்தாற் பிழைபடாத் தன்சொருப
போதசுக மன்புப் புலம்.

உடையான் என்னுள்ளத்தில் அறிவும் அன்புமாக உறவு பூண்டுள்ள தால் சொருப ஞான சுகம் இருமையற்று, அன்புப் புலத்தால் அநுபவிக்கப் படுகின்ற தெனல்.

409. உலகுக் கொருமுதலா யுற்று ருணர்விற்
குலவுற்ற சாந்தவருட் கோமான் – அலசற்
படுமென் மனத்தைப் பராவமுதாக் கண்டா
னெடுமருவிற் றுண்மை யுறவு.

அன்பர் உள்ளத்திற் குலவும் கோமான் என் மனத்தை பராவமு தாக்கவே, அவனோடு எனக்கு உண்மை யுறவு மூண்டது எனல்.

410. எனக்குந் தனக்கு மிடையே யுறவை
நினைக்குந் தொறுந்தொறுமென் னெஞ்சில்—இனிக்க
வினிக்க வினிக்கவெனக் கின்பமுறும் போதை
சுனைப்புனல்போ லூறுஞ் சுரந்து.

ஆண்டவனுக்கும் எனக்கும் ஏற்பட்ட உறவை நினைக்குந்தோறும் மேன்மேலும் இனிக்கும் பேரின்பப் போதை ஊற்றாய்ப் பெருகுகின்றது.

411. வள்ளியா னென்னை வதுவாக வுள்ளத்து
நள்ளியான் மிக்ககுண நாகரிகன்—உள்ளந்
துனற்கருமை யான சுகச்சொருபன் றன்மாட்
டெனக்குரிமை யீந்தா னினிது.

என்னை வதுவாக்கி உள்ளத்துற்ற வள்ளல் மிகுந்த சற்குண நாகரிகனும், அடைதற்கரிய சுக சொருபனுமான அவன் தன்னிடம் எனக்கு இனிய உரிமை யளித்தா னெனல்.

( கொச்சகக் கலிப்பா)

412. பிறிவிலா வுண்மைப் பிரானுன தன்னே
டுறவு கலக்க வுணரா துழன்றேன்
மறவியை மாற்றி மடுத்தா னிதயத்
தறிவே சொரூபமா வார்ந்த பிரானே.

ஆண்டவனோடு உறவு கலக்க வறியாதிருந்த என் பிரமாதத்தை யழித்து, உள்ளத்தில் அவன் அறிவு வடிவா யெழுந்தருளினு னெனல்.

413 உணக்கலுற்ற வென்னை ருயிர் தளிர்க்க நோக்கி
மணக்கலுற்று னுண்மை மகிழ்ச்சிமீ தூர ;
அணுக்கத்தொண் டாள வடிச்சியேன் மோன
விணக்கமுற்றேன் மோக வெழுச்சியற் றேனே.

என் உயிர் தழைக்க என்னைக் கண்ணோக்கி மணந்த ஆண்டவனின் அணுக்கத் தொண்டால் மோன இணக்க முற்று மோக மொழிந்தே னெனல்.

(குறள்)

414. உறவு கலந்த வுடையான் சொரூப
நிறைவுணர்வு நீங்காதென் னெஞ்சு.

415. பற்றறச்செற் றுண்ட பரம்பரன் பால் வாழ்விலெனக்
குற்றதுபே ரின்ப வுறவு.

416. அறிவி லிணைந்தானே டைக்கியமெய்ஞ் ஞான
வுறவு துலங்கிற் றுளத்து.

417. உறவு சொரூபமா வுள்ளங் கலந்த
விறைவன் கருணை ரசன்.

418. இன்பப் பிரானே டியைந்தவருட கூட்டுறவாற்
றுன்பமறத் தூர்ந்த துளத்து.

## ௫௫—நற்றாய் தலைவற்குப் பரிந் துரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

419. அந்தரியாமியா வாண்ட நின்சீ பாதவொளிச்
சந்தவெழில் பொங்கச் சதிர்த்தவென் பெண்ணணங்கு
சொந்தமாந் தொக்க சொரூபனை முன்னையன்றிச்
சிந்தியாக் கற்புணர்வாற் செம்மாந் திருந்தாளே.

ஆட்கொண்ட உன்பாத விழகைப் பெற்ற என் பெண் சொந்த சொரூபனையுற்ற உன்னைத்தவிர வேறு நினையாக் கற்புணர்வாற் பெருமிதங் கொண்டுள்ளா ளெனல்.

420. விஞ்சைசே ருண்மை விளங்குறுநின் சந்நிதியிற்
பிஞ்சிளம் பேதை பெருங்களிகூ ராசையுற்றாள் ;
வஞ்சமற்ற நெஞ்சர் மகிழ்தலுறு நின்சொருபச்
செஞ்சரண வாழ்வென் சிறுமிக் கருளுதியே.

பேருண்மை விளங்கும் உன் சந்நிதியில் என் சிறுமி ஆசையுற்றாள். மேலோர் அடையும் உன் சொருபப் பதவாழ்வை அவளுக் கருள்க வெனல்.

(வெண்பா)

421. பிரியமடப் பேதை பிரிவாயோ வென்று
வெருவியே யாவி விதிர்ப்பாள்—பிரிவருமவ
வுண்மை யுணர்த்தி யுளத்தூ டனுபவமாத்
திண்மையுறச் சேர்ந்து தினை.

என் மகள் ஒருகால் நீ பிரிந்து விடுவாயோ என்று அஞ்சுவாள். ஆகையால் பிரியவரிய ஆன்மவுண்மை திடம்படுமாறு அவளைச் சேர்ந்து திளைப்பா யெனல்.

(குறள்)

422. உன்னைக் குருக வுனக்கேமெய் யன்புபட்டாள்
வண்ணிக் கொணுதமட மான்.

## ௬௪—தியானம்

(கொச்சகக் கலிப்பா)

423. ஆக்கமா வுள்ளத் தகமகமென் றுள்ளுணர்வின்
சூக்கமா வுள்ள சொரூபவியற் புண்ணியனை
நீக்கமரு மோன நிகழ்ச்சியாற் றன்மயமாத்
தேக்கலுறு முன்மைத் தியானவொளி சேர்ந்ததே.

" அகமகம் " என்று உள்ளே விளங்கும் ஆண்டவனை மோனத்தால் தன்மயமாயனுபவிக்குந் தியானவொளி கிட்டிற் றெனல்.

424. துன்பமொரு சற்றுந் தொடராத் துரீயப்பே
ரின்பவருள் வாழ்வா விதயத் தடைந்ததுமெய்
யன்புசிவ மாக வகந்துலங்க லுற்றவென்
னம்பன் சொரூப நலஞ்சேர் தியானமே.

அன்பே சிவமாய் என் அகத்தில் விளங்கும் ஆண்டவனது சொருபத் தியானமானது துன்பமற்ற பேரின்ப வாழ்வாக இதயத்திலுற்ற தெனல்.

425. முகத்தலரு முற்றமுழு மோனப் பரமென்
னகத்தடங்கத் தன்மெய் யருட்சித் திரத்தால்
அகத்தை யலர்த்தியகண் ணாளனை நாளும்
உகத்தலுற்ற தென்னுள் ளுணர்வாங் கருத்தே.

தன் அருட்சித்திரத்தால் என் உள்ளத்தை யலர்த்திய ஆண்டவனை என் உள்ளுணர்வு எப்போதும் விரும்பி நின்ற தெனல்.

426. ஒள்ளிய வுண்மை யுணர்வொளிசூ ழப்பரப்புந்
தெள்ளிய பாதத் தியான வொழுக்கமே
வள்ளிய வாழ்வா மகிழ்ச்சிகூ ரன்புணர்ச்சி
கள்ளியாம் பேறாக் கருத்திற் கலந்ததே.

ஆண்டவன் திருவடித் தியானமே என்வாழ்வாக இன்புறும் உணர்ச்சி எனக்கு உண்டாயிற் றெனல்.

427. அரும்பர னாக வகத்தே யவிர்மெய்ப்
பரம்பரன் சொந்தப் பதியா வெனக்கு

விரும்பப் பிறிதொரு வேட்கையின் ருக
நிரம்பலுற் ருனை நினையகில் லேனே.

நான் விரும்ப வேருெரு பொருளுமில்லாதவாறு உள்ளத்தில் என் சொந்த மணாளனாய் நிரம்பிய பரம்பொருளை நினைக்கவும் வல்லேனோ வெனல்.

(வெண்பா)

428 ஒருகற் பனையுமற்ற வுண்மை யுணர்வால்
உருகவிட்ட செம்பொன் னொளிசேர்—குருரமணக்
கண்ணன் கனசொருபக் கட்டழகைக் கண்டு
கண்டவ்
வண்ணமா மென்றன் மனம்.

குரு ரமணக் கண்ணனின் கட்டழகைக் கண்டுகண்டு என் மனம் உண்மையுணர்வால் அவன் வண்ணமே ஆயிற் றெனல்.

429. காட்சிக் கினியவருட் கட்டழகா லென்மனத்தை
ஆட்சிகொண்டு வாழ்சச்சி தானந்தன்—மாட்சிசேர்
சுத்தவருட் போக சொரூபவியற் சிந்தையே
மெய்த்தவமா மேவு மெனக்கு.

அருட்கட்டழகால் என்னை யாட்சிகொண்ட தலைவனது சொரூபத் தியானமே எனக்கு மெய்த்தவ மெனல்.

430. உள்ளக் கருத்தா வொளிர்சொருப மோனவருள்
வெள்ளப் பிரானழகில் வேட்கையாய்த்—தெள்ளத்
தெளிந்து விளங்கு தியானனு பூதி
வளந்ததும்பு வாழ்க்கை விருந்து.

எம்பிரானது அருட்சொருப வழகில் வேட்கை மிகுந்து அதனால் தெளிந்து விளங்கும் தியானனுபூதியே என் வாழ்வின் விருந்து எனல்

431. தனிப்பரமா மோனத் தலைவனருட் சிந்தை
இனிப்பதொர்பே ரின்ப வியல்பால்—தனைப்பற்
றுணர்வுமேன் மேலவ் வொருதனையே யன்றிப்
புணர்வதன்று வேறோர் புலம்.

தலைவனிடம் நிற்கும் சிந்தை பேரின்பமுற்று, அவனும் தன்னையே மேன்மேலும் பற்றிக் கொள்வதன்றி வேறென்றையும் சேர்வதில்லை யெனல்.

432. சிற்கனமோ னனுபவத் திட்பத்தா லூனமனப்
பொக்கமறப் பொங்குசிவ பூரணத்தான்—மிக்க
வெடுத்துக்காட் டான வியல்சான்ற வாழ்க்கை
மடுத்துக்காத் தோம்பும் மனம்.

திடஞானத்தால் மனமழியப் பொங்கும் சிவபூரணனை ஆண்டவனின் எடுத்துக்காட்டான சகஜஸ்திதியையே என்மனம் போற்றிக் காத்து நிற்கு மெனல்

433. பத்தினியா வேற்றுப் பதமளித்த சொச்சொருப
முத்தனையே யன்றி முகப்பறியேன்—அத்துவித
சுத்தசிவ போத சொருபானு பூதியாற்
புத்திசெய்வேன் பாதப் புலம்.

என்னைப் பத்தினியாக ஏற்றுப் பதமளித்த ஆண்டா னொருவனையே சொருபானுபூதியாற் றியானிப்பே னெனல்.

## ௯௫—ஆண்டவன் புன்னகை

(கொச்சகக் கலிப்பா)

434. மகத்தான தன்சொருப மாட்சி விளங்க
அகத்தா மரையை யலர்வித்த வாண்டான்
முகத்தே யரும்பியபுன் மூரல் பரம
சுகத்தேற லாவகத்துத் துய்க்கலுற் றேனே.

சொரூப மாட்சி விளங்க என் உள்ளத்தை மலர்வித்த ஆண்டவனது திருமுகத்தின் புன்சிரிப்பே பரமசுகத் தேனாற்ருக அனுபவித்தே னெனல்

435. வீட்டுக் குடையான் விளங்க வியாமோகக்
கூட்டுக்கு ளாகக் குலைந்தழுங்கும் பேதையேன்

சேட்டைக் கசித்தகுரு தேவனெளிப் புன்னகையில்
வீட்டுக் குலாவெளியாய் வீழ்ந்ததுவெம் பாசமே.

.......................

குறிப்பு :— சேட்டை — ஆணவக் கலக்கமான ஜீவபோதச்சேட்டை அசித்தல் — அளிமை நோக்கி அருட் புன்னகை செய்தல்.

அகமுடையானை ஆண்டவன் இருக்க வியாமோகத்தால் வருந்திய என் ஜீவச்சேஷ்டையை அவன் தன் புன்னகையால் நீக்கவே பாச மகன்ற தெனல்.

436. குருப்பார்வை யான குலாச்சே ரருட்புன்
சிரிப்பாற் கலக்கந் தெளிந்தே னறிவிற்
புரிப்பா வெனைத்தான் புணர்ந்தான் சொரூப
விருப்பா வகத்தில் விளைந்த பிரானே.

குருவருட் பார்வையான புன்சிரிப்பால் தெளிந்த என்னறிவில் ஆண்டவன் ஆன்ம ஸ்புரணமாய்ப் புணர்ந்தா னெனல்.

(வெண்பா)

437. கண்மணியா வுள்ளான் கருணைசேர் மெய்ஞ்ஞான
விண்மணியா வென்னுள் விளங்குபிரான்—
பெண்மணியாம்
என்னறிவைத் தன்பா லியக்குவித்து மோனவருட்
புன்னகைசெய் தெய்வப் புமான்.

ஞானசூரியனாக விளங்கும் எம்பெருமான் பெண்ணாகிய என்ன றிவைத் தன்பாற் கவர்ந்து புன்னகை செய்தான் எனல்.

438. முறுவலா லென்னை முழுவினை னுள்ளுந்
தொறுமதைநா னின்பஞ் சுரக்கும்—குறுவேர்
பொடிப்பவென் மெய்யிற் புளகூரப் பெற்றேன்
வெடிப்பதென் னுள்ளம் விழைந்து.

ஆண்டவன் புன்முறுவலை எண்ணுந்தோறும் இன்பம் சுரக்கின்றது; உரோமஞ் சிலிர்க்கின்றது; உள்ளம் அன்பால் வெடிக்கின்ற தெனல்.

## ௩௬—கண்ணோக்கம்

### (கொச்சகக் கலிப்பா)

439. கண்ணோக் கியவென்னைக் கண்ணோக்கி னானவன்பற்
றுண்ணோக்க மானவுணர் வுற்ற தனுபவமா;
*கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மிலவென்ற ரான்றோரே.

*கண்ணொடு . . இல' திருக்குறள் 1100

அவனை நோக்கிய என்னை அவன் நோக்கினன். உடனே அந்தர்முக உணர்வு அனுபவமாயிற்று. குறளின் 1100 வது பாடலே அதற்குப் பிரமாணமாகு மெனல்.

440. நம்பனைக்கண் டென்னையே நானிழந்து மாழ்கலுற்றேற்
கின்பதுன்ப மற்றபே ரின்ப வகப்பொருளாந்
தன்பதவாழ் வாகத் தழைத்தொளிர்வ தென்னகத்திற்
செம்பரமா வாண்டசிவச் சீராளன் கண்ணோக்கே.

ஆண்டவனைத் தரிசித்து ஆன்ம சமர்ப்பணம் செய்த எனக்குப் பேரின்ப அகப்பொருள் வாழ்வாயிருப்பது அவனது அருட் கண்ணோக்கமே யெனல்.

441 கண்ணோக்கா லென்னைக் கலந்தபிரான் சுத்தவருள்
விண்ணோக்கா லெங்கும் வியாபித்தான்; உலந்தே
றுண்ணோக்கா லென்னை யுதார வருள்வெளியாப்
பண்ணாக்கா லென்பிறவி பாழ்பட் டிருக்குமே.

என்னைக் கண்ணோக்கால் கலந்த ஆண்டவன் எங்கும் வியாபித்தான். விசாரமாகிய உண்முக நாட்டத்தால் அவன் என்னை இவ்வாறு உய்விக்கா திருந்தால் என் பிறவி பாழாகியிருக்கு மெனல்.

442. பாழிருள்சேர் பாசப் படர்ச்சியா வுள்ளத்துற்
சூழலுற்ற வூனழுந் தூரத்தியதன் கண்ணோக்கால

ஏழை யடிச்சியேற் கின்பதுன்ப மற்றொழியத்
தோழமைபா ராட்டித் துரியசுகந் தந்தானே.

ஆண்டவன் கண்ணோக்கால் என் பாச வழை பகற்றித்தோழமை பாராட்டி இன்பதுன்ப மற்ற துரிய சுகந் தந்தா னெனல்.

443. சாந்தப் பரபத்தி சாரவென் னுள்ளத்திற்
காந்தமா வென்னைக் கலந்தவருட் கண்ணனன்
கூர்ந்த கடாட்சக் குலாவா லிதயத்திற்
சேர்ந்தது நா னற்றொளிர்சச் சிற்பரா னந்தமே.

சாத்விகப் பரபக்தி யுண்டாகுமாறு என்னை ஆண்டவன் கடாக்ஷித்ததால் நானற்ற சிற்பரானந்த மடைந்த தெனல்.

444. நல்வாழ் வருளவந்த நாதன் குறிவைத்துக்
கொல்வானே போலக் குறுகுறுத்து நோக்கினன்;
இல்வாழ்வா மோக விகவாழ் வகன்றொழியத்
தொல்வாழ்வா வுள்ள சொரூபமுற்றேன்
யானிறந்தே.

குருநாதன் என்னைக் குறி வைத்து அருள் நோக்கமிடலும் என் இல் வாழ்வு நீங்கி, அகந்தையிறந்து, சொரூப வாழ்வுற்றே னெனல்.

445. என்னையவன் சற்று மிகந்திடா னென்றாலும்
தன்னை நான் முற்றத் தணந்தேன் மறதியால்;
அன்னையினும் மிக்க வருளாளன் கூர்விழியாற்
பின்ன மயக்கமெலாம் பேதித் தொழிந்ததே.

ஆண்டவன் என்னை என்றும் நீங்கியதில்லை யென்றாலும் நான் மறதியால் அவனை யகன் றிருந்தேன். ஆயினும் அவனது அருள் விழிகளால் என் மனம் மாசமுறச் செய்தா னெனல்.

446. பிணக்கமா மோகவகப் பேயாட்சி யுள்ளத்
துணைக்கலுற வாள்விழியா லோட்டுவிச் செற்றோன்
தணிக்க வொணாதகொடுந் தாபமா மோகந்
தணிக்கலுற்றான் சாந்த சதாசிவமாத் தானே.

அகந்தை யாட்சியை அருள் நோக்கா லழித்த ஆண்டவன் சாந்த சதாசிவமாய் என் தாப மோகத்தைத் தணித்தா னெனல்.

447. தொழுத்தையேன் மோகத் துடுக்கடங்க நோக்கிச்
செழித்துநின்றா னென்னிதயஞ் சிற்பரமா
வாண்டான் ;
கொழுத்தபசு பாசங் குலைந்தொழியப் பெற்றேன்
அழுத்தமா மோன வருள்விளக்கத் தாலே.

ஆண்டவன் அடிச்சியேனது மோகத் துடுக்கடங்க நோக்கி நின்றதால் அருள் விளக்கமுற்றுப் பசு பாசம் ஒழியப் பெற்றேனெனல்.

448. மூடமனப் பேதை முகந்துகொள வாலறிவா
வாடலற்ற வுண்மை வளங்கிளரப் பொங்கியது
தேடவொணு வுண்மைத் திரவியமா வுள்ளத்திற்
கூடலுற்ற சுத்தவருட் கோமான்கண் ணோக்காலே.

மூடமனப் பேதையாகிய எனக்கு ஆண்டவன் கண்ணோக்கால் மெய்யறிவுச் செல்வம் உள்ளத்திற் கூடிய தெனல்.

449. ஒள்ளியோ ரோர்த்தொளிரவ் வுண்மை சுவானுபவத்
தெள்ளமுத மாகத் திளேக்கத் தெளிவிலாக்
கள்ளியே னுள்ளுங் கலந்தொளிர்வ தென்னெனிலவ்
வெள்ள முறப் புக்க வுடையான் கடாட்சமே.

ஞானியர்க்கு மட்டுமே சுவானுபவமாகும் அவ்வுண்மை கள்ளியேனுள்ளுங் கலந்து விளங்குவதற்குக் காரணம் ஆண்டவனின் அருட்கடாக்ஷமே யெனல்

(வெண்பா)

450. வழுத்த லரிதரிது வள்ளலருட் பார்வை
தொழுத்தையா மென்பாலே தோய்ந்து பழுத்துச்
சுரந்தூறு ஞான சொருபானு பூதி
விருந்தூ ணளித்த வியப்பு.

இவ் வடிச்சியைத் தோய்ந்து, பழுத்த ஞானானுபூதி விருந்தளித்த ஆண்டவன் அருட்பார்வையின் அதிசயம் உரைத்தற் கரிய தெனல்.

(குறள்)

451. செத்தொழிந்த வாழ்வு செழித்துப் பழுக்கவெனக்
கத்தனருட் கண்ணோக் கமுது.

## கஎ—உள்ளத் துறைதல்

(கொச்சகக் கலிப்பா)

452. காமா திகளாற் கலங்காது தன்னடிக்கா
ளாமா றருள்வாளா லாணவப்பாழ் மோகவகஞ்
சாமா றடர்த்த சதாசிவசாந் தானுபவக்
கோமா னகத்தகமாக் கூடிவாழ் கின்றானே.

என்னிடம் ஆசைகளையும் ஆணவத்தையும் அழித்த ஆண்டவன் என்னுள்ளத்தில் நானாகவே கூடி வாழ்கின்றா னெனல்.

453. வாலமட மாத ரலர்தூற்ற வன்கணராய்
மாலுறவாற் சிந்தை மயங்கி வருந்தலுற்றேன்
வாலறிவே கோல வடிவழகாய் மிக்கவனு
கூலமா வென்னகத்திற் கூடினா னண்டவனே.

இளம் மடவார் என்னைச் செய்த ஏளனத்தால் வருந்தினேன் ஆனால் ஆண்டவன் பேரறிவே தன் பேரழகாக என் உள்ளத்திற் கூடினா னெனல்.

454. கள்ளமற்ற வுள்ளக் கடல்காட்டி யாண்டவன்பாற்
றெள்ளத் தெளிந்த சிவானுபவ மோனவருள்
வெள்ளந் திளைத்துநான் வேசாட லற்றொழிந்தேன்
உள்ளத்தே யுள்ளமா வுள்ளா னுடையானே.

ஆண்டவன் உள்ளக் கடலைக் காட்டியருளவே, அச் சிவானுபவ மோனவெள்ளத்தில் நீராடித் துன்ப மொழிந்தேன் அவன் என் உள்ளத்தே உள்ளமாகவே உள்ளா னெனல்.

455. உள்ளந் தெளியவிளங் குண்மைப் பரசொருபத்
தெள்ளமுத வாழ்வு நினைக்கவளித் தாண்டபிரான்
உள்ள வொன்றாத வொருமைசேர் மெய்யுணர்வால்
உள்ளமே யாக வொருங்கவணைந் துள்ளானே.

பர சொரூப வாழ்வளித்த ஆண்டவன் நினைப்பைக் கடந்த மெய் யுணர்வால் என் உள்ளமே யாக ஒன்று யணைந் துள்ளா னெனல்.

456. கள்ளமா மோகவகக் கன்னிமையைப் பொன்றச்செற்
றுள்ளா னொருத்தனென் னுள்ளத் தொளிவெளியாத்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமோ னுனுபவ
வெள்ளக் கடல்சுரக்க வேணுசை முற்றவே.

ஒளிவெளியான பரமோனுனுபவ வெள்ளம் சுரந்து ஆசாபூர்த்தி யெய்துமாறு ஆண்டவன் என் அகங்காரக கன்னிமையை யழித்து உள்ளத்தி லுள்ளா னெனல்.

457. செம்பொன் னொளியாத் திகழ்சிற பாசொருப
நம்பனென் னுதனை நள்ளிதயத் துள்ளுணர்வூ
டென்பரமன் றுகவென் றென்றுமியல் கின்றுன்பே
ரின்பவுணர் வூறவென் னன்புமுற்றக் கொள்ளை
கொண்டே.

ஆண்டவன் என்னன்பை முழுதுங் கொள்ளையிட்டுப் பேரின்பம் பெருக என்னுள்ளத்தில் என் நாதனுக விளங்குகின்று னெனல்.

458. அளவில்பே ரின்ப வருக லாகக்
களவிலே வந்து கலந்தோன், சொருபத்
தெளிவிலா வென்னைத் தெருட்டியே உண்மை
யொளியனு வுள்ளத் துறையவுற் றுனே.

களவிலே வந்து என்னை யருட்கடலாகக் கலந்த ஆண்டவன் எனக்குச் சொருபந் தெளிவித்து உள்ளத்தில் உறைகின்று னெனல்.

459. ஆற்றமே தக்கனு னுனுபவ வாழ்விதயத்
தாற்றொழுக்குப் போன்ற வவிச்சின்ன தாரையா
வீற்றிருக்க லுற்றவருள் வித்தகப்பே ராளன்பால்
ஏற்றமுற்றே னேழையே னேகான்மா வாகவே.

இதயத்தில் இடையருத ஞானுனுபவத் தாரையாக வீற்றிருக்கும் ஆண்டவன்பால் ஏகான்மாவாகவே மேன்மை யுற்றே னெனல்.

460. பொய்யலா வுண்மைப் புலந்தன்சற் போதமா
மெய்யருள்பா லித்த விழிப்பிரான் மித்தையகன்
றுய்யவென் னுள்ளத் துணர்வுருவா நன்குவிளங்
கையன் சொருபமெனக் காரா வமுதமே.

ஆண்டவன் தன் கடாக்ஷத்தால் சற்போதமே மெய்ப்புலனாக அருள் பாலித்தான் என் உள்ளத்தில் உணர்வுருவாக விளங்கும் ஆண்டவனது சொரூபமே எனக்கு ஆராவமுத மெனல்.

461. துள்ளுமகப் பேய்முனைப்பின் சூதாற் சுழலுமனக்
கள்ளங் கரவு கழன்றொழியக் கண்மணியா
வுள்ளங் கலந்த வொளிப்பிரான் பாதவருள்
வெள்ளந் திளைத்தலால் வேசா றொழிந்ததே.

அகந்தை முனைப்பற உள்ளங் கலந்த ஆண்டவனின் அருள் வெள்ளத்தில் மனச் சோர்வு ஒழிந்ததே னெனல்.

462. மங்கலமா வுள்ளத்தில் வந்தணைந்தான் காதலாற
றங்கலுற்று னங்கே சதோதயமாந் தன்மையால்;
எங்கணுந்தா னாக வியன்றொளிர்சிற் பூரணத்திற்
பங்கமில்பே ரின்பவருட் பார்வை படைத்தேனே.

ஆண்டவன் என்னுள்ளத்தில் காதலாலணைந்து தங்கியதால் எங்குந் தானாக விளங்கும் சிற்பர அருட்பார்வை படைத்தே னெனல்.

463. அன்பிலா தேனை யருடபரிவாற் கண்ணோக்கித்
துன்ப மகன்றொழியத் தோய்ந்த சொரூபப்பே
ரின்ப மணாள னிதயத் துறைதலால்
வன்புறுவெம் பாச மனக்கலக்கந் தீர்ந்ததே.

அன்பில்லாத வென்னைக் கடைக் கணித்துச் சொருபப் பேரின்ப மாய்க் கலந்த மணாளன் உள்ளந்துறைதலால் பாச மனக் கலக்கந் தீர்ந்த தெனல்.

464. எல்லாமோர் தானா வியற்சிற் பரசொருப
நல்லானென் னாதனா நள்ளிதயந் தோய்தலால்
அல்லா ணவப்பா ழகல வடிச்சிக்குப்
பொல்லா மயக்கமனப் பூச லொழிந்ததே.

பர சொரூப ஆண்டவனே என் நாதனாக உள்ளத்தி லுற்றதால் ஆணவப் பாழ்கெட்டு மன மயக்க மழிந்த தெனல்.

465 வென்றிசேர் சுத்தவருள் விஞ்சையா லென்னகம்புக்
கொன்றினன் ருட்கீ ழுறையப்பெற் றேனுக்குத்
துன்றியமெய்ஞ் ஞான சொருபானு பூதியாற்
பொன்றியது வேகமனப் பூசல்சேர் பாசமே.

உள்ளத்தில் ஆண்டவன் உறையப் பெற்றதாற் கிடைத்த சொரூபானுபூதியில் மாமாய பாசம் அழிந்த தெனல்

466. கணிக்கவொண் ணு மோனவருட் கற்பகமாந் தன்பால்
வணக்கமுற்ருர் செம்மனத்தில் வாழ்முதலா வுள்ளோன்
உணக்கலுற்றேன் வாழவகத் துன்மையுரு வாக
இணக்கமுற்ரு ளென்னுயிர்க்கோ ரின்னுயிராத் தானே.

அடிய ரகத்தில் வாழ்முதலாக வுள்ள ஆண்டவன் என்னுயிருக் குயிராக இதயத்தில் இணக்கமுற்ரு னெனல்

467. சற்றுமெனை விட்டுத் தணவாதென் ணு ருயிருக்
குற்றதுணை யாக வுளத்தொளிர்கின் ருனெனினும்
இற்றென் றிசைக்க வியல்வதன்று சுத்தவருட்
பெற்றியா லாண்ட பிரான்றன் பெருமையே.

சற்றும் நீங்காத என் உயிர்த் துணைவனாக ஆண்டவன் என்னுள்ளத்தில் என்றுமிருந்தாலும் அவனருட் பெருமை இப்படிப்பட்டதென்று கூறவியலே னெனல்.

(வெண்பா)

468. திடுக்கிடவே செய்யுந் திருவருட்கம் பீர
மிடுக்குடையான் மேதக்க மெய்யன்—மடுக்குறுபே
ரின்பமய மாக வெனைக்கலந்து தன்மயமெய்
யன்புருவா நின்ரு னகத்து.

யாரையுந் திடுக்கிடச் செய்யும் அருட்கம்பீர முடைய ஆண்டவன் பேரின்பமயமாய் எனனைக் கலந்து ஆன்ம பக்தி வடிவாய் அகத்தில் நின்ரு னெனல்.

469. * ஓதப் புரோதபா வுள்ளும் புறமுமனந்
தோர்தப்பு மின்றி யொளிர்கின்றான்—ஏதமனக்
கேதமற வாண்டவுயிர்க் கேள்வறை வென்னகத்திற
பாதம் பதித்த பரன்.

* ஓதப்புரோதம் - ஆடையில் குறுக்கிழையும் நெடுக்கிழையும விரவி யுள்ளது போல

ஆட்கொண்டு உள்ளத்தில் பாதம பதித்த பரமன் என் உள்ளும் புறமும் ஓதப் புரோதமாய் வியாபித்து விளங்குகின்றானெனல்

470. பரமனைந் தன்னை நானா பாடுபடுக் கூடுந்
நரமாமோ கூடினன் றானே—நரமெனவே
தோன்றினவத் தோன்றல் சொருபமா வென்னிதயத்
தான்றபர மாவொளிர்கின் றான்.

பரமனை நான் முயன்று கூட வியலுமோ? அவன் தானே வந்து கூடினன் மானிட வடிவு கொண்ட ஆண்டவன் என் இதயத்தில் சொருபப பரமாகவே விளங்குகின்றானெனல்.

471. போனகமாத் தன்சொருப போதமே யானுயிர்க்குப
பானகமாத் தன்சொருப பத்தியே—மோன
சொருபமே ஜீவனமாத் துன்றவெனக் கானம
சொருபகுரு தோய்ந்தா னுளத்து

சொருபமே எனக்கு உணவாகவும், சொருப பக்தியே பானகமாகவும், சொருப மோனமே என் ஜீவனமாகவும் ஆகுமாறு என் ஆன்ம சொருபமான ரமணகுரு என் உள்ளத்தில் தோய்ந்தானெனல்.

472. உள்ளாதே யுள்ளு முணர்வான சாந்தியொளி
விள்ளாதென் னுள்ளத்து மேலோங்க—உள்ளான்
அமுத சொருப வருட்பார்வை யாளன்
அமிதசிவ மாக வணைந்து.

எனக்குத் தடையற்ற சாந்தியொளி ஓங்க அமுத நோக்காளனை ஆண்டவன் என் உள்ளத்திற் சிவமாக அணைந்துள்ளானெனல்.

473. பிரானெனக்குத் தானே பிரானுகை வுள்ளத்
தொரானெரே நாயகமா வுள்ளான்—பிரானு

வருள்வள்ள லான வவன்சொரூப வெள்ளம
பொருள்வெள்ளம் பொன்றா தது.

எனக்கு எம்பிரானொருவனே தனி நாயகன். அவனது சொரூப வெள்ளமே அழியாப் பொருள் வெள்ளமாகு மெனல்.

474. அறிவாக வென்னையாண் டானடைவாக தென்றும
பிறியாத கோயிலாம் பெட்பால்—நிறைவா
வொளிர்பரந் தாமமெனக் குள்ளமே யாக
வளர்வதுபே ரின்ப மகிழ்

என்னை அறிவாக அமைத்து ஆண்டவன் என் உள்ளத்தைப் பிரியாது வாழுங் கோயிலாக் கொண்டு நாம் பேரின்பம் பெருகியதெனல்.

475. நேயத் தழுநத்தவெ னெஞ்சிலமர்ந் தானந்த
காயத் தமுதூறக் காட்டினான்— காயம்
கருத்தோ டுடனுக கசிந்துருக நோக்கும
பொருத்தியசற் போதப் புமான்.

உடலும் மனமும் கசிந்துருக அருள் நோக்கம் பொருத்திய சற்குரு என் உள்ளத்தில் அன்புரு உடலில் அமுதூறல் ஞானஞ் செய்தானெனல்.

476. சிந்தையிலே நின்று சிரிக்கின்றான போனகமாப
புந்தியையுட் கொண்டொளிர் சற்போதகுரு
நிந்தையிலாக்
கீர்த்திவெள்ள மானவருட் கெங்கைநீ ராடுகின்றேன்
பூர்த்திபெற்ற புண்ணியத் தேன்.

என் புத்தியை யுண்ட பெருந்தகை என் இதயத்து மகிழ்வதால், புண்ணியம் பூர்த்தியாகி அருட் கங்கை யாடுகின்றே னெனல்.

(குறள்)

477. அளிப்பிரா னானவென் னப்பான் சொரூப
வொளிப்பிழம்பா வுற்றா னுளத்து.

478. ஆந்தரமா வாண்டான் அடிச்சியே னகமே
கேந்திரமா வுள்ளான் கிளர்ந்து.

## கூஅ—காவல் கொண்டான்

### (கொச்சகக் கலிப்பா)

479. இருட்படுபாழ் ஞாலத் திடையகப்பட் டுனை
வெருட் படுவெம் பாவ விபசாரம் புக்க
மருட்படுவி யேன்சொருப மானங்காத் தாண்டான்
அருட்பரம நாடகந்தா னுடும் பிரானே.

அருளானுன ஆண்டவன் பழிபாவப் படுவேயான தன்னைப் பாதுகாத்தா னெனல்.

480. பொய்க்கா ரவிச்சைப் புணர்ப்பா மகநதையகன
றக்கார மாகமோ னனுபவஞ் சேரவெணக்
கெக்கால முந்தா னிதயத் தவிர்சொருப
மெய்க்காவ லானென் விசுத்தவருட் பெம்மானே.

அகந்தை யற்று, மோனனுபவம தானடையுமாறு ஆண்டவன் எக்காலமும என் இதயத்திற் காவலனு னெனல்.

481. கூம்பியமா மோகவகக் கோசமற நோக்கா நின்
றேம்படையா வுள்ளா னுடையானென்

னுள்ளுணர்வூ

டேமபல்சே ரின்பமெழ வேசறவற் றேய்ந்தொழிய
யான்பிறிதன் றுனை வியல்விளங்கத் தன்பாலே.

பேரின்பம் எழ, மனச்சோர்வு கெட, யான் வேறாகாத நிலை விளங்க, மோகக் கோசங்கள் அறக் கடைக்கணித்து ஆண்டவன் எனக்குப் பாதுகாப்பா யுள்ளா னெனல்.

482. வெருட்சிப் படர்சேர் விகற்ப மயக்க
விருட்சற் பனைக்கா ரிகந்தொழிய வுள்ளத்
தருட்சிற் பரமா வணைந்த பிரானுர்
சுரட்சிப்பி லுற்றேன் சுவானுபவ மாண்பே.

விகற்ப மயக்க மழியுமாறு என் உள்ளத்தி லணைந்த ஆண்டவனது பாதுகாப்பிற் சுவானுபவ மாண் புற்றே னெனல்

483. இளைத்தழுங்க லுற்றே னிதயத் தருட்காப்
பளித்தவென் னுண்டவன்பா லன்புமீக் கூரத்

திளைத்தலுற்ற சுத்த சிவானந்த வெள்ளத்
தொளித்ததுமோ காணவப்பா ழூத்தைமனத் துன்பே.

அருட் காப்பளித்த ஆண்டவனிடம் அன்பு மிகுந்து திளைத்த சிவானந்த வெள்ளத்தில் ஆணவமனத் துயரங்கள் யாவும் அழிந்தன வெனல்.

484. தவிசிலிருந் தாண்ட சதோதய நோக் கத்தாற்
கவசமா வுள்ளவருட் காவலனே யென்றன்
சுவசொருப மாகத் துலங்கலுறக் கண்டாங்
கவசமாப் போயிற் றகந்தை யறிவே.

குறிப்பு:— 'மலர்மிசை யேகினான்' என்ற நூலில் இதயத்தை மலர் என்றாற் போல, ஈண்டு இதயத்தைத் தவிசு என்றதாம்

அரியணையிலிருந்து அருட் காவலன் என்னை நோக்கலும், அகந்தை யழிந்து சுவ சொரூபம் துலங்கிற் றெனல்.

(வெண்பா)

485. கள்ளப் புலவிடயக் காமக் கருத்தறவென்
னுள்ளத் துணர்வளித்த வும்பர்கோன் — உள்ளக
கிளர்ச்சிசே ரின்பவருட் கேள்வனா யென்னைத்
தளர்ச்சியறத் தாங்குகின் றான்.

விடய வேட்கையறச் செய்த ஆண்டவன் என் உள்ளத்தில் அருட் கேள்வனா யிருந்து என்னைத் தளர்வறத் தாங்குகின்றா னெனல்.

(குறள்)

486. மனக்கேத மற்றொளிர்மெய் வாலறிவா வுள்ளத்
தெனைக்காவல் கொண்டா னிறை.

## ௧௯—என்னைப் பிரியான்

(கொச்சகக் கலிப்பா)

487. உணர்ந்தார்க் குணர வொணுதான் உளத்திற்
புணர்ந்தான் சொருபஞ்செம் பொன்மய மாக

மணந்தே யொருதன் மயமா மவுனத்
தணைந்தா னெனைவிட் டகலப்போ கானே.

ஆண்டவன் உள்ளத்தி லென்னைப் புணர்ந்து, தானே யாக மணந்து அணைந்தான்; இனி விட்டகலா னெனல்.

488 ஆங்கே தரித்தா னருட்சிற் பரமாகத
தாங்கியகத் தென்னைத் தலையளித்த கணனாளன்;
யாங்குமே பேரான் இதயத் திருப்புணர்வாத்
தான்குலவு சுத்த சதாசிவமாந் தற்பரனே.

என்னை யாட்கொண்ட கண்ணாளன் உள்ளத்துள் இருப்புணர்வாக எழுந்தருளினான், இனி யகலான் எனல்.

489. உள்ளத்தா லுள்ளவொரு வொளியபே
ரின்பவருள்
வெள்ளத்தா லென்ற வியன்சொருபன சித்திரயாக்
கள்ளத்தா லென்னைக் கலந்தான், கருத்தினின்று
விள்ளத்தான் போகா *வெளியுருவாத் துன்றினனே.

* உருவெளி யென்பது முன்பினாகத் தொகுத்து.

பேரின்ப வடிவனான ஆண்டவன் விசித்திரக் கள்வா லென்னைக் கலந்து இனி என்றும நீங்காது நிலைத்தா னெனல்.

490. கோசவகங் காரக் குடிலவகைப் பேய்க்குணமாம
பாசமகன் றுள்ளம் பரவெளியாப் பொங்குசிவ
நேசவுணர் வூற நிகழ்த்திய கண்ணாளனென
கீசனு வுள்ளா னிதயம் பிரியாதே.

அகங்காரப் பேய்ப்பாச மழிந்து, உள்ளத்திற் பரவெளியாம் சிவத்தினிடம பக்திபூறச் செய்த கண்ணாளன் என்னைப் பிரியாத ஈசனு யுள்ளா னெனல்.

491. சுத்தசிவத் தன்மை துலங்கவென் னுள்ளுணர்வில்
வித்தகக்கண் ணோக்கம் விளைத்தவாற் றுலருளிப்
புத்தமுத வாழ்வாப் பொருந்தலுற்ற புண்ணியனை
இத்தமியேன் சற்றுமிமைத் தெய்த்தொழிய
கில்லேனே.

என்னுள் சிவத்தன்மை விளங்குமாறு கண்ணேக்கவிட்டு, எனது அமுத வாழ்வாகப் பொருந்திய ஆண்டவனைச் சிறிதும் விட்டு விலகே னெனல்.

492. இரண்டறநா னுள்ளத் திறைவனே டொன்றித்
திரண்டசெழுங் காமந் திளைக்கின்றேன்; சற்றும்
மருண்டொழிவே னல்லேன்; மயக்க மனத்தால்
வெருண்டு கலங்கு விகற்பமற் றேனே

நான் ஆண்டவனோடு சேர்ந்து சிவகாமந்திளைக்கின்றேன். மன மயக்க விகற்பங்கள் அற்று விட்டதால் இனி விட்டுப் பிரியே னெனல்.

493. பொங்குசுப வுண்மைப் புலங்கண்டேன் யானினிமற்
றங்குமிங்கு மோடி யலைந்திடேன் சாந்தியுறத்
தங்கி யிருப்பேன் சதாசிவத்தோ டைக்கியமா
மங்கலவாழ் வுள்ளத்து மல்கவென் றென்றுமே.

மெய்ச்சுப வழி கண்டேன்; இனி அங்குமிங்கும் அலையேன்; சதா சிவத்துடன் ஐக்கிய மங்கல வாழ்வு நிரம்பி என்றென்றும் அதிலேயே நிலைத்து (நிட்டையுற்று) இருப்பே னெனல்.

(வெண்பா)

494. உணர்வொளிசேர் மோன முளத்தூ டெனக்குப்
புணர்வெளிதா வாண்டவருட் போதன்—
*புணர்வெளியா
வென்னைப் புணர்ந்துபே ரின்பப் புணரியா
மன்னிப் பிரியான் மனத்து.

* புணர்வெளி— அகிலத்துங் கலந்த அருள்வெளி சிதாகாசம்.

ஆண்டவன் அருள் வெளியாக என்னைப் புணர்ந்து, என்றும் பிரியாப் பேரின்பக் கடலாக நின்றான்.

495. மணந்தான் சொரூப மகிழ்ச்சிசேர் மோன
வெணந்தவிர வேறொன்று மில்லேன்—கணந்தானு
மென்னை யவன்விடா யானு மவனைவிடா
வென்னியல்பே யாறு னிறை.

என்னை யணைந்த ஆண்டவனது மோனானந்தத்தைத் தவிர வேறு எண்ணமில்லேன். என்னை அவனும் அவனையானும் கணமும் விடாத என் சொருபமாகவே அவன் ஆனு னெனல்.

496. நிறைவெளியா மோன நிலத்திலே சுத்த
வறிவொளியா வென்னை யணைந் தாண்டான்—
இறையளவும்
என்னிற் பிரியா னிதயத் தொளிர்சொருபன்
பன்னற் கரிய பரன்.

மோனவெளியில் சுத்த அறிவொளியாக என்னை அணைந்த ஆண்டவன் என் இதயத்தில் பிரியாது ஒளிர்கின்ரு னெனல்.

497. காலையில்வந் தென்னைக் கடைக்கணித்துச் சென்ற
பிரான்
மாலையில்வந் தாங்கே மணந்துகொண்டான்—
மாலியல்பால்
எங்கெங்கு மன் றிமற் றென்றென்று மென்னைவிடா
தங்கங் கலந்துநின் ருன்.

காலையிற் கடைக்கணித்து மாலையில் மணந்து கொண்டான். வியாபக இயல்பின னுதலின் எங்கும் என்றும் என்னை விடாது கலந்து நிற்கின்ரு னெனல்.

498. அடிமையா வுற்றே னறவணைத்துக் கொண்டான்
படர்மனந்தன் பாலே படர—கடிமணம்பூண்
டொன்றிக் கலந்த வுறுதியே ரோரியல்பால்
என்றும் பிரியே னினி.

அறவணைத்துக் கடிமணம் பூண்ட வன்பால் ஏக இயல்பாக ஒன்றிக் கலந்து விட்டதால் இனிப் பிரியே னெனல்.

499. துன்பமறத் துன்று சொருபானு பூதிப்பே
ரின்பமெழப் பொங்க விதயத்தே—அன்புருவாய்
வென்றணைந்த ஞானவருள் வேந்தனைவிட் டுப்பிரியா
தொன்றிநின்ற தென்றன் னுணர்வு.

உள்ளத்திற் பேரின்பம் பொங்க அணைந்த வேந்தனை விட்டுப் பிரியாமல் என்னுணர்வு அவனுடன் ஒன்றி நின்ற தெனல்.

(குறள்)

500. ஆருயிரா வுள்ள வருட்பெட்பா லன்னியமாய்
பேரவொணான் உண்மைப் பிரான்.

## ௪0 — அகந்தை யழித்தரன்

(கொச்சகக் கலிப்பா)

501. குணங்கடந்த மோனவியற் கோமான் அருளா
லிணங்கலா லென்னோ டியையுபட வொன்று,
அணங்குதாக் கான வகப்பேய் மயக்கக்
குணங்குறிக ளெல்லாங் குலைந்துபோ யிற்றே.

குறிப்பு: — ஒன்று விணங்கலால் என வியையும்.

ஆண்டவன் என்னோடு ஒன்று யிணங்குதலால் பிரம்மராட்சசப் பிடிப்பான அகந்தை மயக்கம் அடியோ டழிந்த தெனல்.

502. குறிகுணந்தீர் சுத்தவருட் கோலப் பிரான்மாட்
டறிவுதெளிந் தான்றமெய் யன்பு விளைந்தேற்
குறவு சொருபமா வுள்ளொளிர்வுற் றுங்குப்
பிறிந்தது நா னென்றெழுந்த பேதவகப் பேயே.

ஆண்டவனிடம் அன்பு வளரப் பெற்ற எனக்குச் சொருபமே உறவாவதால் அகந்தைப் பேயகன்ற தெனல்.

503. செக்கச் சிவந்த சிவச்சிற் பரனொடுநா
னைக்கக் கலத்தலா லுள்ளம் பரவசமாய்ச்
சொக்கக் கிளர்ந்த துரீய சொருபத்திற்
பொக்கவகப் பேய்க்கலக்க பூசமறக் கெட்டதே.

ஆண்டவனோடு கலத்தலால் என்னுள்ளத்தில் பரவசமாய்க் கிளர்ந்த துரீய சொருபத்தில் அகப்பேய்க் கலக்க மழிந்த தெனல்

504. சாந்த வுணர்வாத் தலைப்பெய்த சுத்தவருட்
காந்தனுற் புத்திக் கலக்கமறக் கண்விழித்தேற்

தன் கண்ணோக்கால் என்னைக் கவர்ந்தாண்டு கொண்ட வேந்தனிடம் எனக்குண்டான பெருவேட்கையால் அகப்பே யுறவு நீங்கிற்றெனல்.

509. மிக்கவருட் பார்வை விளங்கு வசீகரக்கட்
சொக்கனென் சொந்த சொருபமா வுன்னுணர்விற்
புக்கவனு பூதிப் புணர்ச்சியா (ம்) மோனத்திற்
பொக்க வகந்தைகெடப் புன்கலக்கம் போனதே.

ஆண்டவன் சொந்த சொருபமாக அறிவிற் புணர்ந்த சுயானுபவமான மோனத்தில் அகந்தைமனப் புன்கலக்கம் அகன்றதெனல்.

510. வித்தகமெய்ஞ் ஞானவொளி வீசுமிறை வேட்கையாற்
புத்தமுத மானசிவ போகவுணர் வூறவுளத்
தத்துவித மெய்யன் பவிர்சொருப வுண்மையின்முற்
பொய்த்ததுநா னென்னுமனப் புன்கலக்கக்
கற்பனையே.

ஞானவொளி வீசும் ஆண்டவனிடம் சிவபோக வுணர்வு ஊற, உள்ளத்தில் விளங்கும் அத்துவித உண்மையின் முன் அகந்தை பொய்த்ததெனல்.

511. ஏதமில்பே ரின்ப வியற்சிற் பரசொருப
நாதன்முன் மங்கியது நானெனும்பொய்ம் மாயவகம்;
போத சொருபவருட் பூரணம்மீப் பொங்கலாற்
பேதமனப் பான்மை பிழைபட் டொழிந்ததே.

ஆன்ம சொருபநாதனின் சந்நிதியில் அகந்தை பொய்த்து, பேதமனப்பான்மையும் ஒழிந்ததெனல்.

512. தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமாத் துன்றுசிவ
வெள்ளப் பிரான்சொருப வேட்கைகூர் விம்மிதத்தால்
உள்ளத்தி னின்றே யொழிந்ததுவஞ் சப்புரட்டுக்
கள்ளமனோ மாயக் கலக்கஞ்சேர் புன்புலமே.

தெளிந்த சொருப சிவபக்தி பொங்குதலால் வஞ்சமனமாயை உள்ளத்தினின்றும் ஒழிந்ததெனல்.

8

513. வானுந் திசைகளும் மாகடலு மாயபிரான்
ஆனந்த மோன வருட்சத்தி யாலகத்து
நானுந்தா னுங்கலந்த ஞானனு பூதியால்
ஊனந் தவிர்ந்தே னெளிவெளியாந் தன்னிலே.

யாவுமாய் விளங்கும் ஆண்டவனது அருட்சக்தியால் அவனும் நானும் உள்ளத்திற் கொண்ட ஞானனுபூதிக் கலப்பில் தேகான்ம பாவ மொழிந்தே னெனல்.

(வெண்பா)

514. பெருமைசேர் தன்பதத்திற் பேரா திருக்க
வுரிமை யளித்த வுடையான்—ஒருமையா
வுள்ள சொருபத் துபயமதிக் கேதுவாங்
கள்ள வகந்தைகடிந் தான்.

தன் பதத்தடிமை யளித்த ஆண்டவன் ஏக சொருபத்தில் துவித புத்தி யுண்டாக்கும் அகந்தையை அழித்தா னெனல்.

515. ஒருமை யுணர்ச்சி யுளத்திலுண் டாக
வருமையா வென்னை யணைந்தான்—இருமையைக்
கற்பிக்கு மோகக் கருவா மகந்தையைத்தன்
னுற்பத்தித் தானத் தொழித்து.

அகந்தையை உற்பத்தித் தானத்திலேயே ஒழித்து ஆண்டவன் அத்துவிதானுபவம் உண்டாகுமாறு என்னை அணைந்தா னெனல்.

516. குருவுருவாக் கூடிக் குறிகாட்டி மோகக்
கருவகல வென்னுட் கலந்தான்—இருவருமொன்
றுகக் கிளருமோ னனுபவத் தற்றதுகாண்
ஆகக் கருத்தென் னகத்து.

ஆண்டவன் சின்முத்திரை காட்டிக் குருவுருவா யென்னுட்கூடிக கலந்தான். இருவரும் ஒன்றாய்க் கிளர்ந்த மோனனுபவத்தில் என் தேகாத்ம புத்தி யழிந்த தெனல்.

517. பசுபாசஞ் செற்றான் பதியான நாதன்
விசுவாச மேன்மேல் விளைத்தே—கசிவாக
வென்னைக் கலந்தா னிரண்டறவென் னுள்ளத்தே
துன்னுமகங் காரந் தொலைத்து.

பதியான என் குருநாதன் பசுபாச மறுத்தான். என் அகங்காரத்தை யழித்து மேன்மேலும் என்னுள் விசுவாசம் விளைந்து அன்போடு என்னைக் கலந்தா னெனல்.

(குறள்)

518. மாணக் கலந்த மணாளன்முன் னாணிக்
கவிழ்ந்ததுநா னென்னுங் கருத்து.

சக—அணைந்தான்

(கொச்சகக் கலிப்பா)

519. புகலாக வாண்டவன்பாற் புக்கநான் சுத்தப்
பகலான மோனவியற் பார்வை படைத்தேன்
அகலாத சொந்தசுத் தான்ம சொரூப
மகமேரு வாக மகிழ்ந்தணைந் தானே.

ஆன்ம சொரூபமகமேருவாக ஆண்டவன் தம்மை மகிழ்ந் தணைந்தா னெனல்.

520. ஏழை யடிச்சியே னேங்குங்கா லாணவப்பாழ்ந்
சூழலிலே சுத்தத் துரியமா வந்தணைந்தான்,
ஆழம் மிகவுடைய வம்மா னருளாளன்
ஊழிதோ றூழி யுயிர்க்குயிரா வுள்ளானே.

ஆழ்ந்த அருளாளனும், ஊழிதோறூழியும் என் உயிர்க்குயிரான வனுமான ஆண்டவன் நான் ஆணவப்பாழில் வருந்தும் போது துரீய சொருபமாக வந்தணைந்தா னெனல்.

521. *நம்புவா ருள்ளத்து நல்லமுத மானவருட்
செம்புலமாத் தேறத் திகழ்மங் களவடிவன்
செம்பரமாத் தன்னைத் திளைக்கநா னுள்ளுணர்வால்
அன்புசிவ மாமெய் யகமா வணைந்தானே.

* நம்பல்—விரும்பல்

அன்ப ருள்ளத்தில் விளங்கும் (சிவ) மங்கள வடிவனான ஆண்டவன் நான் அவனைப் பரம் பொருளா யறிந்து அனுபவிக்குமாறு அன்பு சிவமான இதயமாய் அணைந்தா னெனல்

522. தொழுகுலமா வுள்ள சொரூபப் பிரான்தன்
னழகியமெய்ஞ் ஞான வருட்பதத்தே மாரு
வுழுவலன்புற் றேனையுளத் துள்ளுணர்வு
பொங்கத்
தழுவியொரு தன்மயமாத் தானொளிர்கின் றானே.

ஆண்டவன் தன் ஞானத் திருவடியில் பேரன்புற்ற என்னைத் தழுவித் தன்யமாக வொளிர்கின்றா னெனல்.

523. குணத்தா லுயர்கடவுட் கோமான் சொரூப
வணத்தா லறிவை வசீகரித்தான் எண்ணு
வெணத்தா லிதயம்பே ரின்பவெளி யாக
வணைத்தா னெனைத்தன்னோ டங்கண்ணேக் காலே.

சொரூப வழகால் என்னை வசீகரித்த ஆண்டவன் என் இதயமே பேரின்ப வெளியாக என்னைக் கண்ணேக்கா லணைந்தா னெனல்.

524. பொக்கவகங் காரமனப் புன்கலக்கப் பூசலறச்
சிக்கெனவென் னுருயிரைச் சிற்பரத்திற் சேர்த்தவருட்
சொக்கனையென் சொந்த சொரூபமே யாவணைந்தேன்
மிக்க விசுத்த வெளியா மிதயத்தே.

அகங்கார மழிய என்னுயிரை ஆன்ம சொரூபத்திற் சேர்த்த ஆண்டவனை உள்ளத்தில் என் சொரூபமாகவே யணைந்தே னெனல்.

525. தன்னைடென்னை யொன்றுத் தழுவினான்
சிற்சொருபத்
தென்னதுநா னென்னுமதி யிற்றெழியப் பெற்றதாற்
றுன்னுசிவக் கேவலமாத் துன்றுமகத் தெல்லாமோர்
தன்னியலே யானவதிஷ் டானவொளி சார்ந்ததே.

தம் அகந்தைமமதை ஆண்டான் சொரூபத்தில் அழிதலால், அகில மும் ஒரு தன்னியலேயான அதிஷ்டானவொளி சார்ந்த தெனல்.

526. அறிவான நானே யசச்சடமாந் தேக
வுறவான் மருண்டேனை உள்ளொளியாந் தன்மெய்
யறிவாக வாண்டா னணைதலாற் பாச
வுறவாங் கலக்க மொழிந்ததுண் ணின்றே.

உள்ளொளியான மெய்யறிவாக ஆண்டவன் அகத்தே தம்மை அணைதலால், பாசக் கலக்க மொழிந்த தெனல்.

527. அறிவா லணைந்தான் அறிவான வாண்டான்
அறிவான வென்னை அறிவா மகத்தே
அறிவான மோக வகப்பேய்போய் உண்மை
யறிவே சொரூபமா வான்றமைந் தேனே.

ஆண்டவன் என்னை அறிவாக வணைதலால் அகந்தைமனச் சுட்டறி வான அகப்பே யகன்று சுத்தவறிவே சொரூபமாகத் துலங்கலுற்றே னெனல்.

528. மருட்சிப் படர்சேர் மனங்கெட் டொழிய
வருட்சித் திரமா வணைந்தான் சொரூபத்
தெருட்சிற் பதத்திற் செருக்கறலாற் சேர்ந்தேன்
இருட்சர்ப் பனைதீ ரியற்பர வாழ்வே.

ஆண்டவன் என் மனமழிய அணைந்தான். அவன் திருவடியில் செருக்கற்று இயற்பர வாழ்வடைந்தே னெனல்.

529. அன்பு சுரந்தெழுபே ரார்வமுற அற்புதப்பே
ரின்பப் பிரானே டியைதலால் யானென்ற
வென்பரிசற் றேய்ந்த விதயத் தருட்பரமாந்
தன்பரிசு நாளுந் தழைத்துமீப் பொங்கியதே.

ஆண்டவனேடு ஒன்ருக இணைவதால் அகந்தை யழிந்து இதயத் தில் அவனது தன்மையே தழைத்து மேலோங்கிய தெனல்.

530. தொக்க மயக்கமறத் துன்றுமெய்ஞ் ஞானவருட்
சொக்க னணைந்த சொரூபானு பூதியால்

ஒக்க வொழிந்த துளத்தினின்று மோகங்கூர்
பொக்க மனக்கலக்கப் புன்புலப்பா ழாசையே.

ஆண்டவன் என்னைச் சொருபானுபூதியா லணையவும் புலனுசை களெல்லாம் ஒழிந்தன வெனல்.

531. எம்மாலே யாதுமனத் தெண்ணவுமே யொண்ணுமற்
சும்மா விருவெனவே சொல்லாது சொல்லியகத்
தம்மா னணைந்த வனுபவத்தால் யானென்னும்
பொய்ம்மா லொழிந்ததுசிற் பூரணமாந் தன்பாலே.

"சும்மாவிரு" என்று சொல்லாது சொல்லி என்னை ஆண்டவன் அணைந்ததால் 'நான்' என்னு முணர்வு கரைந்து சிற்பூரண மாயிற் றெனல்.

532. அருள்வண்ண மாக வணைந்தபிரான் சுத்தத்
தெருள்வண்ண மாகத் திகழ்சொருப வாழ்விற்
கரவுற் றொழிந்தனகாண் கற்பனையா, மோக
விருள்வண்ணஞ் சேர்ந்த விகபரமெல் லாமே.

அருள் வண்ணமாகவே ஆண்டவன் என்னை யணைந்ததால், அச் சொருப வாழ்வில் இகபர மெல்லாங் கற்பனையாக மறைந்தன வெனல்.

(வெண்பா)

533. பெருமா னருள்வடிவப் பேரழகிற் சொக்கி
யருமா லுழந்தே னகத்தே—குருமா
மணியா வகத்தை மலர்வித்து மோன
வணையிலே யென்னையணைந் தான்.

ஆண்டவ னருளழகிற் சொக்கி நின்ற என்னுள்ளத்தை மலர்வித்து மோனவணையில் என்னை அணைந்தா னெனல்.

534. பழுத்த சிவானுபவப் பார்வையா லன்பர்க்
கழுத்தமுறு சாந்தி யளிப்போன்—தொழுத்தையா
மென்பா லிரங்கிப்பே ரின்பவுணர் வூறவகத்
தன்பா லணைந்த பிரான்.

அடிச்சியாம் என்பால் இரக்கமுற்றுப் பேரின்பந் தந்தனைந்த ஆண்டவன் தனது பழுத்த சிவானுபவப் பார்வையால் அன்பர்க்கு நிலைத்த சாந்தி யளிப்பவனு மெனல்.

535. மறக்க வொணுதபெரு மாட்சியா லென்னைச்
சிறக்க வணைந்தவருட் செல்வன்—உறக்கவிழிப்
பெல்லாவற் றுக்கு மிதயத்தே சாட்சியாந்
தொல்லோன் சொருபச் சுடர்.

உறக்கம் விழிப்புக் கெல்லாம் சாட்சியான சொருபச்சுடராம் ஆண்டவன் என்னை மறதியற்ற மாட்சியா லணைந்தா னெனல்.

536. அறிவிலே யென்னை யணைந்தா னருளின்
செறிவிலே நானுஞ் செழித்தேன்—பிறிவிலா
தித்தமியே னுள்ளத் தினிதுறைந்தான்
றன்சொருபப்
புத்தமுத போகமரு வாறு.

தனது புத்தமுத சொருபபோகம் என்றும் நீங்காமல் என் உள்ளத்து உறைந்து ஆண்டவன் என்னை அறிவில் அணையவே அருளிற் செழித்தே னெனல்.

537. தேற்றமாய் நில்லாய் சிவோகமென்றே நானதுவென்
ருற்றுமனே பாவனைசே ருகவே—வேற்றுமையா
லஞ்சேலென் றென்னை யணைந்தா னகமகமாய்
நெஞ்சே நிலைக்களமா நின்று.

"சிவோஹமென்றும் அகம் பிரம்மாஸ்மி யென்றும் தியானிக்கும் பாவனைகளை யெல்லாம் விட்டொழித்து, பேதபயமற்று 'நான் நானே' யெனத் தேற்ற முற்று நில்" என்று கூறி என்னை அகமகம் என்றணைந்து நின்ற னெனல்.

538. மருட்சித் திறங்குலைந்து மாயவென்னை யாண்டா
னருட்சித் திரமா வணைந்தான்—தெருட்சித்த
நேயப் புணர்ச்சியன்றி நீக்கமே தானுமொரு
மாயமாப் பொன்ற மனத்து.

ஆண்டவனை நான் பிரிந்திருந்தேன், பிறகு கூடினேன் என்ற பொய்ம் மயக்கந் தீருமாறு அவன் என்னை அருட்சித்திரமா யணைந்தா னெனல்.

539. நிட்டையிலே நெஞ்சை நிகழ்த்தினன் ஞானபதத்
திட்டையிலே யென்னுயிரைச் சேர்த்தினன்—
துட்டையா
மென்னைத்தன் னேடே யிறுகத் தழுவினன்
றன்னைத் தவிரவின் ருய்.

ஆண்டவன் என் நெஞ்சை நிட்டையில் நிறுத்தி, உயிரை ஞான பதத்திற் சேர்த்து, தன்னைத்தவிர வேறென் றில்லாதவாறு என்னை ஏகமாய்த் தழுவினு னெனல்.

540 ஆண்டவனைக் கூடி யனைதலே யொன்ருக
வேண்டவெனக் குள்ள வியன்போகம்—பூண்டவனப்
பெல்லாமே பாழுக் கிறைத்ததாம் பொங்குசுகம்
புல்லா தொழியிற் புணர்ந்து.

ஆண்டவனைக் கூடி அனைதலே என் மெய்ப் போகம். மற்றவை யாவும் பாழுக் கிறைத்த வீணே யெனல்.

541. ஆண்டவனே டொன்றி யணைந்தசுகந் தான்ருனப்
பூண்ட சொருபானு பூதியாய்—யாண்டுமெனக்
கென்று மியல்பா யியல்வுறுமெய் யன்புணர்வு
நின்ருெளிர் கின்றதென் னெஞ்சு.

ஆண்டவனைச் சேர்ந்தணைந்த சுகமானது எனக்கு என்றும் எங்கும் இயல்பாய் விளங்கும் அன்புணர்வாக உள்ளத்தில் ஒளிர்கின்ற தெனல்.

542. மதுரகுண மாட்சியான் மல்குபே ரின்பக்
குதுகலனென் சொந்தக் கொழுநன் —உதவினன்
யானகண்ட மாக வனுபவிக்க வின்பவருள்
வானமாந் தன் சொருப மார்பு.

மதுர குணத்தனும் இன்பக் குதூகலனுமான என் கொழுநன் நான் அகண்டமாக அனுபவிக்குமாறு ஆன்ம சொருப அருளாகாயமான தன் மார்பை எனக்கு உதவினு னெனல்.

543. காண்டலருந் தெய்வவருட் கட்டழகன் சீரமணன்
ஈண்டவனைந் தாண்ட வினிமையாற்—பூண்டவருள்

வண்ண வொளியில் வசப்பட் டுளகிமனத்
திண்ணெனவு தீர்ந்தேன் சிவத்து.

தெய்வக் கட்டழகனை ஸ்ரீ ரமணர் என்னை அணைந்தாண்டதால் அவ்வின்ப ஒளிவசப்பட்டு மனம் உருகிச் சிவத்திற் கரைந்தே னெனல்.

544. வாரம் பயிலா மடக்கொடியேன் பாரவருள்
வீரம் புலப்படவென் மெய்யணைந்தான்—வாரம்பூண்
டென்னலஞ்சேர்ந் துள்ளத் தியல்சிற் பரசொருபன்
றன்னலஞ்சேர்ந் தாவிதழைத் தேன்.

அருள் வீரம் புலப்பட ஆண்டவன் அன்பற்ற என்னை யணைந்தான். அதனால் உள்ளத்துள்ள அச் சொருபனிடம் அன்பு பெருகி ஆவி தழைத்தே னெனல்.

545. மருட்கையாற் பாழ்த்த மனத்தேனை யாண்டா
னருட்கையால் வாரி யணைத்தான்—மருட்கலக்கம்
தீர்ந்தே யடிச்சியேன் சிற்சொருபான் மானுபவ
மார்ந்தே னவன்மார் பணைந்து.

ஆண்டான் அருட்கையால் வாரியணைத்தலும் அடிச்சியேன் மருள் தீர்ந்து ஆன்மானுபவம் அடைந்தே னெனல்.

(குறள்)

546. அருள்வெள்ள மாக வணைந்தான் சொருபப்
பொருள் வெள்ள வாழ்வாம் புமான்.

547. அறிவுருவா வுள்ளத் தணைந்தபிரான் எங்கும்
பிறிவறநிற் கின்ற பிரான்.

548. அருள்வடிவா வென்னை யணைந்தான் சிவச்செம்
பொருள்வடிவ மான புமான்.

549. உணர்வு தெளிந்திதயத் *தூன்றலுற்ற மோன
வணையிலணை ந் தானண் டவன்.

* தொன்றலுற்ற என்றும் பாடம்.

550. அருள்விளக்க மாக வணைந்தா னகச்செம்
பொருள்விளக்க மான புமான்.

551. போனவணைப் பாலென்னை முற்றமுழுத் தன்மயமா
யானவிரக் கண்டா னிறை.

552 அருமையா வென்னை யணைந்த பிரான்பால்
இருமையுணர் வற்றொழிந் தேன்.

553. அணைந்த சொரூப னருட்செம் பதத்திற்
றணிந்ததுசந் தாபத் தழல்.

554. அன்பான சுத்த வருள்வாழ்வா வென்னையணைந்
தின்பவுணர் வீந்தா னிறை.

555. இருமைசேர் பேதமற வெற்றியதென் ஞண்டா
னருமைசேர் மோன வணைப்பு.

556. அணைவதா லன்றிநல் லாண்டவனைச் சற்றுந்
தணிவரிது மோகத் தழல்.

557. அணைந்த பிரான்கூ ரருளா லகத்திற்
றணிந்ததுவெங் காமத் தழல்.

558. அரியபரஞ் சோதியென் ஞகைத் தணைவால்
இரியலுற்ற தூழ்த்த விருள்.

## சஉ—ஒத்தொழுகல்

(கொச்சகக் கலிப்பா)

559. ஒத்தொழுக லுற்ற வுணர்வா லுடையானோ
டத்துவித வுண்மையா வான்ற சொரூபவருள்
வித்தகமெய்ஞ் ஞான விளக்கமா மோனத்திற்
பொய்த்ததுநா னென்னுமனப் புன்கலக்கப்
பேய்ச்செருக்கே.

என் தலைவனோடு ஒத்தொழுகும் உணர்வால் அத்துவித சொரூப ஞான விளக்கமான மோனத்தில் அகந்தைச் செருக் கற்றேனெனல்.

(வெண்பா)

560 கடைச்சியா மென்னைக் கடைக்கணித்துத் தன்பா
லடைச்சியே யாண்டானென் னம்மான்— அடிச்சியே
னொத்தொழுக லாலே யுடையானோ டன்புபட்டுப்
புத்தழகு பெற்ற துயிர்.

என்னை அடிச்சியாய் ஆட்கொண்ட எம்மானுடன் அன்புபட்டு ஒத்தொழுகலால், என் உயிர் புத்தழகு பெற்றதெனல்.

(குறள்)

561. நித்தமா மோன நிலையளித்த வாண்டவனோ
டொத்தொழுக லுற்ற துணர்வு.

562. சித்தங் கலந்தவருட் செல்வப் பிரான்குறிப்போ
டொத்தங் கியன்ற துணர்வு.

563. அழகே சொரூபமா வாண்டவனைக் கூடி
யொழுகலா லுட்பொலிவுற் றேன்.

564. அகத்திலே யென்னையணைந் தாண்டவன்சித் தத்துக்
குகத்தலே யென்மெய் யுகப்பு.

சஉ—சம்பூரண சரணாகதி

(கொச்சகக் கலிப்பா)

565. வெட்டவெளி யாக விளங்கு மிதயத்து
நட்டமா டுற்றவென் னம்பன் றிருவுளங்கூர்
இட்ட மெதுவோ வதுவேதன் னிட்டமாத்
திட்டவட்ட மாகத் தெளிந்ததென் னுள்ளுணர்வே.

என் இதய வெட்டவெளியில் நட்டமாடும் ஆண்டவன் இஷ்டமெதுவோ அதுவே என்னிஷ்டமுமாகும் எனத் தெளிந்தேனெனல்

566. சிற்பர மெய்ப்படச் சித்த மலங்கெடச்
செப்பட வென்னுட் சிவமாத் திகழ்தலால்
* அப்ப ரருளியாங் கத்தனென் னுருயிர்க்
கெய்ப்பில்வைப் பாவெனக் கென்னி னினியனே.

---

* என்னின் யாரும் என்னும் இன்னம்பர்த் தேவாரம்

அப்பர் அருளியபடி ஆண்டவன் தம் உயிர்க்குயிராகத் தம்மிலும் தமக்கினிய னெனல்.

(வெண்பா)

567. முற்றிலுமென் னெஞ்சம் முறியடிமை யாகவருட்
பெற்றிமே ராண்டவன்பாற் பிச்சியாய்—முற்றியவென்
பெண்மைநலம் முற்றப் பிரானடிக்கே யர்ப்பணமாய்
உண்மயல்சேர் வுற்ற துணர்வு.

என் ஆண்டவனுக்கே முற்றடிமைப் பெண்ணுன என் உணர்வு அவனடிக்கே அர்ப்பணிக்கப்பட்டு உண்முகப் பித்தேறிய தெனல்.

568. கன்னிச் சதிரழியக் கண்டவருட் கண்ணுளன்
றன்னிச்சை யாகச் சரித்தலன்றி—என்னிச்சை
யானு னியங்கலெங்கவ் வான்ம சொருபனன்றி
யானே யிலாத விடத்து.

கன்னிமை யழித்தாண்ட கண்ணனென் இச்சைப்படித்தான் வாழ்வு நடக்கிறது. ஏனெனில் ஆன்மசொருபனும் அவனன்றி யானே இல்லையெனல்.

569. அணைவலாய் நின்ரு னகமுடையா னென்றன்
னுணர்விலே தன்மெய் யுருவாய் மணவனென்
னுள்ளமே தானு வொளிர்கின்ருன் யானவனை
யெள்ளிக் கடத்த லெவன்.

அகமுடைய ஆண்டவன் என் உள்ளமே தானாய் விளங்குகின்ருனுகையால் அவனை நான் மீறிக் கடக்க வியலே னெனல்.

570. பிரமாத மென்னும் பெரும்பா முகத்திற்
கருமாய மாகக் கலங்கித்—தெருமரா
துண்மையொளி யுள்ளத் துதவியவவ் வள்ளலுக்கென்
வண்மைபெறு வாழ்க்கை யுரித்து.

பிரமாத மாகிய மாயவிருளில் நான் அழியாதவாறு உள்ளத்தில் உண்மை யொளி யுதவிய வள்ளலுக்கே என் வாழ்க்கை உரியதா மெனல்.

571. நம்பனு மேகான்ம நாதனுக்கே யன்றியென்
னன்புநா லூர்க்கு மளிக்கிலேன்—நம்பமாய்
என்பரமொன் றின்றியெலாந் தன்பரமா வாண்டவற்-
கென்
னன்புமனம் முற்றூட் டறி.

என் பொறுப்பின்றி யாவுமதன் பொறுப்பாயக் கொண்ட ஏகான்ம நாதனைத் தவிர யார்க்கும் என் அன்பை அளிக்கிலேன்; அவனுக்கே என் அன்புள்ளம் ஊணாயிற் றெனல்.

572. சுரந்தருள்சற் போத சுகசொருபன் மோகங்
கரந்தொழிய வுள்ளங் கலந்தான்—பரந்தொளிர்செம்
மாணிக்க மாமலையா மாண்பதத்துக் கேற்றதொரு
காணிக்கை யென்றன் கருத்து.

போத சொரூபனை ஆண்டவன் மோகம் ஒழிய என் உள்ளங் கலந்தான்; அவன் திருவடிக்கு என் மனம் தகுந்த காணிக்கை யாயிற் றெனல்.

## சச—என்னை யிழந்தேன்

### (கொச்சகக் கலிப்பா)

573. எக்களிக்க வென்னோ டினிதளைந்த சுத்தவருட்
சொக்கனுக்கே முற்றமுற்றத் தோற்றொழிந்தே
னென்னைநான்;
மிக்கவெளி யாக விளைந்தா னகிலமொருங்
கொக்க வொருதன் மயமா வொளிர்ந்திடவே.

என்னையணைந்த ஆண்டவனிடம் என்னையிழந்தேன். அவன் பிரபஞ்சம் முழுதும் ஒரு தன்மயமான அருள்வெளியா நின்றா னெனல்.

574 அணைக்க வணைக்கவான் மானுபவங் கூர
மணக்கலுற்று மோனவருள் வாலறிவா வாழ்வி
லிணக்கமுற்றான் மாட்டுநா னென்னை யிழந்தேன்
பிணக்கமா மோகமனப் பீழையற் றேனே.

அணைக்க வணைக்க ஆன்மானுபவ முண்டாகுமாறு என்னை மணந்து என் வாழ்வில் இணைந்த ஆண்டவனிடம் என்னை யிழந்து மன மழிந்தே னெனல்.

575. விழியினு லென்னை விழுங்குவான் போல
நுழையவே யூடுருவு நோக்கா லுளம்புக்
கொழிவிலே முற்ற வொடுக்கினான் பாத
வழகிலே யீடுபட் டாழ்ந்தொழிந் தேனே.

என்னை விழுங்குவான் போன்று ஊடுருவுங் கண்ணோக்கால் என்னை உள்ளத்து ஒழிவல் ஒடுக்கிய ஆண்டவன் பாத அழகில் ஈடுபட்டு என்னை யிழந்தே னெனல்.

576. விச்சையில் வல்லவோர் வித்தகனென் னுள்ளம்புக்
கெச்சிலாச் செய்தா னெனைத்தன் மயமாக;
மிச்சையா மற்றனைத்தும் விட்டொழிவா லென்னை
விட்டுப்
பிச்சியா நானவன்பாற் பேதுற் றெழிந்தேனே!

ஆண்டவன் என்னுட் புகுந்து தன்மயமாக்கி அவன்றன் எச்சிலாக என்னைச் செய்தான்; அதனால் யாவும் என்னை விட்டகல நான் அவனிடம் பித்துற் றெழிந்தே னெனல்

577. தானாக வென்னைத் தலையளித்த வாண்டவன்பால
யானான வென்னை யிழந்தொழிந்தே னுள்ளத்தில
வானாக முற்ற வளைத்தலுற்ற சுத்தசிவ
மோனானு பூதியென் முத்திப் பரசுகமே.

ஆண்டவனிடம் என்னை யிழந்தே னுள்ளத்தில் முத்திப் பரசுகம் வானாக வளைத்து நின்ற தெனல்.

578. அன்னியமொன் றில்லா வருட்பூ ரண சொருபப்
பொன்னடியென் னுள்ளம் பொலியவிளங்
கற்புதன்மெய்

வன்னவியல் வாழ்வு மலிந்தஞா ஞானுபவத்
தென்னையிழந் தேனகம்பே ரின்பவெளி யானதே.

தன் பொன்னடி என்னுள்ளத்தில் ஊன்றிய ஆண்டவனின் அருள் வாழ்வான ஞானானுபவத்தில் என்னை யிழந்து பேரின்ப வெளியானே னெனல்.

579. மடமைசேர் மாய மனக்கலக்கந் தீரக்
கடிமணம் பூண்டவருட் கண்ணாளன் பாதத்
தடிமையா முற்ற வடங்கினோன் யானென்
றிடுமந் நினைவே யிழந்தொழிந் தேனே.

கடிமணங் கொண்ட கண்ணாளனிடம் முற்றடிமையாகி 'நான்' என்னும் நினைப்பும் அழிந்தே னெனல்.

580. சொக்க வெனக்கென் சொரூபமா நின்றவருட
சொக்கன்பா லென்னறிவு தோற்றேற் ககங்காரப
பொக்க மனப்புன் புணர்ப்பான பாசபந்தம்
பக்குவிட மோனப் பரவெளிமீப் பொங்கியதே.

நான் சொக்கி நிற்கும சொரூபமாம் ஆண்டவனிடம் என் ஜீவ அகந்தை மதி யழிந்து பாச பந்தக் கட்டற்றுப் பரவெளியானே னெனல்.

581. உண்ணா ரமுத வொளிப்பிழப்பா வுள்ளியுள்ளி
விண்ணுள ரான விபுதர் வியக்கலுற்ற
கண்ணாள னனவென் கண்மணியின் கட்டழகிற்
பெண்ணான பேதையேன் பெண்மைநலந்
தோற்றேனே.

பிரம்ம விஷ்ணுக்களும் வியக்க வெழுந்த கண்ணாளனின் கட்டழகில் பேதையாகிய யான் பெண்மைநலன் தோற்றே னெனல்.

582. அன்னியன்போ லெண்ணி யலமரலால் வெட்கலுற்ற
கன்னியா மென்றன் கருத்தையெவ்வா
ரேுகவர்ந்தான் ;

அன்னியமல் லாதசுத் தாத்துவித மெய்க்கலப்பால்
என்னியல்யான் கெட்டே னிதயத் திறைவனுக்கே.

ஆண்டவனை அன்னியனுகக் கருதி வெட்கமுற்ற என் கருத்தை அவன் எவ்வாருே கவர்ந்தான். அன்னியமற்ற அத்துவிதக் கலப்பால் அவனிடம் என் இயல் பழிந்தே னெனல்.

583. அன்னியமல் லாதசுத் தான்ம சொருபனுக்
கென்னியல் யான்ருேற் றிழநததி லென்னகுற்றம ?
துன்னியசுற் றங்களாச் சூழ்ந்தமட மாதரார்
நன்னயமோ ராதென்னை நாண நகைக் கின்ருரே.

அத்துவித ஆன்ம சொருபனிடம என் அகந்தை யுணர்வை இழந்ததில் யாது குற்றம்? இதன் மேன்மை யறியாது மற்ற மாதர் நகைப்பதென்னே யெனல்.

584. மிக்கபரஞ் சோதியா மேவு சொருபவியற்
சொக்கனுக்கென் னுள்ளுணாவு தோற்றேனைத்
தோழியரும்
கெக்கலிக்கை கொட்டிநகைக் கேலிசெய்ய யானவர்
முன்
வெட்கமுற வுட்குவதோ வேதா விதித்ததே.

சொருபமாம ஆண்டவனிடம் என்னை யிழந்த வென்னைத் தோழியர் பரிகசிக்கவும் நான் நாணவும என் விதிபோலும் எனல்.

585 திண்டாடிக் கற்பனையிற் சீரழிந்த பேதையைத்தன்
பெண்டாகச் சிற்சொருபப் பேரருளாட் சித்திறத்தாற்
கொண்டானுக் கென்னைக் கொடுத்தேன்
குலாவாழ்வைக்
கண்டாரெல் லோராலுங் கொண்டாடப் பெற்றேனே.

என்னை அருளாட்சித் திறத்தாற் பெண்டாகக் கொண்ட ஆண்டானுக் கென்னைக் கொடுத்த பின் என் பேரின்ப வாழ்வைக் கண்டு யாவருங் கொண்டாடின ரெனல்.

(வெண்பா)

586. நானொழிந்த நாலடைந்த நட்டமெனக் கொன்றுமிலை
தானொளிர்ந்த தன்சொருப சித்தியால் மோனவியற்

பூரணமாங் கேவலசற் போதசுகத் தன்மயத்திற்
காரணவுங் கற்பனையின் றால்.

பூரண மோனமாம் சச்சிதானந்த அனுபவம் கிடைத்துவிட்டதால் 'நான்' என்னும் அகந்தை யழிவால் எனக்கு லாபமே யன்றி நட்ட மொன்றுமில்லை யெனல்.

587. கடந்தசச் சித்தைக் கடைப்பிடித்துத் தானுத்
தொடர்ந்தனுப விக்கவகந் தொட்டான்—படர்ந்த வெறுங்
கற்பனை ஜாலத்திற் கட்டுண்ட பொய்யகந்தை
சொப்பனமாச் சோர்ந்தொழிந்த தால்.

சச்சித் சொருபத்தை நான் சதாகாலமும் அனுபவிக்குமாறு ஆண்டவன் என்னுள் தீண்டவே, என் அகந்தை சொப்பனம் போல் மறைந்த தெனல்.

(குறள்)

588. மனவா சகங்கடந்த மன்னன்பா லொன்றி
எனைநா னிழந்தொழிந் தேன்.

589. சுட்ட வொணுமெய்த் துரீய சொருபனைக்கண்
டிட்டமுற்றே னென்னையிழந் தேன்.

590. உண்மைவாழ் வாக வொளிர்சொருபச் செம்மலுக்கென்
பெண்மைநான் முற்றவிழந் தேன்.

591. உண்மையா லென்னை யுயக்கொண்ட வாண்டவனென்
பெண்மையைப் பேதுறுத் தான்.

592. என்னிறையைக் கொள்ளைகொண்ட வெம்மா னுருவையன்றி
என்னுருவைக் காண்கின் றிலேன்.

குறிப்பு :— என் நிறை

593. மோனவுணர் வாக முயங்கலுற் றானுக்கென்
மானவுணர் வற்றேன் மனத்து.

594. ஆளன்மாட் டற்றெழிந்தே ளுன் சொருபமா
மாளலற்ற வாழ்வுபடைத் தேன்.

## கூடு—மலர்த்தினன்

(வெண்பா)

595. பிரேமியா நின்றவருட் பிச்சியாம் பேதைக்
கொரேமமா நின்ரு னுடையான்—பிரேமையா
லொத்தாங் குணர்வொருப்பட் டுள்ளத்தே சுத்தசச்
சித்தாங் கிளர்ச்சியுற் றேன்.

அருட்பிச்சியாகிய எனக்கு உடையான் இன்பமயமாய் நின்ருன். உணர்வு ஒருப்பட்ட அன்பால் உள்ளத்தே சச்சித் துணர்வு கிளர்ந்தே னெனல்.

596. உண்ணு ரமுதா வொளிர்சொரு பானுபவம்
பெண்ணுன பேதையேன் பெற்றுவக்கக்—கண்ணு
ரமுதமா வாண்டா னகமகமென் றுள்ளத்
தமிதமாத் தானருள்கின் ருன்.

பெண்ணுன பேதையேன் சொருபானுபவ சுகம் துய்க்கு மாறு ஆண்டவன் என் உள்ளத்தே அகமக மென்று அளவற்று ஸ்புரிக் கின்ரு னெனல்.

(குறள்)

597. வந்தென் மனத்தை மலர்த்தி யருள்சுரந்தான்
செந்தண்மை சேரந் தணன்.

598. சிவச்செம் பிரானருளிற் சீவியம்பொன் ஞகை
வவிர்ச்சியுறப் பெற்ற தறிவு.

## சசு—நெஞ்சு நிட்டையில் நிலைத்தது.

(வெண்பா)

599. கொண்டவருட் கோமானைக் கூடிக் குலாவலுற்ற
பெண்டகைநான் பெற்றேன் பிரம்மசுகம்
—மண்டுமயற்
பாசக் கலக்கமறப் பற்றற் றௌிர்சொருப
நேசத் தழுந்திற்றென் னெஞ்சு.

ஆட்கொண்டானைக் கூடிப் பிரம்மசுகம் பெற்றேனாதலின் என் நெஞ்சம் பற்றற்றுச் சொருப நிஷ்டையில் அழுந்திற்றெனல்.

(குறள்)

600. மன்றறிய வாண்ட மணாளன் சொருபத்தே
நின்றதென் னெஞ்சு நிலைத்து.

## சஎ—மனம் மூழ்கிற்று

(கொச்சகக் கலிப்பா)

601. தேகமகம் புத்திச் செருக்காக் கொழுத்துழல்பொய்ம்
மோகமாங் கன்னிமனம் முற்றக் கரைந்தொழிந்தேன்
ஏகரச மாக வியைந்திதயம் பொங்குசிவ
போகவுணர் வானவனு பூதிப் புணரியிலே.

ஏகரசமாக இதயத்திற் பொங்கும் சிவபோகக் கடலில், என் தேகாத்ம புத்திச் செருக்கான கன்னிமனம் முற்றுங் கரைந்தழிந்த தெனல்.

602. பன்மைசேர் மோகவகப் பாசா ணவமிலாத்
தன்மையா லென்னுட் டழைத்தொளிர்மெய்த்
தம்பிராற்
கென்மைய லுற்றநுமற் றின்னென்றன் மையலற
வுன்மனியா வுள்ளத் தொளிர்வுற்ற தோராங்கே.

அகங்கார மோகப் பாசமற்ற தன்மையால் என்னுள் விளங்கும் ஆண்டவனிடமே என் மனம் மையலுற்று, மற்றவற்றில் அற்று, உள்ளத்தில் உன்மனியாக விளங்கிற் றெனல்.

(குறள்)

603. ஆளன் சொரூப வழகிலழுந் துற்றமனம்
மீளுந் தரத்ததன்றென் பால்.

## ௨௮—திருவடியில்

(கொச்சகக் கலிப்பா)

604. நன்றுவக்க வென்னை நனிவிரும்பிப் பல்லோர்முன்
மன்றிலுற்று நன்கு மணந்து சொரூபமா
வொன்றலுற்ற வுண்மை யுடையா னருட்பதத்திற்
பொன்றலுற்ற தூனவகப் புன்கலக்கக் கீழ்மையே.

என்னை மன்றறிய வந்து மணந்து சொருபமாகச் சேர்ந்த ஆண்டவன் பதத்தில் அகந்தைக் கலக்கம் அழிந்தே னெனல்.

605. கருத்தமைதி சேரக் கலந்தான் பதத்திற்
றிருத்திசேர் வாழ்வு திளைத்தேன்; சொரூபப்
பரத்திலே சித்தம் பதிதலான் முற்ற
விரத்தியுண் டாயிற்று வேற்றுப் புலத்தே.

மனம் அமைதியுற என்னைக் கலந்த ஆண்டவன் பதவாழ்வில் திளைத்தேன். சித்தம் பரத்திற் பதிவதால் புலவேட்கை யற்றே னெனல்.

606. வெறியாற் செருக்குமனே வேகமற வுள்ளத்
தறிவா வணைந்தவென் றண்டவன்பா தத்திற்
செறிவால் விளைந்த சிவானுபவ மோனக்
குறியே குறியாக் குலவியது வாழ்வே.

மனச் செருக்கின் வேகமற அறிவாக அணைந்த ஆண்டவன் பாதத்தில் நிலைபெற்றதால் விளைந்த சிவானுபவச் சின்முத்திரையே என் வாழ்வுக் குறி யாயிற் றெனல்.

607. அங்கண லுள்ளத் தருளமுதம் பாய்ச்சியெனக்
கங்கம் புளகிக்க வாண்டா னதீந்திரியன்;
தங்கலால் வாழ்வு சதிர்த்தே னவன்பதத்திற்
பொங்குஞா ஞன்மானு பூதியாற் பூரித்தே.

ஆண்டவன் தன் கண்ணேறைக்கால் என்னுள்ளத்தில் அருளமுதம் பாய்ச்சினன் அவனடியில் தங்கி ஞானபூதியாற் பூரித்த வாழ்வு பெற்றேனெனல்.

608. விண்ணே சொருபமாம் விஞ்சை விளங்கவருட்
கண்ணு லெனைக்கலந்த கண்ணாளன் கற்பாருக்
குண்ணு ரமுதமா யூற்றெடுக்குஞ் சேவடியிற்
பெண்ணனை பேதையேன் பேரின்பங் கண்டேனே.

---

குறிப்பு:—விண் அருள்வெளியான பரவெளி.

சொருபாகாசம் விளங்க என்னைக் கண்ணுற் கலந்த ஆண்டவன் சேவடியிற் பேரின்பங் கண்டேனெனல்.

609. வன்பான வஞ்சமனம் மாயமாத் தான்கரைந்து
நன்பா லமுதா நயக்கவெனக் கின்சுவைசேர்
அன்பான சுத்த வருட்பிரான் பாதவுணர்
வின்பா விதயத் தினிது விளைந்ததே.

வஞ்சக நெஞ்சங் கரைந்து, பாலமுது போலாகுமாறு என்னாண்டவனது அருவடியின்பம் இதயத்தில் விளைந்ததெனல்.

610. விழுமியமெய்ஞ் ஞானவருள் வேட்கையீ டேற
முழுமுதலா முண்மைப் பழமுதலோன் றுள்ளங்
கெழுமுதலாக் காட்டிக் கிளர்சொருபன் ருளிற
பழுதியபே ரின்பப் பயன்படைத் தேனே.

என் ஞான வேட்கைபேடேற உள்ளத்தில் விளங்கும் ஓர் பழமுதற் பொருளைக் காட்டுவித்த ஆண்டவனருளில் பேரின்பம் படைத்தேனெனல்.

(வெண்பா)

611. பேரின்ப ஞானப் பிழம்பாங் குருபதத்தில்
வாரம் படைத்தேன் வசமிழந்தேன்—பேரன்பு

பட்டமனை மென்னைப் பரிகசித்துத் தானவனே
டொட்டியொன் ருயிற் றுரு.

ஞானகுருவின் திருவடியில் அன்புற்று வசமிழந்த என்மனம் என்னைப் பரிகசித்து அவனடியில் ஒட்டியொன்ருயிற் றெனல்.

612. அவதியற்ற மோன வருட்பரமன் ருளில்
யுவதியுற்றேன் மெய்ஞ்ஞான யோகம்—யுவதியுவ
பேதங் கழன்ற பிரம்மசொரூ பானுபவ
மோதங் கிளர்ந்த தகத்து.

யுவதியாகிய யான் ஆண்டவன் பாதத்தில் மெய்ஞ்ஞான யோக முற்றேன்; அதனல் யுவன் யுவதி என்னும் பேதமற்றுப்பிரம்மானந்தம் உள்ளத்திற் பொங்கியது.

613. நெஞ்சி லுறைப்ப நிறுவியதன் பாதவொளி
வஞ்சமனக் கற்பனையை மாய்த்தலால்—கொஞ்சிக்
குலவு சொரூபவருட் கோமா னடிச்சீர்
மலர்தலுற்ற தென்றும் மனத்து.

ஆண்டவன் பாத வொளி மனக்கற்பனையை அழித்தலால், கொஞ்சிக் குலவும் கோமான் திருவடி மகிமை என் உள்ளத்தில் மலர்ந்த தெனல்.

614. உண்மைநலன் யாதெனக்கென் ருேர்த்துணரி
லொட்பமுறு
வண்மையா லாண்டவன்பதந்தே—பெண்மைநலன்
பக்குவமா முற்றிப் பயன்படுவ தாகவுணர்ந்
தொற்கமுற வாழ்த லுளத்து.

ஆட்கொண்ட வானவன் பாதத்தில் வாழ்வதே எனக்கு உண்மை நலனுகும் எனல்.

615. கலந்தசிவ போதங் களிப்பான மோனத்
தலந்துரிய மாகத் தழைக்க—வலிந்துபற்றி
யென்னைக் கலந்த விறைவ னருட்பதத்து
மன்னிநான் வாழ்வுபெற் றேன்.

என்னை வலிந்து பற்றிக் கலந்த இறைவனால் சிவஞானானந்தமே துரியமாய் விளங்க,நான் அப்பதத்திலேயே நிலைத்து(நிஷ்டையுற்றுத் துரிய)வாழ்வு பெற்றேனெனல்.

616. தொண்டுபட்டு வாழத் துலக்கினான் மோகமறப்
பெண்டுகொண் டாண்டவருட் பேராளன்
—கொண்டவன்மெய்ப்
பாதமே யென்சொருபப் பண்பாப் பரந்தொளிர்சற்
போதமா முண்மைப் புலன்.

என்னைப்பெண்டு கொண்ட பெருமான் அவனது திருவடியே எனது சொரூபமாக விளங்கும் அறிவைத்தந்து அவனுக்குத் தொண்டுபட்டு வாழவைத்தா னெனல்.

617. ஆன்ம சொரூப வறிவொளியா லென்னுயிரைத்
தான்மணந்த சாந்த சதானந்தன்—ஊன்மயல்சேர்
வாதனையற் றேய மடித்தான் மலர்ப்பதத்தின்
போதமெனக் கின்பப் புலம்.

ஆன்ம ஞானத்தால் என் உயிரை மணந்த ஆண்டவனது திருவடி ஞானமே எனக்கு இன்பப் புலன் எனல்.

(குறள்)

618. அரியபரா னந்த வருட்சே வடியில்
மருவியபே ரின்பமே வாழ்வு.

619. கடிமணஞ்செய் தாண்டவருட் கல்யாண மூர்த்தி
அடிமணஞ்சேர் வுற்ற தகத்து.

620. தெள்ளியோன் சீபாத சேவையாற் கள்ளியே
னுள்ளியோ ளானே னுளத்து.

621. அன்புணர்வா லென்னை யணைந்தவன்மோ னானுபவச்
செம்பதவாழ் வின்பச் செழிப்பு

சகூ—பிறவி யறல்

(கொச்சகக் கலிப்பா)

622. மிக்க வியன்சொருப வேட்கையை முற்றுவித்த
சொக்கனரு ளான சொருபானு பூதிவெள்ளத்

துக்கதுநா னென்னும்பா ழைத்தையகப்
பேய்முனைப்பாற்
புக்கபல் வேறுவகைப் புன்பிறவித் துன்பமே.

என் ஞான வேட்கையை முற்றுவித்த சொரூபானுபூதி வெள்ளத்தில் நானென்னும் முனைப்பால் வந்த பிறவித் துன்பம் மூழ்கி யழிந்த தெனல்.

623. பிறவா விறவாப் பெருமான் சொருப
வறிவா லவனை யணைதலுற் றேனுக்
கிறவாப் பிறவா வியல்பிற்ற முண்மை
நிறைவான மோன நிலைவிளங் கிற்றே.

பிறப்பிறப்பற்ற சொருபப் பெருமானை அறிவாலணைந்ததால் பிறப் பிறப்பற்ற மோனநிலை விளங்கிற்றெனல்.

624. ஓர்ந்தறிந்தா ருள்ளத் தொளிர்சொருபன் வீட்டுலகாள்
வேந்தன் குருரமண வித்தகன்என் னுருயிர்க்கோர்
காந்தன் விசுத்தவருட் கைவல்ய சந்நிதியிற்
பேர்ந்ததுமா மோகப் பிறவிக் கலக்கமே.

அருள்வடிவனை ஆண்டவன் சந்நிதியில் பேதைமையான பிறவிக் கலக்கம் பேர்ந்தொழிந்த தெனல்.

625. வன்புறுபொய்ம் மாய மயக்கவுயிர்ப் புன்பிறவித்
துன்பறமெய்ஞ் ஞான சொருபசுபத் தன்மையுற்றேன்
அன்புணர்வு பொங்கவென் னுகங் கலந்தபே
ரின்பவுணர் வான வியற்செம் பிரான்பதத்தே.

என் அங்கங் கலந்த இன்ப வடிவினனை ஆண்டவன் பாதத்தில் பிறவித் துன்பமற்று ஞானசொருபத்தன்மை யுற்றனெனல்.

## ௫௰—முத்தி

(கொச்சகக் கலிப்பா)

626. அன்பா வறிவா வருள்வாழ்வா வற்புதப்பே
ரின்பா விதயத் தியல்சொருபக் கண்ணுளன்

தன்பா லெனக்குச் சதிர்த்தமோ ரனுபவ
மொய்ம்பாலே கைவல்ய முத்தி முழுவியதே.

ஆண்டவன்பாற் சதிர்த்து அனுபவ பலத்தாற் கைவல்யமுத்திக் கலப்புற்ற தெனல்.

627. வெற்றிசேர் சுத்தவருள் வித்தகனோ டொத்தொழுகும்
பெற்றியா லென்னுணர்விற் பேதவகப் பேய்பிரியப்
பற்றியே நின்ற பராபத்தி வாழ்வெனக்கு
முற்றியதோர் மெய்ஞ்ஞான முத்திப்பே றாகவே.

குறிப்பு: வித்தகன்— வித்தகன் திருவுள்ளத்துக் காகுபெயர்.

ஆண்டவனோடு ஒத்தொழுகுதலால் உண்டான பராபக்தி வாழ்வு எனக்கு முக்திப் பேறாயிற் றெனல்.

628. அறிவே சொரூபமா வாண்ட பிரானோ
டுறவு கலத்தலுற்ற வுள்ளுணர்வாற் சற்றும்
பிறிவில்வாழ் வாகப் பெருகியது முற்ற
நிறைவா வியல்சொருப நித்தமுத்திச் சீரே.

அறிவு சொரூபமான ஆண்டவனோடு உறவு கலந்ததால் நித்தமுத்தி வாழ்வு பூரணமா யடையப் பட்ட தெனல்.

629. ஈனக் கடையே னிதயம்புக் காண்டுகொண்ட
ஞானக் கரும்பான நம்பனையென் செம்பொனைச்செவ்
வானக் கடவுளைநான் மண்ணினின்மேற் பேரின்ப
மோனக் கனிபெருகு முத்தியாத் துய்த்தேனே.

என்னுள்ளத்திற் புகுந்தாட் கொண்ட தேவதேவனை இப்பூவுலகில் முக்தி வடிவாக அனுபவித்தே னெனல்.

630. உறவு கலந்த வுடையான் சொரூப
வறிவு பராவமுதா வார்ந்ததால் உள்ளத்
திறவிலா வுண்மை யியலடைந்து மோன
நிறைவேவீ டாக நிலைதலுற் றேனே.

உறவு கலந்த ஆண்டவனது சொரூப ஞானவமுதால் அழிவின்மை யடைந்து மோனமே மோக்ஷமாக நிலை பெற்றே னெனல்.

631. விழைவுற்ற பேரின்ப வீட்டுநலம் பெற்றேன்,
உழையுற்ற மெய்யன்ப ருள்ளுணர்வூ டூனப்
பழியற்ற சுத்தப் பரமபதங் காட்டும்
சுழியற் பிரான்சொருபந் தோய்ந்தவாற் ருலே.

நவமியற்றும் அன்பருள் பரமபதங் காட்டும் சுழியற் பிரானது சொரூ பத்தில் தோய்ந்ததால் வீடுற்றே னெனல்.

632. எல்லையில்பே ரின்ப வியற்பரவீட் டொள்ளொளிசேர்
நல்வரவா வுள்ளத்து நண்ணியமெய்ஞ் ஞானவருட்
செல்வனங் கென்னைச் சிறையிட்டான் சித்துருவை
யல்லதுநான் றேறே னறம்பொருளின் பங்களே.

ஆண்டவன் மோக்ஷவொளியாக வந்து என்னைச் சேர்ந்து ஞான சொரூபமாகச் சிறையிட்டதால் சதுர்யார்த்த காமங்களை வேண்டே னெனல்.

633. மூடு மவித்தை முனைப்பாங் கிரந்தியற
வூடுருவு நோக்கா லுளம்புக் கொளிவெளியாக்
கூடியதெய் வீகக் கொழுநன் சொருபங்காண்
வீடுபே ருக விளங்குவதென் னுருயிர்க்கே.

சிச்சடக்கிரந்தியற வூடுருவும் ஞான நோக்கால் என்னுள்ளத்திற் கூடிய கொழுநன் சொரூபமே எனக்கு வீடுபேருக விளங்குகின்ற தெனல்.

(வெண்பா)

634. சாந்திபதங் காட்டித் தடுத்தாண்ட வென்னருமைக்
காந்தனருட் காதற் கடிமணத்தில்—வாய்ந்தபே
ரின்பமே துன்றுசிவ யோகஞா னனுபவ
நன்பதமா முத்தி நலன்.

ஆண்டவன் காதற் கடிமணத்தால் வாய்த்த பேரின்பமே சிவயோக ஞானனுபவமான முக்தியாயிற் றெனல்

635. யாது குறையுமெனக் கின்றுக வாண்டவனெப்
போதுங் கலந்தவனு பூதியால் ஓதுசிவ

பூரணமா மோனவருட் போதவொளி யார்ந்தியல்வாழ்
வாரமுத முத்தியே யாம்.

* அமுதமுத்தி—அமிர்தத்துவமான முத்தி;
(அமிர்தத்துவம் —சாவாநிலை)

எனக்கு யாதோர் குறையுமில்லாதவாறு ஆண்டவன் கலந்த அனுபூதியாற் சிவபோதந் திளைத்த வாழ்வு அழிவற்ற முத்தி யாயிற் றெனல்.

## ருக—ஊடல் இல்லேன்.

(வெண்பா)

636. ஊனுயிராய் மாழ்குற் றுழலுங்காற் காவலனைத்
தானெனைவந் தேற்றுத் தலையளித்தான்
—யானெனுமப்
பேதைமைசெற் றாண்டவருட் பெட்பா லுடையானோ
டியாதுமெனக் கில்லை வழக்கு.

தானே வந்து என் அறியாமையை யழித்தாட்கொண்ட என் தலைவனோடு எனக்கு எக்காலும் ஊடல் வழக்கே யில்லை யெனல்.

637. ஊடலெவன் யானவனோ டடி யுணங்கிமனம்
வாடலெவன் வாடி வருந்தலெவன்—கூடலெவன்
காற்றிடைபோ மாமற் கலந்தென்னோ டென்றுமணை ந்
தூற்றமுத மானா னுளத்து.

இடையிடின்றிக் கலந்து, என்றும் அமுதவூற்றா யணைந்திருக்கும் என் ஆண்டவனோடு இனி நான் ஊடலோ, வாடலோ, வருந்தலோ, மீண்டுங்கூடலோ எவ்வாறியலும் எனல்.

## ருஉ—ஒன்றுதல்

(வெண்பா)

638. சொக்கவே மிக்க சொரூபவொளி காட்டியெனைச்
சிக்கவே வைத்தான் சிவபதத்தே—தொக்கவுணர்

வொன்றுபட லான வுளத்தே யுடையானே
டொன்றுபட லானே னுயிர்.

ஆண்டவன் ஏகசொரூப ஒளிகாட்டி என்னைச் சிவபதத்திற் சேர்வித்தான். அவ் வேகான்ம வுணர்வால் உடையானோடு உயிர் ஒன்றுபட்டேனெனல்.

639 அத்துவித மாக வகந்தைதனையச்செற் றன்மாவிற்
றொய்த்துவித மோகப் புலம்பொழித்தான்
—மெய்த்துரிய
ஞான சொரூபமாம் நம்பனோ டொன்றுபட்டு
மோனசதா னந்தியா னேன்.

அகந்தையை யழித்துத் துவித மோகம் ஒழித்த துரிய சொரூபனான தலைவனோடு ஒன்றிச் சதானந்தி யானேனெனல்.

640. கருணையா லென்னைக் கடைக்கணித் தாண்ட
அருணையா னன்பி லமிழ்ந்தேன் —தருணியா
மென்றன் சொருபப்பே ரின்ப ரமணனா
வொன்றினா னுள்ளத் தொளிர்ந்து.

ஆண்டவ னன்பில் யான் முழுகுதலும் என் ஆன்மசொரூபப் பேரின்ப ரமணனாக உள்ளத்தில் விளங்கலானா னெனல்.

(குறள்)

641. *இராமாறு வந்தபே ரின்பன் சொரூபப்
பிரானாக வொன்றினன் பின்.

* இராமாறு—இரவுதோறும், இராத்தோறு மட்டும்.

642. கண்மணியா வுள்ளங் கலந்தவன்பால் யானென்னு
முண்மயல்போ யொன்றிற் றுணர்வு.

643. அருட்பெருவாழ் வாக வனைந்தானோ டொன்றி
யிருப்பதனா லேத மிலேன்.

644. பொன்றாத் துணையாய்ப் பொருந்தியது
தன்னோடென்னை
யொன்றாக வாண்டா னுணர்வு.

645. உணர்வே புணர்வா வுளந்தெளிந்தேன் சற்றுந்
தனைவலருந் தன்மைசதிர்த் தேன்.

### ருரு—யோக முறல்.

(கொச்சகக் கலிப்பா)

646. அறிவே சொரூபமா வாண்ட பிரானோ
டுறவு கலத்தலால் யோகவுணர் வுற்றேன்;
மறவிசேர் பாச வடிவ வகந்தை
யறவொழிவால் அன்பி லழுந்தலுற் றேனே.

ஞான சொரூபனுடன் உறவுகலத்தலால் யோகம் பெற்றேன். அகந்தை யழிவால் அன்பி லழுந்தினே னெனல்.

647. பிழைதீர் சொரூபப் பெருமான் பணியாற்
றுழைய ரினத்தோ டுறலால், அருளா
லொழிவிலா யோக வுணர்வூற வுள்ளத்
திழையா நின் றேனென்று வெம்பிரா னோடே.

ஆண்டவன் அடியா ருறவிலேயே மகிழுந் தன்மைய னாதலால், உள்ளத்தில் அவனோடு யோகவுணர்வுற்று ஒன்றி நின்றே னெனல்.

648. மாலுறவு பூண்டு மயங்கினேன்; சுத்தவருள்
வாலறிவா மோன வசிகரன்கண் ணோக்கத்தால்
ஏலவென் னுள்ளத் தெழுந்தருளி மெய்ஞ்ஞான
சீலயோ கானுபவஞ் சேர்த்தான் செழிக்கவே.

பொய்யுறவில் மயங்கி யிருந்த வென்னை ஆண்டவன் தன் கண்ணோக் கால் உள்ளத்தில் எழுந்தருளி, யோகானுபவம் சேர்த்தா னெனல்.

649. செத்த மனத்திற் செழித்தொளிர்சுத் தானந்தன்
முத்த சொரூப முனீந்திரனென் பாலருளி
நித்த மணாளனு நெஞ்சத் துறைதலால்
எத்தனையில் லாதியல்பா வேய்ந்ததுமா யோகமே.

முக்திசொரூபனும் சுத்தானந்தனுமான ஆண்டவன் நித்த மணுளனாக என்னுள் உறைதலால் மகாயோகம் சகஜமாயிற் றெனல்.

(வெண்பா)

650. கூடினேன் கூடிக் குலாவினேன் குற்றநினைந்
தூடினே னூடி யுணங்கினேன்—வாடி
வதங்கினேன் வாழ்த்தி வணங்கினே னுள்ளத்
தொதுங்கினேன் யோகமுற் றேன்.

ஆண்டவனைக் கூடினேன், குலாவினேன், குறித்தமைக்கிரங்கி வாடி வருந்தினேன்; அவனை வாழ்த்தி வணங்கினேன்; உள்ளத்தில் ஒடுங்கினேன்; இவ்வாறு யோகமுற்றே னெனல்

651. திருத்தமா முண்மைத் தெளிவான பத்திக்
கருத்தருளி யாண்டான் கலந்தான்—பொருத்தமா
வொன்றுபட்ட யோக வுணர்ச்சியெனக் குள்ளுணர்வா
வென்றுமியல் கின்ற தினிது.

நிஜபக்தி யளித்துக் கலந்த ஆண்டவனோடு ஒன்றுபட்ட யோக வுணர்ச்சி என் னுள்ளுணர்வாக என்றும் விளங்குகின்றதெனல்.

652. ஒழிவறவென் னுள்ளத் தொளிர்சொருப யோகக்
கெழுமலுறக் கண்டவருட் கேள்வன்—பொழிவுறுபே
ரின்பக் கருணை யிடைவிடா தென்னுணர்வைத்
தன்பக்க மாக்கிற்றுத் தான்.

உள்ளத்தில் ஓயாது சொருபமாகச் சேர்ந்துள்ள என் கேள்வன் பொழியும் கருணை என் உணர்வை அவனிடமே நிலைப்பித்ததெனல்.

## ருசு—கிரந்தி பேதம்

(கொச்சகக் கலிப்பா)

653 தேறக் தெளிந்தசிவச் சிற்பரமோ னனுபவப்
பேறளித்த பெம்மான் பெரிதினிய னென்னினுந்தான்;

ம்பேறளித்த பெம்மான் பெரிதினிய ஞநின்றே
கூறிட்டென் சிச்சடத்தைக் கொன்றெழித்தான்
கூட்டோடே.

மோனனுபவப் பேறளித்த ஆண்டவன் எனக்கு மிகவும் இனிய ஞனாலும், என்ஜீவ வடிவச் சிச்சடக்கிரந்தியை அடியோடு வெட்டி வீழ்த்தின னெனல்.

654. அடற்கரிய சிச்சடக்கட் டான்மவிசா ரத்தாற்
படக்கென் றறுபடவே பாரவெளித் தன்மை
மடுக்கலுற்ற சுத்த மனந்தானே யாக
நடக்கலுற்ற வாண்டவனை நானுவக்கின் றேனே.

விசாரத்தாற் சிச்சடக்கிரந்தி யறுபட்டுச் சொரூப வெளியான சுத்த மனமாகவே திகழும் ஆண்டவனையே நான் ரமிக்கின்றே னெனல்.

(குறள்)

655. கலந்தகண் ணனருட் கண்ணேக்காற் கட்டற்
றலர்ந்ததுபே ரின்ப வகம்.

## ருரு—துரீயானுபவம்

(கொச்சகக் கலிப்பா)

656 திடவறிவா(ம்) மோனத் திறத்தாலே யன்றிக்
கடவுளா வுள்ளவியற் கர்த்தனையார் காண்பார்
மடவளா மென்னை மயக்கித் துரீயச்
சுடரொளியாத் தோய்ந்தான் சொரூபப் பிரானே.

ஆண்டவன் மடவளான தன்னை மயக்கித் துரீயசொரூபமாகத் தோய்ந்தா னெனல்.

657. பொய்யளா மென்னைப் புழுக்கூ டிதுகாத்து
மையலா யிவ்வுலக மாயத்தே மாய்ந்தொழியா
துய்யவென் னுட்புக் குணர்வொளியா வாண்டவனைத்
துய்ய துரீய சொருபமாத் தோய்ந்தேனே.

பொய்யனாகிய நான் உலகமாயத்தில் விழுகாதவாறு ஆட்கொண்டு, என்னுள்ளம் புகுந்த ஆண்டவனைத் துரிய சொரூபமாகத் தோய்ந்தேனெனல்.

658. அன்பினா லன்றியறிந் தாரவொண்ணா வற்புதமெய்ந்
நம்பன்பே ரின்ப நலங்கிளர்வாழ் வுள்ளுறைப்ப,
வன்புசேர் வஞ்சமனோ வாதனையா மோதியபாழ்ந்
துன்பமகல் சுத்தத் துரியமீப் பொங்கியதே.

பக்தியாலன்றி யடைய முடியாத ஆண்டவனின் பேரின்ப வாழ்வு உள்ளத்திற் கிடைத்ததால், மனத்துன்ப மகன்று சுத்தத் துரியநிலை பொங்கிய தெனல்.

659. கருதன் மறத்தல கழன்றொழிய வுள்ளத்
தொருதன் மயமா மொளிர்சொருபப் பெட்பால்
உரிதின் மணந்த வுடையானோ டொன்றித்
துரிய வியல்பாத் துலங்கியது வாழ்வே.

நினைப்பு மறப்பற உள்ளத்தில் விளங்கும் மணாளனோடு ஒன்றாகி வாழ்வு துரியமாயிற் றெனல்.

660. கருதரிய சுத்தவருட் கைவல் லியமெய்ப்
பெருவளவன் சொந்தப் பிராண வடைந்தேற்
கொருகுறையு மற்ற வுணர்வொளிசே ருண்மைத்
துரியவியல் வாழ்வகத்துத் தோய்ந்ததுமா ரூதே.

கைவல்லியப் பெருவளவனை என்சொந்தப் பிராணனாக அடைந்த எனக்குக் குறைவற்ற துரிய வாழ்வு உள்ளத்திற் கிட்டிய தெனல்.

661. தொல்லியல் சான்ற சொருப மணாளனோ
டல்லும் பகலுமரு வைக்கியமெய் யன்புறவாற்
றுல்லிய மற்ற துரீய மதீதமாப்
புல்லிய துள்ளம் புணர்வுபிரி வின்றியே.

இரவும் பகலும் மணாளனோடு சேர்ந்திருக்கும் அப்புணர்வால் சேர்தல் பிரிதலற்ற துரியாதீத வுணர்வு உள்ளத்திலேற்பட்ட தெனல்.

662. உரியனு முண்மை யுடையான் உளத்திற்
பிரிகிலா தென்னைப் பிரியமா வாண்டான்
குரிசிலா மோனவருட் கோமான் அதீதத்
துரியமா வென்றுந் துலங்கலுற் ருனே.

என்னுரிமை நாதனும் என்னை அன்போடு ஆண்டவனுமான அருட் கோமான் துரீயாதீத மாகவே என் உள்ளத்தில் விளங்குகின்ருனெனல்.

(வெண்பா)

663. ரமிக்க ரமிக்க ரமணீய மாக
விமைக்கவொ ணு துள்ளத் திலங்கும்—ரமணனது
தோற்றமறை வற்ற துரீயவருட் போகமா
வூற்றெடுக்கு முண்மை யுரு.

இமையாது உள்ளத்தில் விளங்கும் ஸ்ரீரமண சொருபமானது ரமிக்க ரமிக்கத் தெவிட்டாத மறையாத துரீய அருட்போகமாக எனக்கு ஊற்றெடுக்கு மெனல்.

(குறள்)

664. துரிய சொருபமாத் தோய்ந்தென்னை யாண்டான்
பெரியபரஞ் சோதிப் பிரான்.

## ருசு—பேரின்பம்

(கொச்சகக் கலிப்பா)

665. எக்காலு மொக்க வியற்சிற் பரந்தானு
மிக்கா ஞெருத்தனருள் விஞ்சையா லென்னுளத்திற்
புக்கானை யெண்ணிமனம் பூரித் தெழுவதோர்
மெய்க்காதல் பொங்க விசைத்ததுபே ரின்பமே.

என்றும் ஒருபடித்தான சிற்பர சொருப ஞெருவனது அருள்விஞ்சையால் அவனையே யெண்ணி உள்ளம் பூரிக்கும் மெய்க்காதல் பொங்கி பேரின்பம் உண்டாயிற் றெனல்.

666. அண்ணு மலையெனமெய் யன்பரா லார்வமுறப்
பண்ணு லிசைக்கலுற்றுப் பார்க்கோர் பரஞ்சோதிக்

கண்ணு வியல்சொருபக் கண்ணாளன் காட்டினன்
உண்ணு ரமுதவுணர் வூறுபே ரின்பமே.

குறிப்பு—அண்ணு மலையென் றறிஞரால் எனவும் பாடம்.

அன்பர்களால் அண்ணுமலை யென்று புகழப்பட்டு உலகுக்கு ஞானப் பரஞ்சோதியாய் விளங்கும் என் கண்ணாளன் எனக்குப் பேரின்ப வுணர்வு காட்டினு னெனல்.

667. பேத மயக்கமறப் பேர்ப்போன் சொருபவருட
காதலாற் சிந்தை கலங்கலுற்ற கன்னியேன்
மீதிமையா நோக்கவருள் வித்தகக்கண் வீசிறுனை
மோதமய மான முயக்கபரு மாட்சித்தே.

குறிப்பு: இமையா நோக்க வருள் வித்தகக் கண் — இமைத்தலற்ற சொருப ஞான திருஷ்டியென்னும் அருட்பார்வை. அருமாட்சித்து—இடைவிடாத, முடிந்தொழியாத மாட்சி யுடையது

பேத மறுக்கும் பெருமான் அருட்காதலுற்ற கன்னியாகிய என்மீது இமையாமல் கண்ணோக்கம வீசலும முடிவற்ற பேரின்பம உண்டாகிய தெனல்.

668. தொக்க பரஞ்சோதிச் சொக்கன் சொருபமாப்
புக்கென் னுணர்விற் பொருந்தலுற்ற புண்ணியன்பால
மிக்கமெய்க் காதல் விசைத்தெழுபே ரின்பவுணர்
வொக்க வெழுந்ததுபே ரூற்றாக வுள்ளத்தே.

என் னுள்ளத்தி லெழுந்தருளிய ஆண்டவன் பால் மிகுந்தெழுந்த காதலே பேரின்ப ஊற்றாயிற் றெனல்.

669. தொன்றேயென் சொந்த சொருபமா வுள்ளத்து
நின்ற பிரான்சந் நிதியிலே சென்றுடைந்தாங்
கென்றுமொன் ருன வியற்சிற் பரசொருப
வென்றிபே ரின்பம் விசைத்தெழுமீப் பொங்கியதே

என்னுள்ளத் துற்ற ஆண்டவன் சந்நிதியை யடைந்தும் சொருபப் பேரின்பம் பொங்கிய தெனல்.

670. பூட்சிபே ரெல்லாப் புடிகளுக்குந் தப்பாத
சாட்சியா வுள்ளவருட் சைதன் னியசொருப

மாட்சியா லென்னை மணந்தபிரான் செய்யுமெய்யன்
பாட்சியா லார்ந்தெனைக் கந்தமில்பே ரின்பமே

குறிப்பு: புடிகள்—திரிபுடிபேதங்கள்; ஆட்சியால்—ஆட்சியிலே.

முப்புடிகட்கும் சாட்சியாய் வைகுதன்னிய சொருபமாகவே என்னை மணந்த பெருமானின் அருளாட்சியால் எனக்குப் பேரின்பம் சேர்ந்த தெனல்.

671. வாய்ந்தமோ னானந்த வைப்பான சத்தவருட்
காந்தனா லுள்ளங் கவரப்பட் டேனுக்காங்
கோய்ந்தொடுங்கு சித்த விருத்தியால் ஊழுமுப
சாந்திமய வாழ்வாந் தழைத்ததுபே ரின்பமே.

மோனக் காந்தனான ஆனந்தனாலுள்ளங் கவரப்பட்டு என் சித்தவிருத்தி ஓய்ந்தொடுங்கியதால் உபசாந்தி வாழ்வான பேரின்பந் தழைத்த தெனல்.

672. ஆதரங்கூ ரன்பா லகங்கனிரா பொங்குசுபக்
காதலன்பா லாசைக் கனிகூர்பே ரின்பமுற்றேன்;
சாதனையா லோர்ந்துணர்ந்து சாதிக்கத் தக்கபெரு
மேதகவா லென்னுள் விளங்கலுற்ற னம்மானே.

என் காதலனான ஆனந்தனிடம் அன்பாற் பேரின்ப முற்றேன். அவனே என்னுள் சாதனையா லறிந்தடையத் தக்க பொருளாய் விளங்கினா னெனல்.

673. அயன்கற் பனையென் னகத்திற் புகாமல்
வியன்சிற் பரமா விளங்கு சொரூப
வியன்மலிந்த வாண்டவனோ டேய்ந்துபே ரின்ப
நயன்மலிந்த வாழ்வு நடாத்துகின் றேனே.

மாயை யற்று உள்ளத்தே விளங்கும் சொரூபப் பிரானோடு சேர்ந்து பேரின்ப வாழ்வு நடத்துகின்றே னெனல்.

674. ஏக்கமீக் கூர வடைவிடா தென்மனத்தைத்
தாக்கியசந் தாபமறத் தண்ணளிசெய் தாண்டபிரான்
சூக்கமா மோக்க சொரூபப்பே ரின்பவுணர்
வாக்கமா நாளு மடைந்ததுவாழ் வாகவே.

என்னுள் இடைவிடாதெழுந்த இறைதாபந் தணிவித்த ஆண்டவனால் மோக்ஷ சொரூபப் பேரின்ப வாழ்வு அடையப் பெற்றேனெனல்.

675. விரியலுற்ற சுத்த வெளியா வகம்பொங்
கருமைசே ரம்மான் அருளா லகம்புக்
குரிமையா வென்னை யுவந்தணைந்தான் மாட்டுப்
பிரிவில்பே ரின்பப் பெரும்பயன்சார்ந் தேனே.

உரிமையோடு என்னை யணைந்து உள்ளத்தில் வெளியா விளங்கும் ஆண்டவனிடம் பிரிவற்ற பேரின்பப் பெரும்பய னடைந்தேனெனல்.

676. நிறைவான மோன நிலைவிளங்க வுள்ளத்
தறிவா வணைந்த வருட்பிரான் மாட்டுக்
குறிகுணந்தீ ருண்மைக் குலாவாலே பேதை
பிறிவில்பே ரின்பப் பெருவாழ்வுற் றேனே.

குறிப்பு :—பேதை—பேதையேன் எனத் தன்மைக்கண் வந்தது.

உள்ளத்தில் அறிவாக என்னை யணைந்து பூரணமோனம் விளக்கிய ஆண்டவனிடம் குணங்குறி யற்ற பேரின்ப வாழ்வு பெற்றேனெனல்.

667. கள்ளக் கருத்தாற் கடைப்பட்டேன் கண்ணோக்கி
யுள்ளத் தலத்து டொளிபெருக வாண்டவன்பாற்
கொள்ளக் கிடைத்தவருட் கொள்ளையாற் பேரின்ப
வெள்ளப் பெருக்கா விளைந்தே னனுபவமே.

கடைப்பட்டிருந்த நான் ஆண்டவனிடம் இட்ட அருட்கொள்ளையாற் பெருகும் பேரின்ப வெள்ளம் பெற்றேனெனல்.

678. அருவருமோ கப்பா ழுகப்பேய் முனைப்பாந்
தெருமரலோ டேனை வெருவரலுந் தீரக்
குருவருளின் மாட்சி குலாவலா லுள்ளத்
திருவருமொன் றுகப்பே ரின்புகலந் தோமே.

குருவருள் மாட்சி குலாவுதலால் உள்ளத்தில் ஆண்டவனும் நானும் ஒன்றாகப் பேரின்பங் கலந்தோமெனல்.

679. வன்புசேர் கன்னிமையின் மாயமனத் துன்பத்தாற்
றன்பரமே யாகச் சரண்புக்க தன்னடிச்சிக்
கன்புணர்வு பொங்க வகங்கலந்த வாண்டவன்பா
லின்பவுணர் வூற விதயம்பூ ரித்ததே.

சரணடைந்த இவ்வடிச்சியை மாய மனத்துன்ப மறவும், அன்பு பொங்கவும், அகத்திற் கலந்த ஆண்டவனிடம் இன்பம் பொங்கி இதயம் பூரித்த தெனல்.

680. சிவக்கச் சிவக்கச்சிந் திக்கலுற்றோர் காணச்
சிவக்கொழுந்தா வென்னகத்திற் சேர்ந்த பிரானோ
டுவக்க வுவக்கவென் னுள்ளம்பூ ரிக்கத்
தவக்கலந்தே னுற்றமகிழ் சாற்றவொண் ணாதே.

---

குறிப்பு :—தவ—மிக.

என்னுள்ளத்திற் சேர்ந்த ஆண்டவனோடு இனிக்க வினிக்க நான் மிகவுங் கலந்த பேரின்பம் சொல்லற் கரிய தெனல்.

681. அழகிய பெம்மா னடிகளோ டன்பாற்
பழகிய வாற்றாற் பரசுகம் பெற்றேன்;
தொழுமியல் சான்ற சொரூபப் பிரான்பால்
விழைவுறு வேட்கை விசுத்தத் தவமே.

ஆண்டவனோடு பழகியதாற் பரசுகம் பெற்றேன்; அவனிடம் கொள்ளும் வேட்கையே என் தவமாகு மெனல்.

682. தராசுநுனி போன்ற சமத்துவநோக் கான்ற
பிரானருளே முற்றமுற்றப் பேணலுற்றே னுள்ளத்
தொராஞெருபே ரின்ப வுணர்வுமீக் கூர்வால்
விராகமுற்றேன் மோக விடயங் களிலே.

நடுநிலை தவறாத ஆண்டவ னருளையே நாடிய என்னுள்ளத்திற் பேரின்பம் பெருகுவதால் விடயங்களில் வைராக்கிய முற்றே னெனல்.

(வெண்பா)

683 தனக்கேநா ளுட்பட்டேன் சஞ்சலமாத் துன்று
மனக்கேத மற்று மகிழ்ந்தேன்—எனக்குரிய

சாந்த ரசானுபவஞ் சான்றவருட் காந்தனிடம்
தோய்ந்தேன் பரம சுகம்.

ஆண்டவனுக்கே யாட்பட்டு மகிழ்ந்தேன். எனக்குரிய காந்தனுன அவனிடம் பரம சாந்த ரசச் சுகானுபவம் தோய்ந்தே னெனல்.

684. உண்மைநிலை யுள்ளத் தொளிபெருகத் தோய்வித்த
கண்மணியாந் தெய்வவருட் கற்பகத்தை-வண்மைசே
ருத்தமசற் போத வுணர்ச்சிமீக் கூரமிகத்
துய்த்தலுற்றேன் சாந்த சுகத்து.

மெய்ந்நிலை யருளிய அருட் கற்பகமான என் கண் மணியைச் சற்போத உணர்ச்சி மிகுந்து சாந்தி சுகமாய்த் துய்த்தேன் எனல்.

685 இணையிலாக் கீர்த்திசே ரெம்மா னெனக்குத்
துணையாக வாழ்வு துலங்கத்—தணியாத
மோகக் கடல்சுவறி மோனவருட் பேரின்ப
தாகந் தணிந்தேன் சதிர்த்து.

ஆண்டவன் என் வாழ்வுத் துணைவ னானதால் மோகக் கடல்வற்றி, பேரின்ப தாகந் தணிந்தே னெனல்.

(குறள்)

686. அறக்கெடுத்த வாண்டா னருட்செம் பதத்திற்
பெறக்கிடைத்தேன் பேரின்பப் பேறு.

687. இரம்மியமா மோனப்பே ரின்ப மளித்தான்
பிரம்மமா வுள்ள பிரான்.

688. அன்புசிவ மானஞா னுபவம் பொங்கவகத்
தின்பவுணர் வானு னிறை.

689. கள்ளியேற் கூறியது கண்ணுள னுலிதயத்
தொள்ளியபே ரின்ப வுணர்வு.

690. உளத்திலே யென்னை யொடுக்கினுன் மாட்டுத்
திளைத்தே னியற்சிற் சுகம்.

## ௯—கைவல்யம்

(கொச்சகக் கலிப்பா)

691. குருவரன்கண் ணோக்கக் குலாவா லிதயத்
திருவருமொன் றாக வியல்சொருப வுண்மை
வெருவருதே கோக வெறிசேர் மதியாற்
றெரிவரிய சுத்த சிவக்கே வலமே.

குறிப்பு :—இருவரும்—யானுந் தானும்.

குருநாதன் அருள்நோக்கால் இருவரும் இதயத்து ஏகமாக விளங்கும் சிவக்கேவல நிலை ஜீவமதிக்கு அறிய முடியா தெனல்.

692. களவிலே வந்து கலந்தான் சொரூப
வொளியிலே நானெனும்பொய் யூனமற வுள்ளத்
தளவிலா மோன வருட்பெருவாழ் வாகத்
தெளிதலுற்றேன் சுத்த சிவக்கே வலமே.

என்னைக் களவிற் கலந்த ஆண்டவனது சொரூப ஒளியால் அகந்தை யழிந்து, மோன அருள்வாழ்வான சிவக்கேவலம் தெளிந்தே னெனல்.

693. அறிவா வவிர்சொருப வம்மானோ டுள்ளத்
துறவு கலந்தலுற்ற யோகத்தால், உண்மை
நிறைவான வத்துவித நீர்மைசேர் மோனச்
செறிவிலே கண்டேன் சிவக்கே வலமே.

ஞான சொரூப ஆண்டவனோடு உள்ளத்தில் உறவு கலக்கும் யோகத்தால் அத்துவித நிறைவான மோனமாகவே சிவக்கேவல நிலையைக் கண்டே னெனல்.

694. என தாவி யுட்கலந்த வெம்மான் சொரூபத்
தினிதா வனைந்தே னிரண்டற்ற தன்மை;
மன தா லெணாவோ மறக்கவோ வொண்ணா
வனையவியல் சுத்த வருட்கே வலமே.

என்னாவியுட் கலந்த ஆண்டவனிடம் இரண்டற்ற நிலைபெற்றேன். அது நினைப்பு மறப்பற்ற அருட் கேவலமே யெனல்.

695. காழ்த்தலுற்ற மோகமனக் கள்ளியைக்கா ரணவத்து
நிழ்த்தலுறு தொள்ளொளியா வுட்கலந்து சாந்தி வெள்ளத்
தாழ்த்தலுற்ற வாண்டவனுக் காசை மணாட்டியா
வாழ்க்கைப்பட் டேனியல்கை வல்லியமா வைகியதே.

குறிப்பு :—கள்ளியை—கள்ளியேனை எனத் தன்மைக்கண் வந்தது.

முற்றிய மோகாணவக் கன்னியேனைக் கலந்து சாந்தியில் ஆழ்த்திய ஆண்டவனுக்கு ஆசை மணாட்டியாய் வாழ்க்கைப்பட்டுக் கைவல்ய இயல்புற்றே னெனல்.

696. ஊனமற்ற வுண்மை யுணராதே னுள்ளத்து
நானற் றுளிர்சொருப நாதனுற் கூடியது,
மோன வசீகரஞ்சேர் முத்திப் பரசொருப
வானவியல் வாழ்வா வளம்பெறுகை வல்லியமே.

தேகான்ம பாவம் நீங்காத என்னுள்ளத்தில் சொரூப வாழ்வான கைவல்யம் ஆட்கொண்ட நாதனருளாற் கூடிய தெனல்.

697. உண்ணு ரமுதமா வுட்கலந்து சுத்தவருள்
விண்ணாகி வென்னுள் விளங்கலுற்ற மெய்த்திறத்தாற்
பெண்ணு ணலியல்லாப் பெற்றிசேர் சிற்சொருபக்
கண்ணுளன் மாட்டுநான் கைவல்யங் கண்டேனே.

பெண் ஆண் அலியாகிய பால் வேற்றுமையற்ற ஆண்டவன் அமுத அருளாகாசமாக என்னுட் கலந்ததால், அவனிடம் நான் கைவல்யங் கண்டே னெனல்.

698. எதுவோ பரமார்த்த மென்னு தருட்சிற்
பொதுவா வுளத்திற் பொலியலுற் றானைப்
பதியா வடைவாற் பரானுபவஞ் சால்சற்
கதியான கைவல்யங் கண்டுகொண் டேனே.

---

குறிப்பு—என்னுது—என்று நான் மயங்காமல்.

என்னுள்ளத்திற் பொது நடம் புரிவானைப் பதியாக அடைந்ததாற் கைவல்யானுபவங் கண்டே னெனல்.

699. உள்ள வொழுத வுபசாந்த மாக்கடலா
வுள்ள வுடையானோ டுள்ளத்தே யொன்றுபட்ட
வெள்ளவுணர் வான விசுத்தமோ னநுபவம்
கள்ளமற்ற வுண்மைக் கடவுட்கை வல்லியமே.

உபசாந்தக் கடலான உடையானோடு கலந்த வுணர்வான மோனநுபவம் உண்மைக் கடவுளான கைவல்லியமே யெனல்.

700. அணுக்கத்தொண் டாக வடிக்கேற் றருளி
மணக்கலுற்ற தெய்வ மணாளனோ டொன்று
விணக்கமுற்ற வுள்ளத் தியைந்தது சற்றுங்
கணிக்கவொண் ணாதவருட் கைவல்ய வாழ்வே.

அணுக்கத் தொண்டாக ஏற்று மணந்தருளிய ஆண்டவனோடு கலந்த உள்ளத்திற் கைவல்ய வாழ்வுற்ற தெனல்.

701. கண்கலங்க லுற்றேனைக் கண்ணோக்கா லாண்டு கொண்ட
கொண்கனுரு வென்னுட் குலாவலாற் பாழ்த்தபுல
மண்கலந்த வென்னகத்தில் வண்மைசேர் சுத்தவருள்
விண்கலந்து கைவல்ய வித்தகவாழ் வார்ந்ததே.

என்னைக் கண்ணோக்கா லாண்ட ஆண்டவன் சொரூபம் என்னுள் அருளாகாசமாக விளங்கலாற் கைவல்ய வாழ்வு அடைவுற்ற தெனல்.

702. அந்தமில்பே ரின்பமா வாண்டான் அடிச்சியேன்
சொந்த சொரூபமே யாகத் துலங்கலாற்
பந்தமுத்தி யாதிப் பசுபாசக் கற்பனைதீர்
விந்தைசேர் கைவல்ய வெற்றி விளைந்ததே.

ஆண்டவன் என் சொந்த சொரூபமேயாக விளங்குவதால் பந்தம் முத்தி பசுபாசம் முதலிய கற்பனைக ளற்ற கைவல்ய வெற்றி கிட்டிற் றெனல்.

703. பொய்ம்மயக்க மாமுப் புடிபேதந் தாங்கரக்கச்
செம்மைசேர் கைவல்யச் சிற்பரமாச் சேர்தலுற்றேன்
இம்மை மறுமை முதலா வியங்கலுற்ற
எம்மையுமோர் சிற்பரமாந் தன்னையன்றி யில்லானே.

712. அசைந்தவசை வெல்லா மறக்கெட் டொழியப்
பசைந்தபசு பாசப் பசையறச்செற் றுன்பாற்
கசிந்துருகு மன்பாற் களிபெருக வுள்ளத்
திசைந்தொழுக லுற்றே னிருவே றறவே.

குறிப்பு :—அசைந்த வசைவு—வருந்தலுற்ற வருத்தம்.

என் அசைவுகளையும் பசுபாசத்தையும் அழித்த ஆண்டவனிடம் கசிந்துருகும் அன்புக்களிப்பாற் கலந்தொழுகுவதால் இருமைப் பேத மற்றே னெனல்.

713. வன்னங்கொள் செந்தா மரைமலர்ச் சேவடி
நன்னரென் னெஞ்சத்து நாளு மலர்ந்திடத்
துன்னலா லேய்ந்த சொருபானு பூதியிற்
பின்னமோ பேதமோ காணேன் பிரான்மாட்டே.

ஆண்டவனது மலரடிகள் என்னுள்ளத்தில் தோய்ந்ததால் ஏற்பட்ட சொருபானு பூதியில் பின்னம் பேதம் ஒன்றுமே காணே னெனல்.

714. தொன்றுதொட்ட சொந்த சொரூப மணாளனு
நின்றானென் னெஞ்சத்து நீநானென் றென்னவே
வென்றா னெனைமுற்ற வேற்றுமையோர் சற்றுமின்றி
ஒன்றாக யோகியரா லோர்த்துணர லுற்றேனே.

யோகியரால் மட்டும் அறியப்படும் அநாதி ஆத்மநாதனை ஆண்டவன் ''நீயும் நானும் ஒன்றே'' என்று நின்று என்னை வென்றா னெனல்.

715. மட்கலுற்ற பேதையேன் மாட்டிரங்கிக் கண்ணோக்கா
லுட்கலந்துநல்கியவோ ரொள்ளியமெய்த்தெள்ளியான்
உட்கலுற்ற வென்னை யொருங்கணைந்து நீயென்பால்
வெட்கலொழி நானுன்னின் வேறல்லே னென்றானே.

கருணைக் கண்ணோக்கி என்னுட் கலந்த ஆண்டவன் என்னை ஒன்றாயணைந்து ''நான் உன்னிலும் வேறல்ல; என்னிடம் வெட்கமாகிய பேதம் ஒழி'' என்றா னெனல்.

716. அறிவுரு வானவென் னம்மான் சொரூப
நிறைவொளி யுண்மை நிலைப்பட மோனக்

குறியிலொன் ருகக் குலவினன் மாட்டேன்
அறிவறத் தோற்ற வடிச்சிநா ஞரே.

குறிப்பு :—ஆண்டவனைக் காட்டிலும் அடிச்சி நான் அயலல் லேன் என்பதாம்.

அறிவு வடிவான சொரூப வுண்மை நிலைப்படியாறு மோன முந்திரை யால் ஏகமாகச் சேர்ந்த என் நாதனிடம் தோற்ற இவ்வடிச்சி அவனுக்கு அயலல்லே னெனல்.

717. அணங்கலுற்ற மோகப்பா மாசாபா சத்தாற்
பிணங்கலுற்ற பேதையேன் பேதமறப் பேர
நுணங்கிய கேள்விசேர் நோக்கமளித் தானே
டிணங்கியொன் ருக வினிதியல்கின் றேனே.

ஆசாபாசத்தாற் கட்டுண்ட நான் பேதமறுமாறு நுட்ப நோக்களித்த ஆண்டவனோடு ஒன்ருயிணங்கி வாழ்கின்றே னெனல்.

718. திருவருள்வாழ் வாகத் தெளிந்தியன்ற சாந்தி
மருவலுறக் கண்ட மணாளன் சொரூப
வுருவியல்பிற் ருக வொளிரு மனத்தால்
இருவருமொன் ருக வியைந்துநின் ருேமே.

சாந்தி நிறைந்த மணாளன் சொரூபம் இன்னதென் றறிந்த அறிவால் இருவரும் ஒன்ருகி நின்ருே மெனல்.

719. அறிவிலே யென்னை யணைந்தான் சொரூப
நிறைவிலே மோன நிலைகண்டு கொண்டேன்
குறைவிலா வுண்மைக் குலாவா விளங்கு
மிறைவனே டொன்ரு யிறுகலுற் றேனே.

என்னை அறிவிலணைந்த ஆண்டவன் சொரூபத்தில் மோன நிலை கண்டு கொண்டு, அவனோடு ஒன்ருக இறுக லுற்றே னெனல்.

720. நிருவிகற்ப மோன நிறைவா வொளிர்சற்
குருவருளா லுள்ளங் குலாவ வியல்பா
மருவலுற்ற சாந்திசேர் வாழ்க்கையில் யான்ரு
னிருவருமொன் ருக வியைதலுற் ருேமே.

நிருவிகற்பமோன நிறைவே தருவதன். அவ்வருளா லடைந்த சாந்தி வாழ்க்கையில் நாங்களிருவரும் ஒன்றாக இயைந்தோ மெனல்

721. தட்கலுற் றாரைத் தடுத்துமீ றிக்கொண்டு
வெட்கமறி யாதபெரு வேட்கையாற் சென்றடைந்தேன்
உட்கலுறா வாறென் னுணர்ச்சித் திறத்தைமகிழ்ந்
துட்கலந்த வாண்டா னுணர்ச்சியொப்பால்
வாழ்ந்தேனே.

தடுத்தவர்களை மீறி, வெட்கமறியாமற் பெருவேட்கையோடு ஆண்டவனை நான் அடையவே அவன் மகிழ்ந்து என்னுட் கலந்ததால் ஏக வுணர்ச்சியில் வாழ்ந்தே னெனல்.

722 *நடுவுளே ஞான நலங்கிள ரின்பக்
கடவுளா மென்னைக் கலந்தான் கலப்பால்
அடிகளின் சுத்த வருட்பர மோன
வடிவளா னேனே மடவளா நானே.

* நடு—இதயம்.

இதயத்தில் என்னைச் சேர்ந்த ஆண்டவன் கலப்பால், அவனது அருட் பரமோன வடிவே என் வடிவானதே னெனல்.

723. தன்வசமா வென்னைத் தடுத்தாண்டு கொண்டானுக்
கென்வசநான் முற்று மிழந்தொழிந்தேன்; சுத்தவருள்
வன்னமா மென்றன் பராந்துலங்கு மோனவுணர்
வன்னவனே யென்னை யனன்னியமாக் கண்டதே.

என்னைத் தடுத்தாட் கொண்டவனிடம் என்னை யிழந்தேன். அவ்வருள் மோனத்தில் அவனை யென்னை அனன்னியமாகக் கண்டே னெனல்.

724. சென்று வணங்கியவென் சிந்தையே கோயிலாத்
துன்றிநின் றான்ம சொரூபானு பூதிபொங்க
மன்றவொன் றாக மணக்கலுற்ற வாண்டவனை
யன்றிநா னென்று மறியே னயற்புலமே.

குறிப்பு: துன்றி நின்று மணக்கலுற்ற, சொரூபானு பூதி பொங்க மணக்கலுற்ற வெனத் தனித்தனியே கூட்டுக.

அத்துவித வுண்மைஞா னனுபவச் சீரளித்த
வித்தகன்மாட் டுற்றதொரு விம்மிதஞ்சேர் தன்மயமே.

இவ்வுடம்பே நானென்று வருந்திய எனக்குத் தன் கண்ணோக்கால் அத்துவிதச் சீரளித்த ஆண்டவனிடம் தன்மய அனுபவ முண்டாயிற் றெனல்.

730. கண்ணா லெனைக்கலந்த கண்ணாளன் சுத்தவருள்
விண்ணாக வுள்ளம் விளங்கலுற்ற மாட்சியால்
அண்ணா மலையான வப்பரமே யென்னுருவா
எண்ணாம லெண்ணிப்பே ரின்பமுறு கின்றேனே.

கண்ணால் என்னைக் கலந்த கண்ணாளன் என் இதயாகாசமாக விளங்குவதால் என் சொரூபம் அண்ணாமலையே என் றறிந்து பேரின்பம் அடைகின்றே னெனல்.

731. அரியசிவ மோனஞா னனுபவ வுண்மைத்
துரியவாழ் வான சொரூபவுணர் வூற
மருவலுற்ற தெய்வ மணாளனோ டுள்ளத்
தொரியல்பா னேனுலகக் கற்பனையோய்ந் தேனே.

துரிய வாழ்வான சொரூப ஞானம் பொங்குமாறு சேர்ந்த மணாளனோடு ஒன்றாகி உலகக் கற்பனை ஓய்ந்தே னெனல்.

732. நயப்புறுமெய்ஞ் ஞான நலஞ்சுரக்குங் கொண்டல்
வியப்பவெனக் குள்ளே விளங்கியவோர் கள்வன்
இயற்பழிக்க வொண்ணாப்பே ரின்பவருட் செம்மல்
அயற்படவொண் ணாம லடிச்சியையாண் டானே.

ஞானக் கொண்டலும், உள்ளேயுள்ள கள்வனும், இன்ப அருட் செல்வனுமான ஆண்டவன், இரண்டற என்னை ஆண்டா னெனல்.

733. கண்ணா ரமுதக் கடலான கண்ணாளன்
பண்ணோ டளைந்தவருட் பாட்டேபோ லின்சுவைசேர்
உண்ணா ரமுத வுணர்வா வுளங்கலந்து
பெண்ணேனைத் தன்னொடொரு பெற்றித்தா
வாண்டானே.

இசையோடு கூடிய அருட்பாடலைப்போல, அமுத வுணர்வாகக் கண்ணுளன் என் உள்ளங் கலந்து, என்னைத் தன்னேடு ஒன்ருக்கி யாண்டா னெனல்.

(வெண்பா)

734. குதூகலமாக் கூடிக் குலாவி மணம்போல்
வதூவரரா வாழ்ந்து வருங்கால்—வதூ நான்
அவனையோ வென்னையோ வன்னியமாக் காணேன்
அவனிரண் டற்று நின்ருன்.

ஆண்டவனை யருள் மணம் புரிந்து வாழுங்கால் என்னையோ அவனையோ அன்னியமாக நான் காணமுடியாதவாறு இரண்டற்று நின்ரு னெனல்.

735. ஏதல னல்ல னிறைரமண னென்சொருபக்
காதலனு நின்றவருட் கண்ணுளன்—ஆதலாற்
பேத மெமக்குட் பிராந்திசே ருனமனப்
பேதைமையே யன்று பிற.

ஸ்ரீ ரமணன் என் கண்ணுளனே தவிர அன்னிய னல்ல. எங்களுள் பேதம் தோன்றுவது மனப் பிரமையினுலேயே தவிர உண்மையில் அல்ல வெனல்.

736. நெட்டூர னுக நிகழ்வான்போ லாண்டவனை
நிட்டூர மாக நினைந்தொழிந்தேன்—சட்டோதான்
கிட்டூர னுகக் கிளர்தலன்றி யென்னுருவா
வுட்டோய லானு னுவந்து.

நெடுந்தூரத்துக் கப்பாலிருப்பவனுக ஆண்டவனை நான் கருதினேன். ஆனுல் சட்டென மிக அருகில் மட்டுமின்றி என்னுள் என் சொருப மாகவே எழுந்தருளினு னெனல்.

737. ஒன்றுபட்ட வுண்மை யுணர்ச்சியே யின்பமன்றித்
துன்றுமதி பேதமென்றுந் துன்பமே—மன்றவெனக்
கன்புணர்ச்சி பொங்கவகத் தைக்கியமெய்ஞ் ஞானமளித்
தின்பவியல் பானு னிறை.

இருமை மதி துன்பமே; ஒருமை யுணர்வே இன்பம், இவ் வின்பம் எனக்குப் பொங்குமாறு இறைவன் ஐக்கிய ஞானமளித்து என் இன்ப வியல்பே யானு னெனல்.

738. காண்டகுமெய்ஞ் ஞானவொளிக் கண்ணுக
வென்னையுவந்
தாண்டவனை யல்லா லறிகிலேன்—தூண்டுபரஞ்
சோதியா மன்னன் சொரூபத்தை யன்றிமற்
றேதிலார் யாரே யுளர்.

என்னை ஞானவொளிக் கண்ணாக ஆண்டுகொண்ட தலைவனின் பரஞ்சோதி சொரூபத்துக்கு அன்னியமாய் யாருமிலர் எனல்.

739. எனக்கான மோன வியற்பிரா னென்பா
லனைக்கேயு மிக்குநல் லன்பன்—தனக்கடிமை
பூண்டவெனைச் சிற்சொருபப் பூரணமாந் தானேயா
வாண்டவனை யன்றியில்லேன் யான்.

தாயினும் மிக்க என் மோனப்பிரானை, அடிமைபூண்ட என்னைப் பூரண ஞான சொரூபமாம் தானேயாக்கிய அவனை யன்றி யான் இல்லேனெனல்

740. இருள்வரைப்பி னின்றே ரிமைப்பொழுதின் மோன
வருள்வரைப்பிற் கூட்டியமெய் யாண்டான்
—மருளறப்பொங்
கான்மானு பூதிப்பே ரன்பணைப்பி லென்னையிழந்
தியான்மாறி யானே னவன்.

இருளினின்றும் என்னை அருளுக்கு மீட்டிய என் ஆண்டவனது ஆன்மானுபூதிப் பேரன்பாகிய அணைப்பில் நானற்று அவனே யானே னெனல்.

741. மணவினை முற்றி மதர்ப்புறுபே ரின்பக்
கணவனை நீங்காக் கலப்பால்—அணவுசிவ
போகமளித் தாண்டவருட் பூரணனும் புண்ணியனோ
டேகமயத் தன்மைபெற் றேன்.

சிவபோக மளித்தாண்ட அருட் பூரணனை கணவனை மணந்து நீங்காக கலப்பால் அவனோடு ஏகத் தன்மை பெற்றேனெனல்

742. ஆரா தனைக்கரிய வம்மா னடியேனுக்
கேராக வுள்ளா னிதயத்தே—நேராக
யானே யவனு யவனேயா னாயிரண்டற்
றூனு னொளிர்வா னவன்.

என் இதயத்துள்ள பெருமான் சாக்ஷாத் அவனே நானுகவும் நா ன அவனுகவும் இரண்டற் றிருளிர்கின்ற னெனல்.

743. சொக்கனருட் பார்வையிலே சொக்கியநா
னென்னையொருங்
கொக்கவிழந் தென்றன் னுணர்வுமுற்றச்
—சொக்கனருள்
வெற்றிசேர் மோன விசுத்த வுணர்வேயாய்
உற்றே னவன்மெய் யுரு.

ஆண்டவன் அருட்பார்வையிற் சொக்கி என்னை யிழந்து, அவனது மோன விசுத்த உணர்வாகிய மெய்யுருவையே யானு மடைந்தே னெனல்.

744. சேயனே போன்ற சிவபிரா னென்சொருப
நாயகனுத் தான்கலந்து நல்கினன்—மாயவகப்
பேயா லெழுந்துவித பேதக் கலக்கமறு
நேயானு பூதி நிலை.

சிவபிரான் என் நாயகனுத் தான் கலந்து துவிதக் கலக்கமற்ற நேயானுபூதி நிலை அளித்தா னெனல்.

745 ஆளனை நான் கண்டே னகண்டவருட் பூரணத்தா
லாளனின்வே றன்மை யறிந்தமைந்தேன்—ஆளனே
என்சொருப மாக விதயத் தகமகமென்
றென்சிறுமை தான்கவர்ந் தான்.

ஆளனே அருளால் என் இதயத்தில் அகமகமென்று ஸ்புரித்தலால் அவனினும் நான் வேறன்று எனவறிந்து அமைந்தேன் எனல்.

746. ஏகாந்த மாக விடைவிடா தென்னுளத்தா
டோர்காந்த னுக வுறைரமணன்—சீர்காந்த
மாகக் கவர்ந்தென் னறிவுமுற்றத் தன்மயமே
யாகக் குலவுற் றது.

என் உள்ளத்தில் இடைவிடாது ஏகாந்தமாக உறைகின்ற என் காந்தனை ஸ்ரீரமணன் சீர் என் அறிவைக் கவர்ந்து தன்மயமாக்கிக் குலவிற் றெனல்.

747. என்னே யவன்பெருமை யாரே யியம்பவல்லார்
என்னேயந் தான்கொள்ளைகொண் டேகினான்
—தன்னேயம்
என்னுயிரை யூடுருவி யென்னறிவைத் தான்குடைந்து
தன்னியலே யாக்கிற்றுத் தான்.

என் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட ஆண்டவனின் நேயம் என் உயிரை ஊடுருவி அறிவைக் குடைந்து என்னைத் தானாக்கிற்று. அவன் பெருமை என்னே யெனல்.

(குறள்)

748. அகப்பே யறக்கெடுத் தாண்டவன் றன்னை
யுகப்பேன்யா னாக வுணர்ந்து.

## ருகூ—அத்துவித நிலை

(கொச்சகக் கலிப்பா)

749. மோக வகப்பேய் முரண்கெடச்செற் றாண்டவன்சற்
போகம் புசித்தேன் புலக்கலக்கஞ் சற்றுமில்லேன்;
யோக வுணர்வா லுளந்தூ டியைந்ததெனக்
கேகமே வாத்துவிதம் எம்மானோ டென்றுமே.

ஆண்டவனோடு சற்போகம் புசித்துப் புலக்கலக்கமற்ற யோகவுணர்வால், நான் அவனோடு ஒன்றே தவிர இரண்டல்ல வெனல்.

750. உள்ளத்தி லென்னை யொடுக்கியசற் போதவருள்
வெள்ளப் பிரான்பால் விளைந்த வனுபவத்தால்
கள்ளக் கருத்தான கற்பனா மாயையறத்
தெள்ளத் தெளிந்த சிவாத்துவிதஞ் சேர்ந்ததே.

ஆண்டவன்பால் விளைந்த அனுபவத்தால் சிவாத்துவித வுண்மை நிலை சேர்வுற்றதெனல்.

751. தஞ்சமடைந் தேனைத் தழுவியொரு தன்மயமா
மஞ்ச மணாளன் மனக்கலக்க மாற்றினான்;

விஞ்சைசே ருண்மை விளக்கமா மோனவருட்
செஞ்சரணஞ் சேர்ந்தேன் சிவாத்துவிதந்
தேர்ந்தேனே

தஞ்சமடைந்த என்னைத் தழுவி ஆண்டவன் என் மனக் கலக்கம் மாற்றினன். மெய் விளக்கமான அவன் திருவடியைச் சேர்ந்ததால் சிவாத்துவிதநிலை யறிந்தவ ளானே னெனல்.

752. ஆரவா ரஞ்செய் யகப்பே யுளத்திலின்று
பேரவே சுத்தவருட் பேரொளியா வாண்டபிரான்
பார சொரூபப் பரவெளியா வென்னைமுற்றச்
சேரலா லத்துவிதச் சீர்மை செழித்ததே.

அகந்தைப் பேயை ஓட்டும் அருளொளியாக என்னை யாண்ட பெருமான் சொரூப வெளியாக என்னைச் சேரலால் அத்துவிதச் சீர்மை செழித்தே னெனல்.

753. எம்பிரா னுக விதயத் தொளிர்தலால்,
உம்பருங்கா ணுதவோ ரும்பரான் மாட்டெனக்குச்
செம்பரமாத் துன்று சிவாத்துவிதச் சீர்மைசே
ரின்பமா மோன வியல்வாழ் வடைந்ததே

தேவர்களு மறியாத ஆண்டவன் என் தலைவனாக உள்ளத்தில் விளங்குவதால் அத்துவிதானந்த வாழ்வு அடையப்பெற்றேனெனல்.

754. மோனத்தா லென்னை முகந்துகொண் டாண்டமெய்ஞ்
ஞானத் தலைவனொடு நான்கலந்த வாழ்விலெனக்
கேனைத் துவித மெலாங்கரப்பக் கற்பனையாத்
தானொத் தியல்வதொரு தற்பரமாந் தன்மையே.

குறிப்பு :—ஒத்து—கற்பனை துவிதங்க ளெல்லாவற்றிலுமே ஒப்பக் கலந்து.

என் தலைவனான ஆண்டவனோடு நான் கலந்த வாழ்வில், துவித மெல்லாம் மறந்து அத்துவிதத் தன்மையே விளங்கிற் றெனல்.

755. களிசே ரகந்தைமனக் கன்னரிமைதீர் மோன
வெளியாக வென்னுள் விளங்குவதோர் உண்மை
யொளிகாட்டி யென்னைநன் குய்யக்கொண் டான்பால்
அளியள்யா னார்ந்தேன்சுத் தாத்துவித மாண்பே

அகந்தைக் கன்னிமை யற்ற மோனவெளியாக என்னுண்மையை விளக்கி என்னை உய்வித்த ஆண்டவன்பால் அத்துவித மான் புணர்ந்தே னெனல்.

756. ஞான வசீகரங்கூர் நாட்டத்தா லூடுருவித்
தானலா தொன்றுமிலாத் தத்துவனென் னுள்ளுணர்வில்
வானமா மோனவியல் வாழ்வா வணைந்தவன்மாட்
டூனமிலா வத்துவித வுண்மையெனக் கார்ந்ததே.

தன் ஞான நாட்டத்தால் ஊடுருவித் தானன்றி யாதொன்று மில்லாதவாறு என் உள்ளுணர்வில் அணைந்த ஆண்டவனிடம் அத்துவித உண்மைநிலை பெற்றே னெனல்.

757. தங்குதடை யற்றமுழுத் தத்துவஞா னுனுபவ
மங்களவாழ் வாக மடுத்த மணுளன்பால்
அங்கமகம் புத்தி யறக்கெட் டறிவுருவாத்
தங்கலுற்றே னத்துவிதத் தன்மை தழைக்கவே.

ஞானுனுபவ மங்கள வாழ்வாக அமைந்த என் மணுளனிடம் தேகான்ம புத்தி யழிந்து இரண்டற்ற நிலையில் தங்கினே னெனல்.

758. களந்ததும்பு மோகக் கலக்கமற வுண்மை
வளந்ததும்பு ஞான வசீகரக்கண் ணோக்கால்
உளங்களிகூ ரக்கலந்த வொள்ளியான் மாட்டுத்
தெளிந்தியல்சுத் தாத்துவிதச் சீர்மைகண் டேனே.

ஞான வசீகரக் கண்ணோக்கால் என் உள்ளங் களிக்கக் கலந்த ஆண்டவனிடம் அத்துவிதச் சீர்மை தெளிந்தே னெனல்.

759. உள்ளத்தே மோன வொளிவெளியாய் நானெனும் பொய்க்
கள்ள வகந்தைமனக் கற்பனைசெற் றுண்டபிரான்
தெள்ளத் தெளிந்தசிவச் சிற்பரவாழ் வானவருள்
வெள்ளந் திளைக்கவொரு மித்தா னிரண்டறவே.

அடியேன் அருள்வெள்ளந்திளைக்க என்னகத்தில் ஆண்டவன் அத்துவிதமாகக் கலந்தானெனல்.

760. அகந்தையறப் பொன்றிலன்றி யாராலுஞ் சற்றும்
முகந்திடவொண் ணாத முழுமுதலாம் பெம்மான்
மகிழ்ந்தருளா லென்னை மணந்துகொண் டானே
டுகந்தொழுக லுற்றே னொருமையுணர் வாலே.

அகந்தை யற்று லன்றி யாராலும் அடைய முடியாதவனும் என்னை மணந்து கொண்டவனுமான ஆண்டவனோடு அத்துவித வுணர்வாற் சேர்ந்தொழுகுகின்றே னெனல்.

761. அருமைசே ரன்பா லகங்களி கூர
வுரிமைபா ராட்டியென் னுள்ளத் துறைந்தான்;
இருமை யொழிய விமைப்பற நோக்கி
யொருமை யுணர்வா லுளந்தெளிந் தேனே.

ஆண்டவன் உரிமை பாராட்டி என் உள்ளத்தில் எழுந்ததால் இருமை யொழிய அத்துவித உணர்வுற்றே னெனல்.

762. மோகக் கலக்கமற மூண்டொளிர்சற் போதவடி
வாகத் தெளிந்த வருட்பிரான் மெய்ஞ்ஞான
யோகக் கலவி யுதவியென்னோ டொன்றியவவ்
வேகத் துவத்திலிரண் டின்றாக் கழிந்ததே.

சற்போத வடிவான ஆண்டவன் ஞானயோகக் கலவியால் என்னோடு ஒன்றுகிய வேகத்தில் இருமை யுணர்வு அழிந்த தெனல்

763 மைக்கா ரிருளுலக வாழ்விலே மாழ்கிடா
தெக்கா லுனைநா னியையவேனென் றேங்கலற
மிக்கா தரங்கூர் விருப்பா லொளிவெளியா
வெக்காலு மென்னோ டிரண்டறவேய்ந் துள்ளானே.

நான் ஆண்டவனை யடைய ஏங்கி வாடாதவாறு என்னோடு அவன் எப்போதும் ஒளிவெளியாக இரண்டறச் சேர்ந்துள்ளா னெனல்.

764. துன்று சொரூபவருட் சொக்கன் பதத்திலெனக்
கென்று மழிவில்பே ரின்பநிலை கண்டுகொண்டேன்;
மன்றறிய வென்னை மணந்துதன் னோடுடனா
என்று மிதயத் திரண்டறவொன் றுற்றானே.

சொரூபப் பிரான் பதத்தில் அழிவற்ற பேரின்பநிலை கண்டு கொண்டேன்; அவன் யாவரு மறிய என்னை மணந்து உள்ளத்தில் இரண்டறக் கலந்தா னெனல்.

765. அறிவான வுண்மையா வாண்ட பிரானோ
டுறவு கலந்தே னுபயங் கழன்றேன்;
பிறிவில்பே ரின்பப் பெருவெளி யான
நிறைவிலே மோன நிலையவிர்வுற் றேனே.

ஆண்டவனோடு உறவு கலந்து இருமை யற்றேன்; இரண்டற்ற அப் பேரின்ப நிறைவில் மோன நிலை விளங்குற்றே னெனல்.

766. கர்த்தவிய மாகக் கடவதொன் றுங் காண்கிலேன்
சித்தமல மான செருக்கின் மயக்கமகல்
சுத்தவருள் வாழ்வாத் துலங்கு சொரூபனோ
டத்துவித மாக வணைந்தே னறிவிலே.

செருக்கற்ற அருள் வாழ்வாகத் துலங்கும் ஆண்டவனோடு அத்துவிதமாக அணைந்த என்னறிவிற் கர்த்தவ்வியம் ஒன்றுங் காணே னெனல்.

(வெண்பா)

767. அன்புத் தினைப்பே யகமுடையான் பெய்யருட்பே
ரின்பத் தினைப்பா விதயத்தே—துன்பக்
கவலையகன் றோடக் கருத்தினின் று காட்டிற்
றவலந்தீ ரத்துவித வாழ்வு

அகமுடையானது அன்பிற் றினைப்பதே பேரின்ப மாகி, உள்ளத்தில் துன்பமற்ற அத்துவித வாழ்வைக் காட்டிற் றெனல்.

## ௬௦—அமுதவுணர்வு

(கொச்சகக் கலிப்பா)

768. பொய்க்கா ரவிச்சைப் புணர்ப்பறக்காண் ஈற்போதத்
தக்கா னொருத்தன் சதோதயமாப் புக்கொளிர்வால்
அக்கார மாப்பொங் கமுத சொருபவுணர்
வெக்காலு முள்ளத் திடையரு தெய்தியதே.

அவித்தையற ஆன்ம குரு என்னுள்ளத்திற் புகுந்து விளங்குவதால் இடையருத அமுத சொரூப வுணர்வு எய்திய தெனல்.

769. ஒள்ளியோ னுடையான்கூர் வாள்விழியாற்
கள்ள வகந்தைமனக் கன்னிமைக்கட் டுக்குலையத்
தெள்ளியோ ளாகத் திகழ்ந்தேன் மடப்பேதை;
தெள்ளமுத வெள்ளமாச் சேர்ந்ததென் னுள்ளமே.

ஆண்டவன் கண்ணேக்காற் கள்ளமனக் கன்னிமை யழியவே, அறிவு தெளிந்தேன். என் உள்ளம் அமுத வெள்ள மாயிற் றெனல்

770. கண்ணேக்கா லென்னைக் கலந்தான் சொரூபவருள்
விண்ணேக்க மாக விளங்கு பரஞ்சோதி;
அண்ணுக்க லுற்ற வருட்பே ரமுதசுகம்
பெண்ணுன பேதையேன் பெற்றுக் களித்தேனே.

சொரூபப் பரஞ்சோதி இப் பேதையாகிய என்னைக் கண்ணேக்காற் கலந்ததால் அமுத சுகம் பெற்றே னெனல்.

771. வண்ணவொளி சேர்ந்த வசீகரக்கண் ணேக்கத்தான்
உண்ணு ரமுத வுணர்வாக வுட்கலந்தான்;
உண்ணனவா வுள்ளத் தொளிர்சொருபன்
மாட்டுறைப்பால்
எண்ணமியா தொன்றுமெனக் கில்லா தொழிந்ததே.

அமுத வுணர்வாக உள்ளத்திற் கலந்த ஆண்டவனிடம் ஊன்றி நிற்பதால் எனக்கு எல்லா எண்ணங்களும் ஒழிந்தன வெனல்.

772. உய்த்துணர்வில் லாதவோ ருன்மத்தப் பேதையா
அத்தனைக்கா முற்றேற் கவனளித்த சுத்தவருள்
வித்தகமெய்க் காட்சியால் வேட்கைமீக் கூர்சொருபப்
புத்தமுத போகம் புலங்கொள்ளப் பொங்கியதே.

விவேக மற்ற பேதையாகிய நான் ஆண்டவனைக் காமுற்றேன்; அவனளித்த அருள் ஞானத்தால் மெய்யன்பு மிகுந்து சொரூபப் புத்தமுத போகம் கிடைத்த தெனல்.

773. மண்ணும் புலங்களையே மத்தமனக் கற்பனையா
லெண்ணுநின் றின்சுவைபோ லுண்டுண் டிளைத்
தொழிந்த

பெண்ணான பேதையேன் பெம்மா னருளாலின்
றுண்ணாநின் றேன்சொருப வுண்ணா ரமுதமே.

இதுகாறும் ஐம்புல இன்பங்களான மண்ணையே தின்று நொந்த இப் பேதை ஆண்டவன் அருளால் இன்று சொரூபானுபூதியான அமுதம் உண்கின்றே னெனல்.

774. உள்ள வயர்க்க வொருமை லகங்காரக்
கள்ள மயக்கமலக் கற்பனைசெற் றொட்பநுட்ப
வெள்ளவெளி யாக விளைந்த சொரூபன்பாற்
றெள்ளமுத வாழ்வு திளைத்தே னடிச்சியே.

அகங்கார மயக்கத்தை யழித்து நுட்ப நுட்ப ஒளிவெள்ளமாகப் பெருகிய ஆன்ம சொரூபனுடன் அமுத வாழ்வு திளைத்தே னெனல்.

775. பிறவுண்மை யெல்லாம் பிழைபடவென் னுள்ளத்
தறிவுண்மை யாக வயிர்சொருப வாண்டான்
மறவியாத் துன்றும் மறவியறக் கண்டான்
உறவிலே கண்டே னுலப்பிலா வாழ்வே.

பிரமாதமற, அறிவுண்மையாக என் உள்ளத்தில் விளங்கும் ஆண்டவனது உறவில் அழிவிலாப் பெருவாழ்வு கண்டே னெனல்.

776. அருட்பெருந் தன்மையா லாண்டான் சொருப
விருப்பமே பேரின்ப வீடுபே றாகச்
சுரத்தலுற்ற சுத்த சொருபானு பூதி
பரத்தலால் வாழ்வு பராவமுதா யிற்றே

ஆண்டவனது சொரூப பக்தியே மோக்ஷமாக விளங்குவதால் என் வாழ்வே பராவமுத மாயிற் றெனல்.

777. கண்ணாலம் பூண்டவருட் கண்ணாளன் கண்ணோக்காற்
பெண்ணான பேதையேன் பேரின்ப மோனவருள்
விண்ணாள வாழ்வு விளங்கிற் றியற்பரமா
உண்ணா ரமுதவுணர் வூற்றெடுக்க வுள்ளமே.

கண்ணாலம் பூண்ட ஆண்டவன் கண்ணோக்கால் மோன அருளரசு வாழ்வு கிடைத்து அமுத வுணர்வு பெருகிற் றெனல்.

778. தோளா முழுமணியாத் தொக்கவிறை தன்கழலுக்
காளா வடைந்த வடிச்சிக்குப் பேரின்பக்
கேளா கியன்றவருட் கேம சொரூபனால்
மாளா வமுதவியல் வாழ்வு மடுத்ததே.

யான் ஆண்டவனுக்கு ஆளானவுடன், அவன் பேரின்ப நாதனுல் அமுத வாழ்வு கிடைத்த தெனல்.

779. வெருக்கொள் கலக்க வெறிசே ரகப்பே
யுருக்க வொழிதரம லொளிப்பிழம்பா வுள்ளத்
திருக்கு மிறைவ னியற்செம் பதந்திற்
சுரக்கு முணர்வு சுதாவியல் பிற்றே.

அகந்தை உருவொழிக்க ஆண்டவன் ஞானவொளியா யுள்ளந்திருக்கும் ஆண்டவன் திருவடி யுணர்வே எனக்கு அமுதத்துவ மாயிற் றெனல்.

780. கண்ணு ரமுதக் கடவுளான் கண்ணேக்காற்
கண்ணாலந் செயது கலத்தலாற் கன்னியேற்
குண்ணு ரமுதவுணர் வூற்றெடுக்கப் பொங்கியது
பெண்ணுப் பிறந்தேன் பெறலரும்பே றுற்றேனே.

ஆண்டவன் கண்ணேக்கால் மணந்து கூடவே, இக் கன்னிக்கு அமுதவுணர்வு பொங்கியது. அதனுல் பெண்ணுகப் பிறந்த பெரும் பயனுற்றே னெனல்.

781. சுத்தவருட் சிற்பரமெய்ச் சொக்கன் முகவொளியிற்
பொய்த்ததுநா னென்னுமனப் புன்கலக்கப் பேய்ச்சரியை;
வித்தகவாழ் வாக விளங்கு சிவானுபவப்
புத்தமுத வூற்றுப் பொருந்தியதென் னுள்ளமே.

ஆண்டவன் முகவொளியில் மனப்பேய் ஒழிந்தது. உள்ளத்தில் சிவானுபவ அமுத வூற்றெடுத்த தெனல்.

782 தளைந்தபசு பாசந் தகர்ந்தொழிய நோக்கித்
தெளிந்தவெளி யாகத் திகழ்சொருபப் பெம்மான்
அளைந்ததா லுள்ளத் தமுதானு பூதி
விளைந்ததுமேன் மேற்சுரக்க மெய்யன் புணர்வே.

ஆன்ம சொருபனை ஆண்டவன் பாசமற என்னைக் கடைக் கணித்து உள்ளத்திற் சேர்ந்ததால் மெய்யன்பு சுரந்து அமுதானு பூதி விளைந்த தெனல்.

783. வியங்கு சொரூப வெளியான மோன
வளங்குலவு முண்மை மலர்ந்திடவென் னுள்ளத்
தளைந்த பிரானு லமுதானு பூதி
விளைந்திவ் வடிச்சி விளங்கலுற் றேனே.

சொரூப வெளியான மோனம் மலர என்னுளத்திற் கலந்த ஆண்ட வனால் அமுதானுபூதி பெற்றே னெனல்.

## சுக—சொருபானுபவம்

(கொச்சகக் கலிப்பா)

784 மேதகவு சான்றவருள் வித்தகனைக் கண்டளவிற்
காதலெழு மன்பாற் கசிந்துருகு நெஞ்சத்திற்
போதசொரூ பானுபவம் பொங்கியது நானெனும்பாழ்ம்
பேத மயக்கமனப் பீழையறப் பேரவே.

ஆண்டவனைக் கண்டதும் எழுந்த காதலாற் கசிந்துருகிய என்னுள் ளத்தில் அகந்தை மயக்க மற்றுச் சொருபானுபவம் பொங்கிய தெனல்.

785. ஊன வகக்கலக்க மோய்ந்தொழிய வுளளத்து
ஞானவருட் பேரின்ப நன்னலஞ்செய் தாண்டவன்பால்
யானவனே யாக வியல்சொரூ பானுபவ
மோன வுணர்வு முயங்கக் கிடைத்ததே.

மனக்கலக்கம் நீக்கி உள்ளத்திற் பேரின்பமளித்த ஆண்டவனிடம் நான் அவனே யாகும் சொருபானுபவம் பெற்றே னெனல்.

786. வரம்பிலா மோனவருள் வாரியா வுள்ள
பரம்பரன்பா லன்புணர்வு பற்றலால், இன்பஞ்
சுரந்தெழுமெய்ஞ் ஞான சொருபானு பூதி
நிரந்தரவாழ் வாக நிரம்பியது நெஞ்சே.

மோன அருட்கடலான ஆண்டவனிடம் அன்புணர்வால் என்னுள் ளத்தில் மூண்ட சொரூப ஞானனுபூதியே நிரந்தர வாழ்வாயிற் றெனல்.

787. அன்புக் குரியதுசுத் தான்ம சொரூபம்பே
ரின்பக் கடலா வியைதலா லஃதுளத்துத்
துன்பக் கலக்கமறத் துன்றுசொரூ பானுபவ
மென்னிற் கலக்கவிறை யென்னிற் கலந்தானே.

ஆன்ம சொரூபம் பேரின்பக் கடலே யாவதால துன்ப மறுக்கும் அச் சொரூபானுபவம் எனக் குண்டாகுமாறு ஆண்டவன் என்னைக் கலந்தா னெனல்.

788. மாயமனக் கற்பனையை மாற்றியென் னுள்ளத்துத்
தூயபர மாகத் துலங்கலுற்ற வாண்டவனென்
னுயகமாத் தன்னொடுநான் ஞானமோ னுனுபவந்
தோயலுற்ற வாழ்வு சொரூபானு பூதியே.

ஆண்டவனை நாயகனுகக் கொண்டு நான் அனுபவிக்கும் வாழ்வு சொரூபானுபூதியாகிய ஞானமே யெனல்,

789. அங்கமே நானென் றழியா தடிச்சியைத்தன்
னங்கண லாண்ட வருட்பிரான் சிற்பதத்து
மங்கலவாழ் வாக நான் மாணவே துய்ப்பதந்தத்
துங்கமோ னுனுபவச் சொக்கன் சொரூபமே.

"உடலே நான்" என்று கேடுருமல் என்னைக் கடாக்ஷித்த ஆண்ட வனது சொருபானுபவமே என்மங்கல வாழ்வு எனல்.

790. கடலின் மிகப்பெருங் காதலா லென்னைச்
சுடலுற்ற பெம்மான் சொரூப நெருப்பாற்
புடமிடப் பட்டேன் புரணமட் டாகச்
சுடர்வுறு கின்றேன் சொரூபமாத் தானே.

ஆண்டவன் காதற் கடலாக வந்து என்னைச் சொரூப நெருப்பால் ஸ்புடமிட்டான். அதனுல் ஆன்ம ஸ்புரண சொருபமாகவே. விளங்கு கின்றே னெனல்.

791. மணமலிந் தாண்ட மனுளன் பதத்திற்
றணவலறத் தங்கு சதாமுத்தி யாக

வணவலுற்ற சுத்தனா னுபவம் வேரு
வுணரவொண் ணுதவென் னெட்பநுட்ப மெய்யே.

---

குறிப்பு : மணுளன்—ஆன்மநாதனை ஆண்டவன்; தணவல்—தணத்தல், நீங்கல்.

ஆண்டவன் பாதத்தில் சதாமுக்தியாக யானடைந்த ஞானனுபவமானது சுட்டற்ற என்சொந்த சொரூபமே யெனல்.

792. எங்கெங் கெவரெவரெவ் வெவ்விதத்தா
லெண்ணினுமற்
றங்கங் கவரவரவ் வவ்விதத்தாற் காணவெதிர்
பொங்குசற் போதவருட் புண்ணியன்சுத் தத்துரியத்
துங்க சொரூபமாத் தோய்ந்தா னடிச்சியையே.

யார் யார் எங்கெங்கு எவ்வெவ்வாறு வழிபடினும் ஆங்காங்கே அவ்வவ்வாறே தோன்றி யருளும் ஆண்டவன் என்னைத் துரிய சொரூபமாகத் தோய்ந்தா னெனல்.

793. கள்ளவகப் பாழ்ங்கலக்கக் காரிருள்செற் றுள்ளத்துத்
தெள்ளத் தெளிந்த வருட் சிற்பரமோ னுபவ
வெள்ளக் கடலா விளைந்தவென் ணுண்டவனைத்
துள்ளலற்ற சுத்த சொரூபமாத் தோய்ந்தேனே.

அகங்கார இருளையழித்து ஆன்மநுபவக் கடலாக விளைந்த ஆண்டவனை என் சொரூபமாகவே தோய்ந்தே னெனல்.

794. வெருண்டெழுந்து மாயா விலாசக் கனவில்
மருண்டமடப் பேதை மனந்தெளிந்தேன், சற்று
மிரண்டற்ற மோன வியற்சிற் பரமாத்
திரண்ட சொரூபச் செழும்பிரான் பாலே.

இரண்டற்றுத் திரண்ட சொரூபப் பிரான்பால் இப்பேதை என் மாயா விலாசக் கனவு நீங்கி மனந் தெளிந்தே னெனல்.

795. சுத்தவருட் செல்வமாத் துன்றுமோ னுபவத்
துய்த்தவருட் பெம்மானே டுள்ளத்தொருமையுற்றேன்;
மத்த வகப்பேய் மனக்கற் பனைதுவிதம்
பொய்த்தொழியச் சிற்சொருபப் பூரணம்மீப்
பொங்கியதே.

எனக்கு மோன வருட் செல்வ மளித்த ஆண்ட வனோடு ஒன்றுனேன் அதனுல் மனப்பேய்க் கற்பனை யழிந்து பூரண சிற்சொருபம் பொங்கிய தெனல்.

796. அன்புமய மாக வவிர்சொருப நம்பன்பே
ரின்பவுணர் வூற்று விதயம் புளகிக்கத்
தன்பதவாழ் வாகத் தழைத்தமோ னனுபவத்
தென்பரிசு சால வினிது மலர்ந்ததே.

அன்புமயமான ஆண்டவனின் பேரின்பத்தால் இதயம் புளகித்துண்டான மோனனுபவத்தில் என் ஆன்ம சொரூபவியல்பு மலர்ந்த தெனல்.

797. அடர்ச்சிசேர் மோகவெம் பாசா ணவஞ்செற்
றடிச்சியேன் வாழ்வை யலர்த்தினுன் றருளிற்
படர்ச்சிதீ ருண்மைப் பதங்கண் டமைந்தேன்
தொடர்ச்சி யருத சொரூபவுணர் வாலே.

பாசாணவ மறுத்து என் வாழ்வை மலர்த்திய ஆண்டவன் தாளில் சொருப உணர்வால் மெய்ப்பதங் கண்டமைந்தே னெனல்.

798. ஓதவொணு மெய்ஞ்ஞான யோகமா வுள்ளம்புக்
காதரங்கூ ரன்பா லடிச்சியைநன் காண்டவன்பாற்
பேதவகப் பேய்மயக்கம் பேர்ந்தொழியக் கூர்சொருப
போதவருட் பூரணமாப் புக்கதனு போகமே.

மெய்ஞ்ஞான யோகமாய் என்னுள்ளத்திற் புகுந்து ஆட்கொண்ட பிரான்பால் பேதமயக்க மற்றுச் சொருப ஞானம் அனுபவ மாயிற் றெனல்.

799. சோகமா முற்றமுற்றச் சூழுங்கா ராணவப்பாழ்
மோகவகங் கார முனைப்பறச்செற் றுன்றசிவ
யோகவுணர் வூற வுளங்கிளர்பெம் மான்சொருப
போகமென் னுருயிர்க்குப் புத்தமுத மானதே,

---

குறிப்பு: செற்று உளங்கிளர, ஊறவுளங்கிளர எனத் தனித் தனியே கூட்டுக.

ஆணவப் பாழ்முனைப்பை யறுத்து, யோகவுணர்வால் உள்ளத் தெழும் பெருமானது சொருப போகம் எனக்குப் புத்தமுத மாயிற் றெனல்.

800. அன்பே சிவமா வடிச்சியைநன் காண்டுகொண்ட
நம்பன் சொரூப நலங்கிளர்பே ரின்பவுணர்
வம்பரவாழ் வாக வகம்பொங்க வார்ந்ததெனக்
கிம்பரும்ப ரற்ற வியற்பரமெய்த் தன்மையே.

இவ்வடிச்சியை ஆட்கொண்டவனது சொரூப ஞானம் கிளர்ந்து பேரின்ப வாழ்வு பொங்கி, இகபரங் கடந்த இயற்பர மெய்த்தன்மை யுற்றேனெனல்.

801. இதயத் தலத்தி லெழுந்தருளி யென்புன்
மதியைத்தன் மாட்டு மடுப்பித்தான் மோனச்
சதிரிற் றிளைத்தேன் சதோதயமா வுள்ளத்
தெதிர்சிற் சொரூப வியற்செம் புலமே.

என் உள்ளத்தி லெழுந்தருளி, என் புத்தியைத் தன்னிடம் வசீகரித்த ஆண்டவனது மோனச் சதிரிற் சொரூபநிலை கண்டே னெனல்.

802. பாதவொளி யான பரவொளியால் ஆணவப்பா
ழேதவிருள் செற்ற வியற்சிற் பரமூர்த்தி
சூதகல்வாழ் வான சொரூபமோ னுனுபவம்
பேர்தரவில் லாது பெருக்கினேன் பேதைக்கே.

---

குறிப்பு : மோனுனுபவம், ஞானுனுபவம் எனவும் பாடம்.

தன் பாதப் பரவொளியால் ஆணவ விருளழித்த ஆண்டவன் நீங் காத சொரூப ஞானுனுபவம் பெருக்கினே னெனல்.

803. இருவேமு மொன்று விதயத் தியைபால்
ஒருவாத மோன வுணர் வூற்றெடுக்க நாளும்
பெருவாரி யானவருட் பேருக வோங்கு
சொரூபானு பூதி சுரக்கலுற் றேனே.

நாங்களிருவரும் இதயத்தில் இணைவதால் மோனவூற்று சொருபானு பூதியாய்ச் சுரந்த தெனல்.

804. நிற்கக் கடவ நிலையிலே யென்னறிவை
நிற்கவைத் தாண்ட நிராமயன்பால் அன்புமுற்றா

சொக்கலுற்றேன் பெற்ற சொரூபானு பூதியின் முற்
புற்கெனமற் றெல்லாப் புலமும் புலம்பினவே.

என்னறிவை நிட்டையிற் சேர்வித்த ஆண்டவனிடம் அன்பு முற்றிச் சொக்கியதாற் பெற்ற சொரூபானுபூதியில் எல்லாப் புலன்களும் மறைந்தன வெனல்.

805. கண்ணுக் கினியவருட் காமாரி யாராலு
மெண்ணற் கரியபே ரின்பவியற் செம்பதத்தூ
டண்ணிக்க லுற்றசொரூ பானுபவம் பற்றியதென்
மண்ணிற் பிறந்துமனம் மட்கலுற்ற பேதைக்கே

குறிப்பு :- என்—வியப்பிடைச்சொல்.

கண்ணுக்கினிய என் கண்ணுளனின் பேரின்பத் திருவடியில், இப் பேதைக்கும் சொரூபானுபவம் கிடைக்கப்பெற்ற வியப்பு என்னே எனல்.

(வெண்பா)

806. கண்டுகொண் டென்னைக் கருணைக் கிலக்காகப்
பெண்டுகொண் டாண்ட பிரான்பகவன்
—தொண்டுகொண்
டற்புதவாழ் வான வமிர்தசொரூ பானுபவச்
சிற்பதத்தே வைத்தான் செறித்து

என்னைக் கண்டு பெண்டு கொண்டாண்ட பகவன் அற்புதமான இறைபணியாம் சொரூபானுபவச் சிற்பதத்தில் என்னை வைத்தான் எனல்.

807. ஒருவா வனுபூதி யொன்றே யெனக்குத்
திருவா பரணமாச் சேர்த்தான்—குருவாக
முன்னென்னை யாண்டுபின் மோன சொரூபமாய்
என்னின் னியைந்த விறை.

முன்பு குருவாக என்னை யாண்டு, பின் என் சொருபமாகவே நின்ற இறைவன் நித்தியானு பூதியையே எனக்கு ஆபரணமாகப் பூட்டினு னெனல்.

808. ஆனந்த மாகவினங் கம்மான் சொரூபமெனக்
கூனந் தவிரவுளத் துள்ளுறவாய்—ஈனந்
தருபுன் மயக்கமறச் சச்சிதா னந்தத்
திருமங் களமாஞ் சிறந்து.

எனக்குத் திருமங்களம் எம்மான் சொரூபமே யெனல்

809. ஈண்டநான் பெற்ற விதயத் தனுபூதி
யாண்டா னளித்த வருட்பிச்சை—தூண்டா
மணிச்சுடர்போ லாக மலர்ந்த சொரூபப்
புணர்ச்சியனு போக மது.

இதயானுபூதியே ஆண்டவன் எனக் களித்த அருட்பிச்சை; அது ஆன்ம சொரூபப் புணர்ச்சியின் அனுபோகமாம் எனல்.

810. தன்னவளா வென்னைத் தலையளித்தான் காதல்கூ
ரென்னவனு நின்ற விதயத்தான்—மன்னவனுந்
தன்னொடுநா னொன்றித் தழைத்தசொரூ பானுபவம்
மன்னிடுமா லென்றும் மனத்து.

என் காதலனை இதயத்தான் என்னைத் தன்னவளாகக் கொண்டான். அவனுடன் ஒன்றித் திளைத்த சொரூபானுபவம் என்னை என்றும் நீங்கா தெனல்.

811. பார்வையா லெனைப் பரிசழித்த மோனவருட்
கூர்மையான் போத குருநாதன்—சீர்மைசே
ராட்சியா லூன வகந்தைமுனைப் பற்றுவெறுஞ்
சாட்சியா மென்னியல்சார்ந் தேன்.

அருட் பார்வையால் என்னை யழித்துக் கூடிய ஞானகுருநாதனது ஆட்சியால் அகந்தை முனைப்பற்று சாட்சிமாத்திர சொரூப மானே னெனல்.

812 மூண்டமூ வாசையற முற்ற முருக்கினேன்
ஆண்டவன்பா லீண்டியபே ராசையால்
—ஆண்டவன்பாற்
பொங்கலுற்ற வாசையருட் போத சொரூபசுக
மங்களவாழ் வாக மனத்து.

ஆண்டவனிடங் கொண்ட ஆசையால் மூவாசை யழித்தேன். ஆண்டவ னாசையே சொரூப சுக மங்கள வாழ்வாயிற் றெனல்.

813. பாசமறுத் தாண்டவருட் பார்ப்பான் சொருபத்து
நேசமே பாச நிகளமாய்க்—கூசமுறு
வெட்கக்கே டாக விளைந்ததே பெற்றெடுத்தே
னுட்கலுற வென்னு ளுணர்வு.

பாசாபிமானங் கெட்டதால் அருளிறைவனின் சொரூபநேசமே என் உள்ளுணர்வாக விளையப் பெற்றேனெனல்.

814. அண்ணலையே யெண்ணரி யயலோர் நினைவின்றி
யுண்ணனவொன் றாலே யுயிர்த்தேனைத்
—நண்ணுமையாற்
றத்தோ மெனவெழுப்புஞ் சத்த மசிபதமே
யொத்தூ டுருவிற் றுளத்து.

ஆண்டவனைத் தவிர வேறு நினைவற்றிருந்த என்னுள்ளத்தை 'அது நீ' (தத்தோம்) என்று விளக்கும் அசிபதம் ஊடுருவிற்றெனல்.

815. வாரி யணைத்த மணாளன் குருரமணச்
சீரியன்பா லென்சொருபச் சீர்மையுற்றேன்
—ஓரியல்பா
வான்றவனு பூதி யடியே னகந்தையைச்செற்
றூன்றலாய் நின்ற துளத்து.

வாரியணைத்த குருமணாளால் சொரூப ஞானம் பெற்றேன்; அவ் வேகான் மாநுபூதி அகந்தையை யழித்து என் உள்ளத்தில் ஊன்றி நின்றதெனல்.

816. வென்றிசேர் ஞான விழுப்பதத்தோ டென்னுணர்வை
யொன்றுபா . வுள்ளத் தொடுக்கியே—யென்றுமொன்
றுகவொளிர் சுத்தசச்சித் தான சொருபசுக
போகவிளை வானன் புமான்.

ஆண்டவன் என்னுணர்வை உள்ளத் தொடுக்கி ஞானநிலையில் ஏகமாய் விளங்கும் சச்சித் சொரூப சுகபோகமாக விளைந்தானெனல்.

817. வென்றுகொண் டென்னை விழுப்பதத்துக் காளாக
ஒன்றுபட்ட மோன வுணர்வாலே—தொன்றுதொட்டுத்
துன்றுமே கான்ம சொருபானு பூதிவிளைத்
தோன்றினு னென்னே டுளத்து.

ஆண்டவன் என்னைத் தன் திருவடிக் காட்கொண்டு என் உள்ளத் திற் சேர்ந்து மோனத்தால் ஏகான்ம சொரூபானுபூதி விளைத்தா னெனல்.

818. வென்றுநின் றுங்கே விசுத்த சொருபமா
வொன்றிநின் றனென் னுயிரோடே—மன்றவொன்
றனமா மோன வழுத்தத்தால் யானெனும்பொய்ம்
மானமா ளுட்க மனத்து.

மோன அழுத்தத்தால் 'நான்' என்னும் பொய்ம் மாயம் நாணி யழிய ஆண்டவன் என் உயிரோடு ஒன்றி ஆன்ம சொரூபமாக நின்று னெனல்.

819 மிக்கபெரு சாந்தி விலாசங்கூர் சீரமணச்
சொக்கனருட் பார்வையிலே சொக்கியநான்
—புற்கெனவே
பன்னலமும் மங்கப் பராற்பரமாந் தன்சொருப
நன்னலமே நாடலுற் றேன்,

ஸ்ரீரமணனது சாந்தப் பார்வையிலே சொக்கிய நான் மற்றப் பேறுக ளெல்லாம் மங்குமாறு ஆன்ம சொருபப் பேறு பெற்றே னெனல்.

820. களிகூர் சொருபநலங் காட்டின னின்பப்
புளகூ ரனுபூதி பொங்க—தெளிவாக
வூறு சிவானுபவ வூற்று நீ ருட்கொண்டு
மாறுவகை நீத்தேன் மனத்து.

ஆண்டவன் சொருபக் காட்சி தரவே அதனாற் பொங்கிய தெளிந்த சிவானுபவ வூற்றை யருந்தி மனமாற்றம முற்றும் ஓய்ந்தே னெனல்.

(குறள்)

821. துனற்கரிய சொந்த சொருபானு பூதி
கனக்கவருள் செய்தான் கலந்து.

## கூஉ—பிரம்மானுபூதி

(கொச்சகக் கலிப்பா)

822. வேறுபோற் றேற்று வியாமோகப் பேய்முனைப்பா
லூறுபட்ட வென்ற ருயிர்தளிர்க்க வுள்ளத்து

மாரு வியல்பா மடுத்த சொரூபனருட்
பேறுபெற்றேன் சுத்தப் பிரம்மபதம் பெற்றேனே.

மோகத்தால் வேறுபட்டது போலான என்னுயிர் தளிர்க்குமாறு என்னுள்ளத்திற் பிரியாதுற்ற ஆண்டவனது அருட் பேற்றுற் பிரம்ம பதம் பெற்றேனெனல்.

823. எண்ணமே யில்லை யியல்பான சுத்தவருள்
வண்ணப் பொலிவுசேர் மௌனப் பதத்திலெனில்,
வண்ண வசிகரஞ்சேர் வாழ்வாந் துரீயவியற்
பெண்ணணங்கின் போகம் பிரம்மானு பூதியே.

அருள்மோனப் பதத்தில் எண்ணங்களேயில்லை யாகையால் அவ் வசீகரப் பிரம்மானுபூதியே பெண்ணுன என் போகமாகு மெனல்.

824. கற்றறியா மூடமனக் கன்னியேன் தன்னையன்றி
மற்றறியா வாறு மயக்கியெனைத் தன்னருட்கைப்
பற்றினன் காலிற் பரமார்த்தங் கண்டேன்மெய்ப்
பெற்றிசேர் வாழ்வு பிரம்மானு பூதியே.

மூடமனக் கன்னியான என்னை மயக்கிக் கைப்பற்றிய ஆண்டவன் தாளிற் பரமார்த்த பிரம்மானுபூதி வாழ்வு கண்டேனெனல்.

825. பெற்றிசேர் சுத்தப் பிரம்மானு பூதியா
நற்றவர் துய்க்கின்றவது நாயடிச்சி தோயத்தன்
முற்றமுழுத் தன்மை முயங்குவித்த சுத்தவருட்
கொற்றவனைக் கூடிக் குலாவலுற்ற வின்பமே.

---

குறிப்பு :— நாயடிச்சி --தன்மைக்கண் வந்தது.

மேலோர் பிரம்மானுபூதியாக அனுபவிப்பது யாதெனில் இந்நாயடிச் சியாகிய நான் என் கொற்றவனைக் கூடி யனுபவித்த இன்பமே யெனல்.

(வெண்பா)

826. கண்ணு ரமுதக் கனிரசமாய்க் காதலித்தார்க்
குண்ணு ரமுத வொளிப்பெருக்காம் — கண்ணுளன்
பேதையே னுள்ளம் பிரம்ம சொரூபவருட்
போதையாற் பொங்குவித் தான்.

தன்னைக் காதலித்தார்க்கு உள்ளொளியாய்ப் பெருகும் கண்ணுளன் என்னுள்ளத்தைப் பிரம்மானுபவத்தாற் பொங்குவித்தானெனல்.

## ௬௩—ஒளி வெளி யானேன்

(கொச்சகக் கலிப்பா)

827. பெருமா னுயிர்ப்பிரான் பேதையேன் கன்னிக்
கருமால் கழியக் கருத்துட் கலந்தான்
வெருவா விதிரா வியற்சிற் பரவாழ்
வுருவான மோன வொளிவெளியாத் தானே.

ஆண்டவன் பேதையேன் கன்னிமை மயல்கழிய மோன வொளி வெளியாக என் கருத்துட் கலந்தா னெனல்.

828. நாட்டமே கூட்டமா நல்ல சொருபவருள்
வேட்கையீடேற விளைந்ததுமோ னனுபவம்;
பாட்கலுற்ற பேதையேன் பாசமுளைப் பாமகந்தை
மீட்டெழா துள்ளம் வெளியொளியா விஞ்சியதே.

அருள் வேட்கை ஈடேறி, தன்னுட்டமே யோகமாகி, மோனனுபவம் விளைந்தது. பேதையாகிய என் பாசமுளைப்பான அகந்தை மீண்டும் எழாமல் உள்ளம் பரவெளி யாயிற் றெனல்.

829. சொரூபமா வுள்ளத்துத் தோய்ந்த துரீயப்
பெருமகன்பால் யானென்னும் பெண்மையறப் பேர
அருமையா வென்னையடிக் காண்டவன்சீ பாத
வொருமை யுணர்வா லொளிவெளியா னேனே.

---

குறிப்பு : பெருமகன், பெண்மை என்பவை புருஷன், பிரகிருதி களை முறையே குறிப்பன.

ஆண்டவன் சொரூபத்தில் அகந்தைப் பெண்மை யழிந்து, ஸ்ரீ பாத ஒருமை யுணர்வால் சிதாகாசமானே னெனல்.

830. பொருந்து சொருபானு பூதியெழ வுள்ளத்
தருந்துணையா வென்னை யணைந்தபிரான் மாட்டு
விரிந்த வொளிவெளியா மிக்க விபூதி
சுரிந்தமனக் கட்டொழியத் துன்றலுற் றேனே.

என்னுள்ளத்திற் சொருபானுபூதி எழுமாறு என்னை யணைந்த என் ஆண்டவனிடம் மனக்கட் டழிந்து ஒளிவெளி யானே னெனல்.

831. வெளியான மெய்யன் விசுத்தத் துரீய
வொளியா வுளங்கலந்தென் னுண்மையாத் தீர்வாற்

களிசே ரகந்தைமனக் கட்டற்று மோன
வெளியில் வெளியா விளங்கலுற் றேனே.

வெளியான ஆண்டவன் என்னுள் துரிய வொளியாய்க் கலத்தலால் அகந்தைக் கட்டற்று, மோன வெளியாகவே விளங்கினே னெனல்.

832. அளவறுக்கச் சற்று மரியபிரான் என்னைக்
களவுகொண்டான் சுத்தவருட் கண்ணோக்கால்;
உண்மை
யொளிவெளியா வுள்ளத் துறுசிவத்தை யல்லா
திளிவரல்சேர் யானெனநான் யாதுங்கா ணேனே.

ஆண்டவன் என்னைக் கண்ணோக்காற் களவு கொண்டதால், உள்ளத்தில் ஒளிவெளியான சிவத்தைத்தவிர 'நான்' என்று ஒன்றையுங் காணே னெனல்.

833. மாணு மயக்கத்தே மாழ்கலுற்ற பேதையைநல்
லூணாக வுட்கொண் டொளிவெளியாத் துன்று
வித்தான்;
காணவொன் றில்லாக் கடவுட் பெருங்கண்ணு
மாண விளங்கலுற்றேன் மாயை கழன்றொழிந்தே.

ஆண்டவன் மயக்கமுற்ற இப்பேதையை ஊணாகக் கொண்டு ஒளி வெளியாக்கினான். அதனால் மாயை யகன்று, காட்சி கடந்த கடவுட் கண் ஆனே னெனல்.

834. அளவில்பே ரின்ப வருட்பெருவாழ் வாகக்
களவில்வந் தென்னைக் கலந்தான் சொரூப
வொளிவெளிநோக் கத்தவ் வொளிவெளியே யன்றித்
தெளியவே வேறோர் திரிபுடியு மின்றே.

பேரின்ப வாழ்வாக என்னைக் களவிற் கலந்த ஆண்டவனது ஒளி வெளிப் பார்வையையே யான் பெற்றதால் ஒளிவெளியைத் தவிர திரிபுடி யறியே னெனல்.

835. விண்ணாணம் பேசி வெறித்தமடப் பேதையேன்
உண்ணாண வுண்மை யுணர்வொளியாப்
பொங்கலுற்றான்;
கண்ணாலம் பூண்டு கலந்த சொரூபவருட்
கண்ணாள னாலென் கடவுளியல் கண்டேனே

மிக்க நாணம் பெரியநான் நாணுமாறு ஆண்டவன் உணர்வொளியா யெழுந்தான். காணுலும் பூண்டு கலந்த அவனால் என் கடவுளியல் கண்டேனெனல்.

836 இடையி டிலாமலெங் கெங்கும் பரந்த
வுடையான் சொரூப வுணர்வொளியில் வாழும்
அடியே னகம்புறமெல் லாமவ் வொளியே
யடைவா லவிச்சையிரு ளற்றதறப் பொய்த்தே.

எங்கும் பரந்த என்னுண்டவனது சொரூப வொளி என்னுள்ளும் புறமும் வியாபிக்கவே அவித்தை யிருள் பொய்யா யகன்ற தெனல்.

837. பொய்க்கனவின் மாயப் புலங்களில்யான் மாழ்காது
மிக்கவியன் பார விசுத்தப் பரவெளியாச்
சிக்கெனவென் னுள்ளத்திற் சேர்ந்தபிரான்
சிற்சொருபம்
சர்க்கரையின் பாகுபோற் சந்ததந்தித் திப்பதே.

புலனின்பங்களில் நான் மயங்காதவாறு என்னுள்ளத்திற் பரவெளி யாகக் கலந்த ஆண்டவனின் சிற்சொருபம் எனக்கு எப்போதும் இனிப்பா யுள்ள தெனல்.

838. புரியுற்ற மாயப் புலன்சுட் டறிவாற்
றெரியப் படாத சிவச்சிற் பரமாந்
துரியப் பிரானென் சொருபமாத் தோய்ந்தான்
விரியப் பரந்த வெளியா வகத்தே.

சுட்டறிவா லறியப் படாத துரியப்பிரான் என் உள்ளத்தில் அகன்ற சொரூப வெளியாகத் தோய்ந்தானெனல.

839. அருள்வடிவா லென்னை யணைந்தான் சொரூபப்
பெருமை பொருளாப் புணர்ந்ததா லுள்ளத்
திருவிகற்ப மில்லாப்பே ரின்பவருட் போதப்
பெருவெளியா முண்மைப் பெருக்கமுற் றேனே.

என்னை அருள்வெளியா யணைந்த ஆண்டவன் சொரூபமே பொருளாய்ப் புணர்ந்ததால் வேறுபாடற்ற ஞானப் பெருவெளியா யானே னெனல்.

840. பந்தபா சக்கற் பனையறக்கூர் பார்வையாற்
புந்தியிலே சுத்தசிவ பூரணமாப் புக்கருளி

விந்தைசே ரின்ப வெளியா வெனைக்கலந்தான்
சொந்தமா வுள்ள சொரூபப் பெருமானே.

சொரூபப் பிரான் பந்தபாச மறுக்குந் தன் கண்ணோக்கால் என்னுட் சிவபூரணமாகப் புகுந்து என்னை இன்ப வெளியாய்க் கலந்தா னெனல்.

841. ஒள்ளியவாழ் வாக வொளிர்சொரூபப் பெம்மானோ
டுள்ளமொன் றாக வுறவு கலந்தலாற்
கள்ளமனப் பான்மை கழன்றொழியப் பேரின்ப
வெள்ளவெளி யாக விளங்கலுற்ற துள்ளமே

ஆண்டவனோடு உள்ளம் ஒன்றி உறவு கலந்தலால், மனக்கள்ள மற்று, உள்ளம் பேரின்ப வெளியாயிற் றெனல்.

842. கிளக்கவொணா நுட்பவொட்பக் கேள்வித் திறத்தா
லுளக்கணே தன்னோ டொருமை யுணர்த்தி
அளக்கவொணா வின்ப வருள்வெளியாத் தன்னைத்
திளைக்க வெனக்குச் சிறக்கலுற் றானே.

சொல்லரிய நுட்ப உபதேசத்தால் உள்ளத்தில் என்னைத் தன்னோடு ஒருமை யுணர்த்தித் தன்னை அருள் வெளியாக நான் அனுபவிக்கு மாறு ஆண்டவன் செய்தா னெனல்

843. கள்ளமனக் கற்பனை மாயங் கரக்கவென்
னுள்ளமே கோயிலா வுற்றவென் னாண்டவன்மாட்
டுள்ளுவகை பொங்க வுணர்வுபூ ரித்தலால்
விள்ளவொணா வுண்மை விருத்தவெளி யானதே

மனமாய மற என் உள்ளத்திற் கோயில் கொண்ட ஆண்டவனிடம் இன்பவுணர்வு பூரிப்பதால் சொல்லவொண்ணா வுண்மை சுத்தவெளியாய் விளங்கிற் றெனல்.

## சுச—ஞானானுபவம்

(கொச்சகக் கலிப்பா

844. என்பா லருளி யெனைத்தான மாற்றினான்
றன்பால் விளைந்ததொரு நன்மையமெய் யன்புணர்வால்

வன்பான பாச மயக்க மனங்கரைய
நன்பா வடைந்தது மெய்ஞ் ஞானானு பூதியே.

என்னைத் தாங்குக்கிய இறைவனிடம் உண்டான தன்மய அன்புணர்வால் பாசமனங் கரைந்து ஞானானுபூதியடைந்தே னெனல்

845. கல்லாத வென்னைக் களவினில்வந் தாண்டுகொண்ட
நல்லானென் னுருயிர்க்கு நல்கியதே தென்னெனிலோ
பொல்லாங்கு சற்றும் பொருந்தா திதயத்து
நல்லாங் கொளிர்சொருப ஞானானு பூதியே.

என்னைக் களவில் வந்து ஆட்கொண்ட பெருமான் எனக் கருளியது யாதோ வெனில் அது சொரூப ஞானானுபூதியே யெனல்

846. மங்கு முடல்வடிவா மட்கலுற்ற பேதைக்குத்
துங்க சொரூபவொளி சூழ்தரவே தானென்னை
மங்கலவாழ் வாக மணந்தபிரான் கண்ணோக்காற்
பொங்குசிவ ஞானானு பூதி புணர்ந்ததே.

"தேகமே நான்" என்று மயங்கியிருந்த எனக்கு, என்னை மணந்த ஆண்டவன் கண்ணோக்கால் சிவானுபூதி சேர்ந்த தெனல்

847. துன்று மனந்த சொரூப சிவத்திலெனக்
கன்பு நிரம்ப வருளியகண் ணாளன்பே
ரின்புணர்வூற் றாக விதயங் கிளர்தலால்
அன்புசிவ மானஞா னானுபவ மார்ந்ததே.

சொரூபசிவ பக்தியை எனக்களித்த ஆண்டவன் உள்ளத்தில் பேரின்ப வுணர்வாகக் கிளர்தலால் அன்பே சிவமென்னும் அறிவு மலர்ந்த தெனல்.

848. ஞாலமட மாக்கள்செய் நாகரிகக் கோலமன்றிச்
சீலமோ மற்றெந்தச் சீர்மையோ வில்லேற்கு
வாலறிவ னான மணாளன்ஞா னாசாரச்
சீலமென் னுள்ளுணர்விற் சேர்ந்தியல் கின்றதே.

வீண் இடம்ப மன்றி மெய்ச்சீலமோ சீர்மையோ இல்லாத எனக்கு ஆண்டவன் ஞானாசார சீல மளித்தா னெனல்

849. அச்சத்தா லுள்ள மழுங்கா தகங்காரத்
துச்சமனச் சேட்டையறத் துன்று சொரூபவருட்

சச்சித்தா வென்னைத் தழுவியவாண் டானடியே
யர்ச்சிக்கின் றேனடியே னைக்கியஞா னத்தாலே.

அகந்தைச் சேட்டையும் அச்சமும் அறுத்து என்னைச் சச்சித்தாய்த் தழுவிய ஆண்டவனடியை ஐக்கிய ஞானத்தால் அர்ச்சிக்கின்றேனெனல்

850. உணர்விலே வாழ்வை யொளிபெறக் கூட்டிப்
புணர்விலா சத்திற் புமானைநான் கண்டாங்
குணர்வொளியா முண்மையா லொன்றலுற் றேனுக்
கணவியது மோனஞா னுனுபவ மாண்பே.

என் வாழ்வை அறிவொளியிற் கூட்டிப் புணர்ந்த ஆண்டவனைக் கண்டு அவனோடு சச்சித்தாகச் சேர்ந்த எனக்கு மோன ஞானுனுபவம் மூண்ட தெனல்.

851 உணர்வான வுண்மை யுடையான் சொருபப்
புணர்வா லகந்தைப் புணர்ப்பற் றொழிந்தேன்;
தணவலறப் பொங்கு சதோதயமா வுள்ளத்
தணவியது மோனஞா னுனுபவ வாழ்வே.

ஆண்டவனின் சொருபப் புணர்ப்பால் அகந்தைப் புணர்ப் பொழிந்தேன். அதனுல் உள்ளத்தில் மோன ஞானுனுபவ வாழ்வு நிறைந்த தெனல்

852. கருமயல்சேர் வஞ்சவகக் கள்ளிமையைக் கண்டித்
துரிமையா வென்னை யுவந்தேற்ற வாற்றல்
அருமைசேர் மோனஞா னுனுபவ வாழ்வாப்
பெருகியதென் னுள்ளத்திற் பெம்மான்கண் ணேக்கே.

என் அகங்காரக் கள்ளிமையைக் கண்டித்து, உரிமையோடு என்னை ஏற்றுக் கொண்டதால், அவன் கண்ணேக்கே மோன ஞானுனுபவமாக உள்ளத்திற் பெருகிய தெனல்.

853. நானு தரங்கூர் நலத்தான் சொருபவருள்
வானுக வென்னை வளைத்தா னகவொளியால்;
ஆனுத மோனஞா னுனுபவ வாழ்வுற்றேன்
தானே தானுனவொரு தத்துவமாந் தன்னிலே.

ஆண்டவன் என்னை சொருபாகாயமாக வளைத்ததால் தானே தானுன அவனிடம் ஞானுனுபவ வாழ்வு பெற்றேனெனல்.

854 சற்றுமே யென்னைத் தணவாதோர் பெற்றித்தாப்
பற்றியே நின்ற பராற்பரனோ டோரியல்சேர்
வுற்றதா லுள்ளத் தொளிவெளியாஞ் சிற்சொருப
நற்றே னருந்தினேன் ஞானானு பூதிபெற்றே.

என்னை யகலாத ஆண்டவனோடு ஒன்றாகி ஞானானுபூதி பெற்றுச் சிற்சொருபத் தேனருந்தினே னெனல்.

855. மருள்வளர்பொய்ம் மாய மனப்பிழையால் உண்மைத்
தெருள்வளர்சற் பத்தித் திறந்தேர் விலாதேன்
பொருள்வளர்சற் போதானு பூதி புணர்ந்தேன்
அருள்வெளியா வுள்ளத் தணைந்தபிரா னாலே.

பிழை மனத்தாற் சற்பக்தித் திறம் அறியா திருந்த யான், அருள் வெளியாக என்னுள்ளத் தணைந்த ஆண்டவனால் ஞானானுபூதி புணர்ந்தே னெனல்.

856. அன்புக் குரியவென் னாண்டான் சொரூபப்பே
ரின்பவுணர் வூற விதயங் கலந்தலால்
அன்புசிவ மானஞா னானுபவத் தியானென்னுந்
துன்ப மயக்கமனச் சூதற் றொழிந்ததே.

ஆண்டவன் சொரூபானந்தம் ஊற உள்ளத்திற் கலந்ததால் உண்டான ஞானானுபவத்தால் மனச் சூது ஒழிந்த தெனல்.

857. கண்ணோக்கா லென்மனத்தைக் கட்டழித்த காதலனால்
உண்ணோக்கா மோன வுணர்வோங்க வொட்பநுட்ப
விண்ணோக்கா முன்னை விழிப்படைந்தேன், ஊனுடல
மண்ணோக்காற் றன்னை மறந்தொழிந்த பேதையே.

தேகாத்ம புத்தியால் தன்னை மறந்த நான், தன் கண்ணோக்கால் என் மனத்தைக் கொள்ளைகொண்ட காதலனால், ஞான விழிப்படைந்தே னெனல்.

858. மையலுற்று மாழ்குறுபொய்ம் மாயமனத் துன்பமறக்
கையிலுற்ற நெல்லிக் கனிபோலக் கண்கூடாத்
துய்ய சொரூப சுவானுபவ ஞானத்தா
லுய்யக்கொண் டானை யுயிர்க்குயிராப் போற்றுவனே

உள்ளங்கை நெல்லிக் கனியாகச் சுவசொருபானுபவ ஞானம் தந்து என்னை உய்யக் கொண்ட ஆண்டவனை என்னுயிர்க் குயிராகப் போற்றுவேனெனல்.

(வெண்பா)

859. என்னுயிர்க்கு வாய்த்தபே ரின்ப வருட்கொழுநன்
பன்னலருங் கூர்மைச்சா பார்வையொளி
—என்னிதயத்
தூடுருவிப் பாய்தலா லுண்மைஞா னனுபவ
நீடருவி யாயிற்று நெஞ்சு.

அருட் கொழுநனின் பார்வையொளி இதயத்தில் ஊடுருவலால் ஞானானுபவம் ஊற்றெடுத்ததெனல்.

860. தன்னளப்பொன் றில்லாத் தனித்தலைவன் முன்வலிய
வென்னுளப்பூ மேல்வந் தினிதணைந்து—மன்னலுற
நல்கினன் றன்சொருப ஞானானு பூதியெனக்
கல்கியது மோக மகத்து.

தனித்தலைவன் என் இதயமலரில் வந்தணைந்து தன் சொருப ஞானானு பூதியருளவே மோகமழிந்ததெனல்

861. கண்ணனை தெய்வருட் கண்ணாளன் பார்வையுயிர்க்
குண்ணா ரமுதவொளி யோகமாய்ப்— பெண்ணை
மடப்பேதை பெற்றேன் மகத்தான மோன
திடப்பே ருணர்வுத் திறம்.

கண்ணாளன் பார்வையே எனக்கு அமுத ஒளியோகமாகி, அதனால் மகத்தான திடஞான மோனவுணர்வு பெற்றேனெனல்.

862. அடிச்சிநா னார வனுபவித்த லன்றி
யடிச்சியா லோத லரிதால்—அடிச்சி
யுளத்துக்கோ ருண்மை யொளிவிளக்கா வாண்டான்
திளைத்தருள்சற் போதத் திறன்.

ஆண்டவன் சற்போதத் திளைப்பை ஆர அனுபவிப்பதை யன்றிக் கூற இயலேனெனல்.

## ௬௫—சிவமானேன்

(கொச்சகக் கலிப்பா)

863. தேராய்நின் னுண்மை சிவமாக வென்றுகண் ணற்
காரா ணவப்பாழ்ங் கலிகெடுத்தாட் கொண்டவிறை
நேரான மோன நிஜானுபவங் கூரவகத்
தாரா வமுத வருட்கடலா நின்றானே.

"உன்னுண்மை சிவமே அறிக என்று கூறி, நான் நிஜானுபவம் பெறுமாறு ஆண்டவன் உள்ளத்தில் அருட்கடலாக நின்றானெனல்.

864. இன்பவுணர் வாக விதயத் தியல்சொருப
நம்ப னளித்தமெய்ஞ் ஞானானு பூதியால்
வம்புறுபொய்ம் மாய மயக்கவிகற் பங்கெடத்துன்
றன்புசிவ மான வருட்பரமா வுற்றேனே

உள்ளத்தில் இன்பமயமாய் விளங்கும் ஆண்டவனளித்த அனுபூதியால் விகற்பமழிந்து, அன்பே சிவமான பரநிலை யுற்றேனெனல்.

865. யானற் றொழிய விதயத் தெனைக்கலந்த
வானப் பிரான்சொருப மார்பில் வசீகரமா
மோனக் கலானுபவ முத்திப்பே ரின்பநலந்
தானுற்ற வாழ்வு சதாசிவமெய்த் தன்மைத்தே.

யானழிய என்னைக் கலந்த ஆண்டவனது மார்பகத்திற் பெற்ற மோனக் கலானுபவமான முத்தி சதாசிவ வாழ்வேயெனல்.

866. தானாக வென்னைத் தடுத்தாண்ட சுத்தவருள்
வானா மொருத்தன் வடிவழகிற் சொக்கலுநான்
மோனானு பூதி முகத்தலா லுள்ளத்துத்
தேனான வாழ்வு சிவோகமாச் சேர்ந்ததே.

என்னை வலிந்தாட் கொண்ட அருளாகாய வடிவனின் அழகில் நான் சொக்கி மோன முற்றதால் உள்ளத்தில் சிவோக வாழ்வு சேர்ந்த தெனல்.

867. உள்ளா னொருத்தனென் னுள்ளுணர்விற் பேரின்ப
வெள்ள வொளிவெளியா வீங்கு சொரூபமா;
நள்ளிதயத் தூடெனக்கு நாலவனே யாவொளிர்
மெய்த்
தெள்ளமுத வாழ்வு சிவோகமாச் சேர்ந்ததே.

பேரின்ப ஒளிவெளிச் சொரூபமான ஓர் நாயகன் எனக்கிருப்பதால் நான் அவனேயாக விளங்கும் சிவோக அமுத வாழ்வு எனக்குக் கிடைத்த தெனல்.

868. ஆன்ம சொரூபமா வாண்டுகொண்ட வம்மானை
நான்மருவிக் கைவல்ய ஞானநு பூதிபெற்றேன்;
ஆன்மலா பத்தா லடிச்சியே னுள்ளத்துத்
தேன்மருவு சுத்த சிவாத்துவவாழ் வுற்றதே.

ஆன்ம சொரூபமாக என்னை யாட்கொண்ட பெருமானைக் கலந்து ஞானநுபூதி பெற்றேன்; ஆன்ம லாபத்தால் சிவத்துவ வாழ்வு கிடைத்த தெனல்.

869. எந்தநா ளுந்தன் னியற்சிற் பதத்துக்கே
சொந்தமா வாண்டான் சொரூபானு பூதியால்
அந்தரான் மாவா வகமகமென் றற்புதசச்
சந்தமாப் பொங்கு சதாசிவவாழ் வுற்றதே.

ஆண்டவன் என்னை என்றுமே தன்னடிக்குச் சொந்தமா யாட் கொண்டான். அதனுல் அகமக மென்று என் அந்தரான்மா வாகப் பொங்கும் சதாசிவ வாழ்வு எனக்குற்ற தெனல்.

870. தற்பரமா வுள்ள சதாசிவமெய்ஞ் ஞானவருட்
கற்பகமா வாண்டான் கலத்தலா லென்னகத்திற்
சொற்பரமன் றாகத் துலங்குமோ னுனுபவச்
சிற்பதமே மிக்க சிவபதமாத் தேர்ந்தேனே.

ஆண்டவன் உள்ளத்திற் கலத்தலால் மோனுனுபவச் சிற்பதமே சிவபதமாகத் தேர்ந்தே னெனல்

871. கற்பனைசேர் மோகக் கலக்கமற்ற சுத்தவருட்
சிற்பரவாழ் வான சிவானுபவ நல்கலாற்
கற்புறவே யிந்தமடக் கன்னியைநன் காண்டபிரான்
தற்பரமா வுள்ள சதாசிவமெய்த் தத்துவனே.

மடக்கன்னியான நான் கற்புடையவளாகுமாறு சிவானுபவம் தந்து ஆட்கொண்ட என் தலைவன் சதாசிவ சொரூபனே யெனல்.

872. ஏதமில்பே ரின்ப மியல்வாழ்வா வுள்ளொளிர்சற்
போத சொரூபப் புமானாற் பொலிவுற்றேன்;
பேதை யடிச்சியேன் பெற்ற சிவானுபவ
மேதகவு கண்டு வியக்க விழுத்தவரே.

பெரிய தவசிகளும் கண்டு வியக்குமாறு இவ் வடிச்சியேன் ஆண்டவனால் சிவானுபவ மேன்மை பெற்றேனெனல்.

873. களங்கமா மோகவகங் காரங் கரக்க
வுளங்கலந்து வாழு மொளியோன் சொரூப
வளங்கலந்த வாற்றால் வறுமைதீர் வுற்றேன்;
விளங்குவது நானு விசுத்தப் பரமே.

உள்ளத்து வாழும் ஆண்டவனது சொரூப ஞானத்தால் அகங்கார மோக வறுமை தீர்ந்து பரமிய நானும் விளங்குகின்றேனெனல்.

874. ஊன மயக்கமற்ற வுண்மை யுணர்விலெனைத்
தானணைந்த சுத்த சதாசிவன்பே ரின்பவருள்
வானமா முற்ற வனைத்தமோ னானுபவத்
தீனமற வாழ்கின்றேற் கெல்லாஞ் சிவமயமே

என்னை மெய்யுணர்வாக வணைந்த ஆண்டவன் பேரின்ப மௌனாகாச மாக என்னை யணைத்துக் கொண்டதால் எல்லாம் சிவமயமான வாழ்வு பெற்றேனெனல்.

875 ஆலம்ப மாக வகிலவுயிர்க் குள்ளுமுறை
மூலன் சொரூப முழுமுதலா வென்னைக்கண்
ணாலம்பூண் டாண்டவரு ளங்கனான் அன்பணைப்பிற்
சீலம் பெருகுசிவச் சேமவாழ் வுற்றதே.

எல்லா வுயிர்க்கும் ஆதார மானவனும் என்னைச் சொரூப மணம் பூண்டவனுமான ஆண்டவனது அன்பணைப்பிற் சிவக்ஷேம வாழ்வுற்றதெனல்.

876. அவமான மோக வகப்பே யகன்று
சிவமாக வாழ்வு தெளியத் திளைத்தேன்,

பவமான மாயப் படர்கெடவென் னுள்ளத்
தவிர்ஞான மோன வருட்பிரான் பாலே.

என்னுள்ளத்தில் விளங்கும் ஆண்டவனிடம் அகப்பே யழிந்து வாழ்வு சிவமாகத் தெளியப் பெற்றே னெனல்.

877. அருமைசேர் மோனஞா னனுபவம் பொங்கப்
பெருமைசேர் சுத்தவருட் பேறளிக்கும் பெம்மாற்
குரிமையாப் புக்கேன் ஒருமுயல்வு மின்றிப்
பரமசிவ யோகப் பயன்படைத் தேனே.

மோனானுபவம் பொங்குமாறு அருளளிக்கும் ஆண்டவனுக்கே நான் உரிமை யானதால், ஒரு முயற்சியு மின்றியே சிவயோகம் படைத்தே னெனல்.

## சதாசிவ போகம்

(கொச்சகக் கலிப்பா)

878. உண்மைவாழ் வாக வுளநிதெளிந்த மோனவருள்
வண்மையா லென்னை மடுத்த மணாளனர்
நுண்மைசேர் நோக்கென்னை நூக்கலா லுள்ளத்திற்
றிண்மைசேர் சுத்த சிவானுபவங் கூடியதே.

உண்மை வாழ்வான மோனத்தால் என்னை யணைந்த மணாளனது அருள் நோக்கால் திடமான சிவானுபவங் கூடிற் றெனல்.

879. கூரியதன் வாள்விழியாற் கோசவகங் காரவகக்
காரிருளா மோகமனக் கன்னிமையின் கட்டறச்செற்
றாரமுதா வுள்ளத் தணைந்தவென் னண்டவனாற்
பார சிவானுபவம் பற்றியதென் னுருயிர்க்கே.

குறிப்பு: அகங்கார மாகிய கன்னிமை என்க.

கோச அகங்காரமான என் மோகக் கன்னிமையைத் தன் வாள்விழியா லழித்து, அமுதமாக உள்ளத்தி லணைந்த ஆண்டவனாற் பர சிவானுபவம் பற்றிய தெனல்.

880. மருள்சேர்வெங் காம மயக்கமற வுள்ளத்
தருள்வாழ்வா வென்னை யணைந்த பிரான்பாற்
றெருள்சேர் சிவானுபவச் சீர்மைபெற் றுய்ந்தேன்
இருள்சூ ழுலக வியற்கையறத் தீர்ந்தே.

ஆசை மயக்கங்க ளறுமாறு என்னை உள்ளத்தி லணைந்த ஆண்டவ னிடம் உலகவியற்கை நீங்கிச் சிவானுபவ வாழ்வுற்றேனெனல்.

881. சுத்தவுணர் வான சொரூபப் பிரானழகிற்
சித்தந் திளைத்தேன் சிவானுபவச் சீர்மையுற்றேன்
நித்த மணுளனு நெஞ்சம் பொலியவிளங்
கத்தனருட் பார்வையெனக் காரா வமுதமே.

சொரூப மாகிய தலைவனிடம சித்தந் திளைத்துச் சிவானுபவம் பெற்றேன; நித்ய மணாளனை ஆண்டவ னருட்பார்வையே யெனக்கு அமுத மாகு மெனல்.

882. கருத்துமுற்றக் கொள்ளைகொண்ட கண்ணாளன் றன்பால்
இருத்தலுற்ற சித்தத் தியல்புரைக்கில், யாதோர்
வருத்தமற்ற மோனவருள் வண்மைசேர் வாழ்வாத்
திருத்தமுற்ற சுத்த சிவானுபவந் தானே.

உள்ளங் கவர்ந்த கண்ணாளனோ டுள்ள என்வாழ்வு சுத்த சிவானு பவமே யெனல்.

883. நுட்பவொட்ப மானகூர் நோக்கமிலாப் பேதையே
னுட்புக் கொளிவெளியா வோங்கலுற்ற பெம்மானைப்
பெட்புறுமெய்க் காதலாற் பேணலுற்றே னுள்ளத்துத்
திட்பமார் சுத்த சிவானுபவஞ் சேர்ந்ததே.

பக்குவமற்ற பேதையே னுள்ளே ஒளிவெளியாக ஓங்கலுற்ற ஆண்ட வனைக் காதலாற் பேணவே,உள்ளத்தில் திடமான சிவானுபவஞ் சேர்ந்த தெனல்.

884. ஓரம் படாதே யுலகியலில் மிக்கவருள்
வாரம் படைத்தேன் வரோதயன்பால்; வேதாந்த

சாரமா வுள்ள சதாசிவஞா னுனுபவப்
பூரம் பெருகியதென் புந்தியில்வாழ் வோங்கவே.

உலகியலிற் கெடாமல் ஆண்டவனிடம் அன்பு பூண்டேன். வேதாந்த சாரமான சிவஞான வெள்ளம் என்னுட் பெருகிய தெனல்.

885. உள்ளத்தைக் கொள்ளைகொண் டுள்ளத் துறைரமண
வெள்ளத்திற் கள்ளமன வேட்கைமுற் றக்கரையத்
தெள்ளத் தெளிந்த சிவானுபவ மோனவுணர்
வெள்ளத் தனையு மிகக்கவொணுத் தன்மைத்தே

உள்ளங் கவர்ந்த ஸ்ரீரமணை வெள்ளத்தில் இதர ஆசைகள் கரைந் ததினால் உண்டான சிவானுபவம் சிறிதும் விட்டகல வியலாத தெனல்.

886. அறிவிலே வந்தென்னை யாண்டுகொண்ட வாற்ருற்
குறைவிலா ஞானவருட் கோமானே டுண்மை
யுறவினல் வேறறயா னென்றுபட்டேன் போதச்
செறிவிலே யார்ந்தேன் சிவானுபவ வாழ்வே.

அறிவிலே வந்து என்னை ஆட்கொண்டதால் ஆண்டவனேடு இரண் டறச் சேர்ந்து அறிவால் சிவானுபவ வாழ் வடைந்தேனெனல்.

887. மருண்டவகங் கார மனமாயத் தோற்றத்
திரண்டுபட்ட மோக வியற்கையற வொன்ருத்
திரண்டொளிர்சற் போத சிவானுபவ வெள்ளம்
புரண்டியல்வாழ் வாகப் புணர்ந்தான் பிரானே.

துவித மோகமற ஒன்ருய்த் திரண்டு விளங்கும் சிவானுபவ வெள் ளமே என் வாழ்வாக ஆண்டவன் புணர்ந்தா னெனல்.

888. மயல்போக வென்னை மணந்தான் சொரூப
வியல்பாக வுள்ளத் திலகலால், யானென்
செயலற் றெழுந்த சிவானுபவ மோனப்
பயன்மலிந்த வாழ்வு படைத்தேன் பதத்தே.

குறிப்பு : யானென் செயல்—யானென்னும் கர்த்தத்துவ வடிவான ஜீவபோதச் செயல்.

என்னை மணந்த ஆண்டவன் ஆன்மசொரூபமாகவே உள்ளத் துறை தலால் கர்த்ருத்துவ மற சிவானுபவ மோனவாழ்வு பெற்றேனெனல்.

889. ஒருமையா லாண்ட வுடையான் சொரூபப்
பெருமைசேர் மோனவருட் பேரின்ப வாழ்விற்
கருமையல்சேர் மோகவகக் கன்னிமையற் றேய்வாற்
பரம சிவச்சிற் பரவெளியா னேனே.

ஆண்டவனிடம் பெற்ற சொரூபப் பேரின்ப வாழ்வில் அகந்தைக் கன்னிமை யற்றதாற் சிற்பர சிவவெளி யானே னெனல்.

890. துரியமாப் பொங்கு சொரூபநோக் கத்தால்
இரியவகப் பாழிருளை யெற்றியவாண் டானோ
டொரியல்பிற் றுக வுளங்கிளர்மோ னத்தாற்
றெரிதற் கரியசிவச் சிற்பரமா னேனே.

சொரூப நோக்கால் அகந்தையிருளை யழித்த ஆண்டவனோடு ஒன்றாகிப் பெற்ற மோனத்தாற் சிவச்சிற்பர மானே னெனல்.

891. தன்பரமா வென்றுந் தழைத்துச் செழித்திடுமா
றன்புருவா வென்னை யணைந்தபிரான் கூர்விழியா
லின்புருவா வுள்ளத் திலகுவித்த சொச்சொருப
நன்பதமே நான்கண்ட நல்லசிவச் செம்பதமே.

---

குறிப்பு :—"நானறிந்த ஞானவருட் செம்பதமே" எனவும் பாடம்.

என்னை அன்புருவா லணைந்த ஆண்டவன் தன் கண்ணோக்கால் என்னுட் காட்டித் தந்த சொச்சொருபமே சிவபதமாய்க் கண்டே னெனல்.

(வெண்பா)

892. அகத்தே யணைந்தவென் னாண்டான் சொரூப
சுகத்தே யறிவுமுற்றச் சொக்கி—இகத்தோ
பரத்தோ பயிற்றுமொரு பாவனையற் றோங்கு
திரத்தே சிவத்துவமுற் றேன்.

---

குறிப்பு : அறிவென்றது ஐயறிவான மனத்தை; பாவனையற் றோங்கு திரத்தே—பாவனாதீதமான ஸத்பாவ ஸ்திதியில் : ஜீவ போதச் சேஷ்டை யறத் தீர்ந்த திடமோன நிலையில்.

ஆண்டவனது சொரூப சுகத்திற் சொக்கி, இகபரத் தியான பாவனை களற்று விளங்கும் சிவத்துவம் உற்றே னெனல்.

893. மங்கிக் கிடந்த மடப்பேதை வஞ்சநெஞ்சிற்
பொங்கமெய் யன்பு புகட்டினுன்—தங்கக்கை
யம்மா னருட்பதத்து டாழ்தலா லிவ்வடிச்சி
செம்மாந் தடைந்தேன் சிவம்.

எனக்கு மெய்யன்பு புகட்டிய தங்கக்கை அம்மாஞகிய ரமணனது அருட்பதத்தூடு ஆழ்தலால் இப்பேதை சிவநிலை பெற்றேனெனல்.

894. பெருமான் குருரமணப் பெம்மானைக் கூடிப்
பெருமா மதுரரசம் பெற்றேன்—பெருமாண்
சிவானுபவ மாகத் திளைக்கத் திளைக்க
நவானுபவ வேட்கை மிகும்.

குருரமணப் பெருமானைச் சிவானுபவமாகக் கூடித் திளைக்கவே, புதுப்புது அனுபவங்களால் அன்பு மிகுந்து பேரின்ப ரசம் பெற்றேனெனல்.

(கொச்சகக் கலிப்பா)

895. திளைக்கத் திளைக்கத் தெவிட்டாத சாந்தி
விளைக்கலுற்ற வாண்டவன்பால் வித்தகமாக் கூடிக்
களிக்கலுற்றேன் காதலாற் கண்ணுங் கருத்துந்
தளிர்க்கலுற்ற சுத்த சதாசிவபோ கத்தே.

தெவிட்டாத சாந்தி விளைக்கும் ஆண்டவனைக் கூடிக் காதலாற் கண்ணும் மனமும் தளிர்க்கும் சதாசிவ போகந் திளைத்தேனெனல்.

896. அங்கணு லென்னையடிக் காண்டான் சொருபத்திற்
றங்கலுற்ற காதற் றவத்தாற் பரமசுப
மங்கலவாழ் வான மதர்ப்பூர வுள்ளுணர்விற்
பொங்கியது சுத்த சதாசிவசற் போகமே.

ஆண்டவன் சொருபக் காதலாற் சுபமங்கல வாழ்வு பெற்ற மதர்ப் பால் உள்ளுணர்விற் சதாசிவ போகம் பொங்கியதெனல்.

897. கற்பகமா வுள்ளவருட் காந்தன் சொருபவுணர்
வற்புதவாழ் வாக வகங்கிளரப் பொங்கவிவ்

வற்ப வடிச்சிக்கவ் வாண்டவனைக் கூடலாற்
றற்பரமா வுள்ள சதாசிவஞ்சார் வுற்றதே.

தெய்வ மணாளனின் சொரூபவுணர்வே என்னுட் பொங்குவதால், அவ் வாண்டவனைக் கூடிச் சதாசிவஞ் சார்ந்தே னெனல்.

898. சாந்தியே சுத்த சதாசிவமெய்த் தத்துவமா
யாந்தெரிய வுள்ளத் தியல்சிற் பரசொருபக்
காந்தனருட் கண்ணார் கழலே கதியாகச்
சார்ந்தே சதாசிவசற் போகந் திளைத்தோமே.

சாந்தியே சிவம் என்று தெரியச் செய்த பரசொருபக் காந்தனது பாதமே கதியா யடைந்து சதாசிவ சற்போகந் திளைத்தே னெனல்.

899. கள்ளியே னுள்ளங் களிகூரக் கண்ணேக்கால்
வெள்ளவருள் வாழ்வு விளைத்தான் மாட் டோகையால்
உள்ளுணர்வு மேன்மே லுவாக்கடல்போற் பொங்கு சிவத்
தெள்ளமுத போகந் திளைத்தலென்ன பாக்கியமே.

கண்ணேக்கால் அருள் வாழ்வளித்த ஆண்டவனிடம் மேன்மேலும் உள்ளுணர்வு பொங்கிச் சிவபோகந் திளைக்கும் என் பாக்கியம் என்னே யெனல்.

900. மாணச் சிறந்தவருள் வாலறிவா வுள்ளத்திற்
காணத் துலங்கலுற்ற கைவல் லியப்பிரான்
பேணப் பெரிதரிய பெம்மான் சொரூபத்திற்
பூணலுற்ற வேட்கைசிவ போகமாப் பொங்கியதே.

உள்ளத்திற் காணக் கிடைத்த கைவல்ய சொருபத்திற் கொள்ளும் வேட்கையே சிவபோகமாகப் பொங்கிய தெனல்.

901. மருட்சிக் கலக்கமற மாற்றித் துரிய
வருட்சிற் பரமா வணைந்த பிரான்மாட்
டொரட்சயவாழ் வாக வுளப்பொங்கு சொந்தப்
பொருட்சிவபோ கத்தாற் பொலியலுற் றேனே.

மருட் கலக்கம் நீக்கி அருட்பரமாக என்னை யணைந்த ஆண்டவன் பால் அக்ஷயமாகப் பொங்கும் சிவபோகம் பெற்றே னெனல்.

902. இத்தமியே னுள்ளத் தியல்சொருபன் தன்னை யெனக்
கத்தமியா மோன வருள்வெளியாக் காட்டலாற்
சித்தமனம் புத்தி திளைக்கக் களிக்கின்றேன்
புத்தமுதாப் பொங்குசிவ போகப் புணரியிலே.

ஆண்டவன் தன்னை என்னுள்ளத்தில் அப்தரிக்காத அருள்வெளியாகக் காட்டுவதால், சிவபோகக் கடலில் என் சித்தம், மனம், புத்தி யாவும் திளைக்க மகிழ்கின்றே னெனல்.

903. இளித்திளித்து நோக்கி யெதிர்கற் பனையிற்
களித்துழன்ற மாயக் களிசே ரளியேன்
உளத்திலென்னை முற்ற வொடுக்கித்தன் னுண்மை
தெளித்தபிரான் மாட்டுத் திளைத்தேன் சிவமே.

பிற பொருளையே சுட்டி யறிந்தழிந்த வினையை உள்ளத்தில் முழுதும் ஒடுக்கித் தன்னுண்மை யறிவித்த ஆண்டவனோடு சிவமாகத் திளைத்தே னெனல்.

(வெண்பா)

904. உணர்வொளியே வாழ்வாக வோங்குசிவ யோகம்
புணர்தலாலுற்றசிவ போகம்—மணவினையின்
மங்கலசுத் தாத்துவித மாட்சியிலே நான்மகிழ்த்
தங்கலுற்ற துள்ளந் தழைத்து.

ஆண்டவனுடன் சிவயோக மங்கல மணவினையால் சிவபோகம் புணர்ந்து சுத்தாத்துவித மாட்சி பெற்றே னெனல்.

905. காந்தமா வாண்டவருட் கண்மணியா லென்னகத்து
வாய்ந்தபே ரின்பவருள் வாழ்வெனக்கு—நீந்தலரு
சாந்தபத மாகத் தழைத்தசிவ போகமதை
யாந்தரமோ சாற்ற வெடுத்து.

ஆண்டவனால் அகத்திலடைந்த பேரின்ப அருள்வாழ்வு அளவற்ற சாந்தியாய்த் தழைத்த சிவபோக மாகும். அதை வருணிக்க இயலா தெனல்.

906. இருமை யறியா வொருமையா லென்னை
அருமைசே ராண்டா னணைந்தான்—பெருமைசேர்
சிற்பரவாழ் வான சிவானந்த போகமெனக்
கெப்பொழுதுஞ் சேர்ந்த தினிது.

ஆண்டவன் துவிதமற்ற ஏகமாய் என்னை யணைந்ததால் சிவானந்த போகம் சேர்ந்த தெனல்.

907. வேண்டுவதொன் றற்ற விழுப்பதத்தூ டென்னறிவைத்
தூண்டுசிவ ஞானவருட் சோதியாய்-ஆண்டவனென்
னுட்செறிவாப் பொங்கு முதாரசிவ போகமெனக்
*கட்சயமா வுள்ள தகத்து.

*அட்சயம்—அழிவற்றது.

ஆண்டவன் என் அறிவைத்தூண்டும் சிவஞான சோதியாய் உள்ளே நிறைவதால் சிவபோகம் என் உள்ளத்தில் அக்ஷயமாக உள்ள தெனல்.

908. பாசா டவியிற் பரந்து திரிந்துமன
வேசாட லுற்று வெதும்பு முயிர்—நேசானு
பூதியாப் பொங்குசிவ போகமுண்டு வாழவருட்
சோதியாத் தோய்ந்தா னிறை.

பாசக் காட்டிற் பறைந்து வெம்பிய என்னுயிர் சிவபோக முண்டு வாழுமாறு அருட்சோதியாய் ஆண்டவன் என்னைத் தோய்ந்தா னெனல்.

909. உணர்வூற வுள்ளத் துயிரையென் னம்மான்
புணர்வதாற் பொங்குசிவ போகம்—உணவாக
*மெல்லிலைகா யாக விழைந்துண்டு விம்மிதமாய்
மல்லலுற்றே னென்னை மறந்து.

*மெல்லிலைகாய்—வெற்றிலை பாக்கு. மெல்லிலை--வினைத்தொகை

எம்மான் என் னுள்ளத்தில் உயிரைப் புணர்வதால் சிவபோக முண்டு, அடைகாய் அருந்தி விம்மித முற்றே னெனல்.

## ௬எ—உபசாந்தி

(கொச்சகக் கலிப்பா)

910. மன்னியபே ரின்பவருள் வாலறிவா மோனத்தால்
என்னை யிதயத் திருகவிணைத் தானடிக்கீழ்ப்
பின்னமனக் கற்பனை பேதமறத் துன்னியது
பன்னலரு சுத்தப் பரமோப சாந்தியே.

ஞானமாம் மோனத்தால் என்னை உள்ளத்தில் இருக இணைந்த ஆண்டவனடியில் மனக்கற்பனை யழிந்து பரமோப சாந்தி பெற்றே னெனல்.

911. வணங்கலுற்ற வென்னை மறித்தசைய வொட்டா
திணங்கலுறத் தன்னோ டிரண்டறவொன் றாக
மணங்கலந்து கொண்டவருள் வள்ளியோன் பால்யான்
உணங்கலற வுற்றே னுபசாந்த வாழ்வே.

என்னை இரண்டற ஒன்றாய் மணங் கலந்துகொண்ட ஆண்டவன் பால் துன்பமற்று உபசாந்த வாழ்வுற்றே னெனல்.

912. மணங்கலந்த பெம்மான் மதர்ப்பேற வுள்ளத்
திணங்கலா லென்னோ டிரண்டற்ற வொன்று,
அணங்கலுற்ற மாய வளர்த்தத் திரளா
லுணங்கலற வுற்றே னுபசாந்த வாழ்வே

குறிப்பு: ஒன்று இணங்கலால் எனக் கூட்டுக

ஆண்டவன் உள்ளத்தில் ஒன்றாய் இணைவதால் மாயையின் கேடு நீங்கி உபசாந்த வாழ்வுற்றே னெனல்.

913. ஓவலற வுள்ளத் துபசாந்த போகவருள்
வாழ்வலரப் பெற்று மகிழ்ந்தே னடிச்சியேன்
கேவலசச் சித்தாக் கினர்சொருபப் பெம்மான்பாட்
டார்வமெழப் பொங்குமெ யன்புணர் வாங் காதலிதே.

உள்ளத்தில் உபசாந்த போக வாழ்வு பெற்றேன்; இது சொரூபப் பெருமானிடங் கொண்ட காதலின் விளைவாகு மெனல்

914. வெருட்கலக்க மான வியாதலம் பேர
வருட்கடலா வென்னையணைந் தாண்டா னடிக்கீழ்
இருக்கலுற்றே னுள்ளம்பே ரின்பவுணர் வூற்றுச்
சுரக்கலுற்ற சாந்தியிற் சொக்கலுற் றேனே.

அருட் கடலாக என்னை யணைந்த ஆண்டவன் திருவடியில் வாழ்வதால் உள்ளத்திற் சுரக்கும் பேரின்ப சாந்தியிற் சொக்கினே னெனல்.

915. அகவா தனைதீ ரருட்பிழம்பா வாண்ட
சுகவாரி யான சொருபனொடு துன்று
சகவாசத் தாலடைந்த சாட்சாற்கா ரத்தால்
உகவான சாந்தி யொழிவறப்பொங் கிற்றே.

அகந்தை யழித்து அருட் பிழம்பான ஆண்டவனோடு கொண்ட சகவாசத்தாற் சாட்சாத்காரமுற்று சாந்தி பொங்குற்றே னெனல்

916. தனைவா தியல்சொரூப சாந்தியென் னுள்ளத்
துணர்வாக வுள்ளதோ ருண்மையே, மிக்க
வுணவாக வென்னுயிரை யுண்டொழித்த வாண்டான்
புணர்வால் விளைந்தவருட் பூரணவாழ் வாலே

என்னுயிரை யுண்ட ஆண்டவன் புணர்வால் விளைந்ததே பூரண வாழ்வாகையால் என்னுள்ளத் துண்மையே சாந்தியெனல்.

917. சுத்தப் பரமசிவ சோபனமாத் தன்னடிச்சிக்
கந்தனருட் பார்வை யகத்தொளிரப் பொங்கலால்
மத்தவகங் கார மனக்கலக்கத் துன்பமறப்
புத்தமுத வாழ்வாகப் பொங்கியது சாந்தியே.

ஆண்டவனருட் பார்வை [illegible] பரமசிவமாகவே கிளர்ந்ததால், அகந்தை மனத்துன்பம் [illegible] சாந்தியே அமுத வாழ்வாகப் பொங்கியதெனல்

918. என்னறிய பெற்றியன் யானியானென்
றுள்ளுணர்விற்
றுன்னொனாமே தோய்ந்த சொருபானு பூதியாற்
பண்ணவெனக் கொன்றுமறப் பற்றியது சுத்தவருள்
வண்ணவெளி யாக வுளம்பொங்கு சாந்தியே.

ஆண்டவன் "யான் யான் என்று என்னுள்ளத்தில் ஸ்புரித்த சொரூபானுபூதியால் கிருதகிருத்தியனாய், சாந்தி பெற்றேனெனல்.

919. கன்று மகந்தைமனக் கன்மியைப் பின் றுதழியத்
துன்று விசாரவருட் டோரியால் ஆண்டவனை
யொன்றலும்வெம் பாச வுணர்ச்சி வேகந்தணிய
மன்ற வியன்றதுமெய் வாழ்வான சாந்தியே.

அகந்தைக் கன்மியை யழிய விசாரத் தோட்டியின் உதவியால் ஆண்டவனைக் கூடியவுடன் பசுபாச வேகந் தணிந்து மெய்வாழ்வான சாந்தி யனுபவ மாயிற் றெனல்.

920. மயக்கவெம் பாச மனக்கலக்கந் தீர
வுயிர்க்குயிரா வுள்ளத் தொளிர்மெய்ப் பிரான்பால்
உயக்கமில்பே ரின்பவுணர் வூற்றான சாந்தி
நயக்குறுமெய் வாழ்வாக நண்ணிற் றினிதே.

என்னுயிர்க் குயிரான ஆண்டவனிடம் பேரின்ப வுணர்வான சாந்தி வாழ்வு பெற்றேனெனல்.

921. களிவளர்பே ரின்பக் கடல்பெருக வுள்ளத்
தொளிவெளியா வுற்றவென் னுண்மைப் பிரான்பால்
அளைதலுற்ற மெய்யன் பமோகவே நல் வாழ்வா
விளைதலுற்ற சாந்தியால் விம்மிதமுற் றேனே.

உள்ளத்தில் ஒளிவெளியாகப் பேரின்பக்கடல் பொங்க வந்து வாய்த்த ஆண்டவன்பால் விளைந்த சாந்தியால் விம்மித முற்றே னெனல்.

922. உழுவலா மன்புக் குரியபே ரின்பக்
கழுமலா மோனக் கடவுட் பிரானைத்
தழுவியே யன்பு தழைத்தலால் இன்பச்
செழுமைசேர் சாந்தி திளைத்தலுற் றேனே.

மோனக் கடவுளாம் ஆண்டவனைத் தழுவி அன்பு பெருகுவதால் சாந்தி நிறையப் பெற்றேனெனல்.

923. அமர்த்தமனக் கொந்தளிப்பின் றுவமைந்த சாந்த
சமுத்திரமா வென்னைத் நல்கியளித்தான் தானே

சமத்ததன் மங்களுமாச் சார்ந்தார்க்கு மிக்க
சுமித்திரமா வுள்ள சொரூபப் பிரானே.

அடைந்தார்க் கருள்பவனுன ஆண்டவன் என்னைச் சாந்த சமுத்திர மாக்கினு னெனல்.

924. ஊனை மனங்கெட் டொழியவுளத் நொட்பருட்ப
வானமா முற்ற வளைந்தநுசாந் தானுபவம்
மோனமா வென்னை முகந்துகொண் டாண்டமெய்ஞ்
ஞான வருட்குரு நாதன் பதத்திலே.

என்னை யாட்கொண்ட ஞானகுருநாதனின் திருவடியில் மனம் நாசமடைந்ததால் சாந்தானுபவம் வியாபித்த தெனல்.

925. சோரம் படுபாசச் சூதறவென் னுள்ளுணர்விற்
பேரின்ப மோனப் பெருமிதஞ்செய் தாண்டவன்பாற்
கூரன்பு மேன்மேற் குலாவுசிவ பத்தியின்
சாரமே யாகத் தழைத்தநுப சாந்தியே.

பாசமற என் னுள்ளுணர்விற் பேரின்பப் பெருமிதம் தந்த ஆண்டவனிடம் மேன்மேலும் பொங்கிய சிவபக்தியின் சாரமேயாக உபசாந்தி நிலவிற் றெனல்.

926. கற்பதற்கு யாதோர் கலையுமின் றனவருட்
சிற்பரமா மோனந் தெளியக்கண் ணேக்கினுற்
கற்பனை யணவங்கா ரற்றொழிந்தேன் அத்துவிதத்
தற்பரமாத் தங்கியது சாந்தானு பூதியே.

மோனந் தெளியக் கண்ணோக்கஞ் செய்த ஆண்டவனிடம் ஆணவமற் றொழிந்ததால் சாந்தானுபூதி யுண்டாயிற் றெனல்.

927. கள்ளக் கருத்தாற் கலங்கலுற்ற கன்னியேற்
குள்ளத் தெனைக்கலந்த வொள்ளியான் சுத்தவருள்
வெள்ளத்தே மோக விடாய்தணியப் பொங்கியது
தெள்ளத் தெளிந்த சிவானுபவ சாந்தியே.

உள்ளத்தில் என்னைக் கலந்த ஆண்டவன் அருள் வெள்ளத்தில் மோகவிடாய் தணியுமாறு சிவானுபவ சாந்தி பொங்கிற் றெனல்.

928. விரிந்தியன்ற சுத்தவருள் விஞ்ஞைசயா லுள்ளத்
திருந்தொளிர்கின் றோனோ டிணையுமண்டே னுக்கு
வருந்துமனத் தாப வறட்சியற வாழ்விற்
பொருந்தலுற்ற சாந்தியாற் பொங்கயலிந் தேனே.

உள்ளத்தெழுந்த ஆண்டவனோடு இணைந்த நான் மனத்தின் தாப வறட்சி நீங்க, சாந்தி நிறையப் பெற்றேனெனல்.

929. இருப்புணர்வா மின்ப வியற்பிரான் றன்பால்
விருப்பெனக்கு மேன்மேல் விளைவாமா றென்னைக்
கருப்புவட் டாகக் கலத்தலான் மோன
வருட்பெருவாழ் வான வமைதியுற் றேனே.

சச்சிதானந்த மாகிய ஆண்டவன் தன்னிடம் எனக்கு அன்பு பெருகுமாறு கலத்தலால் மோன அருள் வாழ்வான அமைதி யுற்றேனெனல்.

930. கண்ணாக வெங்குங் கலந்தொளிர்சற் போதவருள்
விண்ணா வியல்சொருப வித்தகனைக் கண்டேனுக்
குண்ணா ரமுதவுணர் வூற்றா மனுபவத்தாற்
றண்ணா ரமைதி தழைக்கலுற்ற துள்ளமே.

ஞான சொருப நாதனைக் கண்டவெனக்குப் பெருகிய அமுத ஊற்றால் உள்ளத்தில் பேரமைதி தழைத்த தெனல்.

(குறள்)

931. மனக்கலக்கங் கெட்டொழிய மல்கியது சாந்தி
யெனைக்கலந்த வாண்டா னிடத்து.

## ௯அ—மோனம்

(கொச்சகக் கலிப்பா)

932. பொய்க்கனவாத் துன்று புலங்களைத் தான்கடந்து
மிக்கநன வாக விளங்கு துரீயசிவச்
சொக்கனொடு கூடித் துலங்கலுற்ற வென்மனத்து
நிற்குமது சுத்த நிராமயமோ னப்பதமே.

கலைவான புலனை நிலைத்தன்றி மெய்ந்நலவாக விளங்கும் ஆண்டவனைக்கூடி நிராமய மோனப் பதம் பெற்றேனெனல்.

933. பிறவி மயக்கப் பெருங்கற் பனைதீர்
அறிவான வுண்மையா வாண்ட பிரானோ
டுறவு சொருபமா வுற்றே னுளத்து
நிறைவான மோன நிலைவிளங் கிற்றே.

பிறவிக் கற்பனை நீங்க அறிவுண்மையாகிய ஆண்டபிரானுடன் சொருப உறவு உற்றதால் உள்ளத்தில் மோன நிறைவு விளங்கிற்றெனல்.

934. தானேவந் தென்னைத் தலையளித்தான் சுத்தவருள்
வானா மலர்ந்த மனோதீத மாட்சியான்
யானே யெனதே யெலாமேயோர் தன்மயமா
மோனானு பூதி முடித்துங் கொடுத்தானே.

நான் எனது யாவும் தன்மயமாக முடிக்க அருளியவனும், மனோதீத அருளாகாச சொருபனுமான ஆண்டவன் தானே வந்து என்னை யாட்கொண்டானெனல்.

935 துளக்க மிலாத சொருபமா முற்றக்
களிக்க வெனக்குட் கலந்த பிரான்மாட்
டளக்க வொணாதமெய் யன்புணர் வின்பு
திளைக்கலான் மோனஞ் செழிக்கலுற் றேனே.

சூன்ய சொருபமாய் என்னுட் கலந்த ஆண்டவனிடம் நினைத்த அன்புணர்வால் மோனம் செழிக்கவுற்றேனெனல்.

936 தணக்கவொணா தத்துவிதத் தன்மையா லென்னை
மணக்கலுற்ற வாண்டான் மலர்ப்பதத்தில் வாய்ந்த
திணக்க வணக்க வியல்பான மோனம்
பணைக்கவகம் பாரசிவ பாரம் மியமே.

அத்துவிதத் தன்மையால் என்னை மணந்த ஆண்டவன் திருவடியில் பாரம்மிய சிவமான மோனம் தழைத்ததெனல்.

937. ஆரா வமுதமே யாகவகம் பொங்குசுபப்
பேராசை வாரியாம் பெம்மா னருட்பதத்திற்

காரா ணவப்பாழ்ங் கலிதீர் விசுத்தசிவப்
பூராய மோனம் புணர்தலுற்றேன் பேதையே.

அமுத வாரியாம் ஆண்டவன் பதத்தில் ஆணவமற்ற சிவபூரண மோனம் அடையப் பெற்றேனெனல்.

938. அல்லா ணவப்பா ழகல வகத்திலெனக்
கெல்லா நலங்களுமா மின்ப வருள்வடிவாப்
புல்லாநின் றன்பதத்திற் பொல்லாங்கு முற்றுமறக்
கல்லாநின் றேன்மவுனம் கன்னிமடப் பேதையே.

குறிப்பு: பேதை பேதையேன் எனத் தன்மைக்கண் வந்தது.

ஆணவமற இதயத்தில் இன்ப வடிவாகக் கலந்த ஆண்டவன் பதத்தில் கன்னிப் பேதையான நான் பொல்லாங்கு யாவும் போய் மோனங் கற்றேனெனல்.

939. நிரம்ப வழகியவென் னேயனென் னெஞ்சாத
துரம்படுமெய்ஞ் ஞான வொளியாக வுள்ளான்;
வரம்பில் சொரூபவருள் வாழ்வான மோனப்
பரந்திளைத்த லுற்றேன் பகலிரவோ ரேனே.

அருளழகன் என்னுள் ஞானவொளியாக வுள்ளான். சொரூப வாழ்வான மோனத்தில் ஆழ்ந்து நானே இரவு பகலு மற்றேனெனல்.

940. புத்தமுத போகமாப் பொங்கலுற்ற னுள்ளத்து
நித்த மணாளனு நீடு சொரூபனிறை;
சித்தர் பிரானைச் சிறந்தவருட் சிற்பரனோ
டொத்தொழுகும் மோன வுணர்வால்வாழ் கின்றேனே.

சொரூப இறைவனே உள்ளத்தில் மணாளனாக விளங்குகின்றான். அவனோடு மோன வுணர்வால் ஒத்தொழுகி வாழ்கின்றேனெனல்.

941. ஒன்றினா லன்றி யுணர்வரிது சுத்தவருள்
வென்றிசே ருண்மை விளக்கமா மோன நிலை;
துன்றுமே கான்ம சொரூபமா வென்னையணைந்
தொன்றலுற்றான் மோனவுணர் வூற்றுக் கிளர்ந்தானே.

மனம் ஒன்றினாலன்றி மெய்விளக்கமான மோனநிலை விளங்காது. ஆண்டவன் ஏகான்ம சொரூபமாக என்னையணைந்து ஒன்றியதால் மோனவுணர் வூற்றாகப் பெருகிற்றெனல்

942 சலிக்குமியா வைத்துஞ் சலியாத வுண்மை
நிலைக்களனா மென்மெய்ந் நிலைதெரித்தான்
டான்பாற்
கலக்கமில்வாழ் வானவருட் கைவல்யங் கண்டேற்
குலக்கருமோ னனுபவ வூற்றெடுத்த துள்ளே.

அசையாத ஏகமான மெய்ப்பொருளே என்னுண்மை என்றறிவித்த ஆண்டவனால் என்னுள் மோனானுபவம் ஊற்றெடுத்த தெனல்.

943. அற்புதமா மென்னை யணைந்தபிரான் மாட்டெனக்குப்
பொற்புறவாழ் வாகப் புணர்ந்த சுவானுபவக்
கற்பிலே நெஞ்சங் கரைந்தொழிவாற் கைவல்யச்
சிற்பரமா மோனவருட் சீர்மைசேர் வுற்றதே.

என்னை யணைந்த ஆண்டவனிடத்து வந்த சுவானுபவக் கற்பில் உள்ளங்கரைந்து கைவல்ய மோன அருட் சீர்மை பெற்றேனெனல்.

944. கள்ளவாழ் வான கலக்கமற ஆண்டவனோ
டுள்ளவா றென்று மொளிர்தலால் ஆன்றவருள
வெள்ளவாழ் வாக விளைந்தமோ னனுபவம்
தெள்ளத் தெளிந்தொழுகு ஜீவநதி யாயிற்றே.

ஆண்டவனோடு மோனநலார்ந்த அருள் வாழ்வாக விளைந்த அனுபூதி அகண்டப் பிரவாகமாக இயல்கின்றதெனல்.

945. ஈனத் தொழுத்தையேற் கேசறவற் றெக்களிக்க
நானற் றொளிர்சொருப நம்பனருட் சிற்பதத்தில்
வானெக்க முற்ற மலர்ந்தபெரு மாட்சிசேர்
மோனக் கலானுபவ மோதம்பொங் குற்றதே.

ஈன அடிச்சியாகிய நான் இறுமாந்திருக்குமாறு ஆண்டவன் சிற்பதத்தில் முற்றும் மலர்ந்த மோனக் கலானுபவப் பேரின்பம் பொங்குவித்தானெனல்

946. ஏகமா நீடு மியற்சிற் பரசொருப
போகவாழ் வாகவகம் புக்கவருட் புண்ணியன்பால்
மோகமுனே வேகமற்ற மோனவுணர் வானசுப
யோகமென் னுள்ளத் துவாயகடலாய்ப் பொங்கியதே.

ஏகசொருப வாழ்வாக என்னுள் எழுந்த ஆண்டவன்பால் மோன வுணர்வால் சுபயோகம் பொங்கிற் றெனல்.

947. தேட வொணுமெய்த் திரவியமா வுள்ளத்திற்
பீடுசேர் சுத்தப் பிரம்மானு பூதி யெழக்
கூடலுற்ற வாண்டான் குமாரதேசர் சொரூபவெளி
வீடுபே ருக விளங்கியது மோனமே.

உள்ளத்திற் பிரம்மானுபூதி எழுமாறு கூடிய ஆண்டவனது சொரூப மோன வெளியே மோக்ஷமாய் விளங்கியதெனல்.

948. இனிக்க விலங்க விறைவா விருயத்
துனைக்கலக்க லுற்ற வுணர்வா லகந்தை
முனைக்கலற்ற தன்னிழப்பா மோனுனு பூதி
யெனக்கியல்பா வெய்திற் றிசைக்க வொணுதே.

இறைவா! உன்னை நான் உள்ளத்தில் இனிக்க வினிக்கக் கலந்த வுணர்வால் அகந்தை யற்ற மோனுனுபூதி எய்திற் றெனல்.

949. பந்த மயக்கப் பதைப்பா மகந்தை யறச்
சந்தவருள் செய்த சதோதயமெய்க் கண்ணுளன்
சொந்த சொருபமாத் துன்றுமோ னுனுபவம்
புந்தியிற்சேர் வாஸிதயம் பூரணமாப் பொங்கியதே.

அகந்தை யழிய வருள் செய்த கண்ணுளனது சொருப மாகிய மோனம் என் புத்தியிற் சேர்ந்ததால் உள்ளே பூரணமாய்ப் பொங்கிய தெனல்.

950. தொக்கவோர் சுத்தத் துரீய சொருபன்மாட்
டொக்கவே மெய்யன் புறவுகலந் துள்ளத்து
நிற்கலா லுற்றசிவ நேயமோ னுனுபவத்
துக்கதுமற் றெல்லா வுணர்வுமொருங் கொக்கவே.

துரீய சொருபனிடம் அன்புறவு கலந்தலா லடைந்த மோனுனுபவத்தில் எல்லா உணர்வுகளும் மறைந்தன வெனல்.

951. பண்டே யகவொளியாப் பற்றிய மெய்ப் பான்மையாற்
கண்டே வணங்கிமெய்க் காதலா லன்புபட்டேற்
குண்டே திளைக்க வுளங்கிளர்மோ னக்கனியால்
விண்டோ டியது வியாமோகப் பீடையே.

ஆண்டவனைக் கண்டு வணங்கி மெய்க்காதலுற்ற நான் மோனக்கனி யுண்டு வியாமோக மற்றேனெனல்.

(வெண்பா)

952. நெஞ்சிலமர்ந் திவ்வடிச்சி நேயமுற்றக் கொள்ளை
கொண்ட
மஞ்சனருட் போத மகிழ்ச்சியால் —சஞ்சலமா
மோகச் சபலமற்று மோனப் பெரும்பதவாழ்
வாகச் சிறந்த தகம்.

என் உள்ளங் கொள்ளை கொண்ட ஆண்டவன் போத மகிழ்ச்சியால் உள்ளம் மோகச் சபலமற்று, மோன வாழ் வுற்ற தெனல்.

953. தொன்றுதொட் டுள்ள சொரூபமா வாண்டவனோ
டொன்றுபட்டு வாழ்த லுடைமையால்—வென்றிசேர்
சுத்தாத் துவித சுகானுபவ மோனமெனக்
கெத்தாலு(ம்) நீங்கா தினி.

அநாதி சொரூபமே யாக ஆண்டவனோடு வாழ்வதால் இச் சுத்தாத்து வித சுகானுபவ மோனம் எனக்கு இனி என்றும் நீங்கா தெனல்.

(குறள்)

954. அறிவைக் கடந்த வறிவினை மோனக்
குறியிற் குலாவலுற் றேன்.

955. அறிவாக வாண்ட வருட்பிரான் மோனக்
குறியே யெனதுகுறிக் கோள்.

௯௯—பூமா

(கொச்சகக் கலிப்பா)

956. பரந்த வகண்டப் பரமான மோனஞ்
சுரந்து சொரூபமாத் துன்றலால் என்றுற்
றிருந்தத் திளைக்கலுற்ற தெய்வப் பிரான்சீர்
பொருந்தலுற்ற வுள்ளுணர்வு பூமா நீர் மைத்தே.

அகண்ட மோனமே என் சொரூபமாக விளங்குவதால், யானனுப வித்த ஆண்டவனோடு பொருந்திய உள்ளுணர்வு பூமாவே யாயிற் றெனல்.

957. இருந்தொளிர்மெய் வாழ்வாம்பே ரின்பவியல் சேர
நிரந்தரமா மோன நிலைதெரித்தாண் டானோ
டொரந்தரமில் லாதசுப யோக வுணர்வாய்ப்
பொருந்தியவுள் ளத்திற் பொலிந்ததுபூ மாவே.

சச்சித் சொருபத்தை நானெய்துமாறு மோனநிலை காட்டி யருளிய ஆண்டவனோடு சுபயோகம் பொருந்தியதால் உள்ளத்திற் பூமா விளங்கிற் றெனல்.

958. கலங்கலுற்ற மோகங் கரக்க வகத்து
நலங்கிளர்மெய்ஞ் ஞானவொளி நல்கினன் மாட்டுத்
துலங்கலுற்ற சொந்த சொருபானு பூதி
வலங்கலந்த வாழ்வில் மலர்ந்ததுபூ மாவே.

ஞானவொளி யளித்த ஆண்டவனிடம் சொருபானுபூதி கலந்த வாழ் வில் பூமா மலர்ந்த தெனல்.

959. முற்படுமோ காணவப்பாழ் மோசனமாய் மோதவியற்
சிற்பரவாழ் வாகத் தெளிந்த சிவானுபவக்
கற்பகமா வாண்டவருட் கண்ணாளன் பாதநிழற்
பொற்புறுபூ மாவாப் பொலிந்ததென் னுருயிர்க்கே.

என் மோகாணவம் ஒழித்துப் பேரானந்த சிற்பரசிவானுபவத் தந்து ஆண்டுகொண்ட கண்ணாளனது திருவடி நிழலே என்னுயிர்க்குப் பூமா வாகப் பொலிந்த தெனல்.

960. தற்பரமா வுள்ளசிவத் தம்பிரான் செம்பிரான்
சிற்பரமா முற்றத் தெளிந்த சிவானுபவக்
கற்பகமா வுள்ளங் கலந்தாங் கருள்வெளியாப்
பொற்புறுமோ னனுபவம் பூமாவாப் பொங்கியதே.

ஆண்டவன் சிவானுபவக் கற்பகமாக உள்ளங் கலந்ததா லடைந்த மோனனுபவமே பூமாவாகப் பொங்கிய தெனல்.

## ௯௰—அருள் வியப்பு

(கொச்சகக் கலிப்பா)

961. வாய்ந்திடவொண் ணாதபெரு வாழ்வா வடிச்சிக்கு
நேர்ந்ததென்ன விந்தை நிரதிசயா னந்தவருட்
காந்தமா வென்னைக் கவர்ந்திதயத் தொன்றலுற்ற
சாந்த சொரூப சதாசிவன்மாட் டைக்கியமே.

அருட்காந்தமாக என்னைக் கவர்ந்து கலந்த சதாசிவனோடு ஐக்கியமாம் அடைதற்கரிய வாழ்வு இவ் வடிச்சிக்குக் கிடைத்த விந்தையென்னே யெனல்.

962. ஆடலோ பாடலோ மற்றெவ் வருங்கலையோ
கூடிலே னென்பாற் குணநலமா வொன்றுமிலேன்;
நீட வுயர்ந்தவிறை நேயமுற்றென் னைகூடிற்றக்
கூடினு னென்னிற் குணப்பே ரருளென்னே.

ஆடல் பாடலான கலைகளோ குணநலமோ இல்லாதவளான என்னை ஆண்டவன் நேசித்துக் கூடினு னென்றால் அவனருள் என்னே யெனல்.

963. திருத்திசேர் மோனவியற் சிற்பர வாழ் வாகக்
கருத்திலே நீத்தோர் கலந்தவுறு பூதி
விரத்திசேர் ஞான விரதமெய் தேறு
வொருத்தியார் வுற்ற துடையா னருளே

விரக்தியோ ஞானவிரதமோ கடைப்பிடியாத ஒருத்தியான நான் துறந்தோர் அனுபவிக்கும் சிற்பர வாழ்வை அடைந்தது அவன் அருளே யெனல்.

964 தீன பயக்கச் செருக்கா மிருள்கெடவெய்ந்
ஞான வருட்கதிரா னுள்ளி தயமபுக்கவிறை
மோனவளஞ் சேர முகந்தெனைத்தன் மார்போடு
நானணைந்த தன்னருளின் சம்பிரமஞ் சாற்றரிதே.

அகந்தை யிருளழிய ஞான சூரியனாய் என் உள்ளம் புகுந்த ஆண்டவன் மோனவளம் பெருகும்படி என்னைத் தன் மார்போடணைந்த அருளின் சிறப்பு சொல்ல அரியதெனல்.

965. கேடற்ற வுண்மைக் கிளரொளிசேர் தன்சொருபந்
தேடற் கரும்பெருந் தெய்வப் பிரானென்னைக்
கூடலுற்றான் கூடிக் குலாவலுற்றான் உள்ளுணர்வூ
டாடலுற்ற சுத்த வருட்கூத் தழகிதே.

யாராலுந் தேடுதற் கரிய தெய்வப் பிரான் என்னைக் கூடிக் குலவி உள்ளுணர்விற் கலந்து நட்டமாடுகின்றனனே! இவ் வருட் கூத்தின் அழகென்னே யெனல்.

966. அளியளா மேழை யடிச்சியைப்பே ரின்பக்
களியளாக் கண்டவருட் கண்ணாளன் பாத
வொளியளா வென்னை யெல் லோருங்கொண் டாட
வெளியளாயாள் பெற்ற வியற்பெருமாண் பென்னே.

எளியனாகிய என்னைக் கடைக்கணித்துப் பேரின்ப ஞானமளித்து, எல்லோரும் என்னைக் கொண்டாடச் செய்த ஆண்டவனின் மகிமை யென்னே யெனல்.

967. துணக்கவொறு வத்துவ்த்த் தன்மையா லென்னை
மணக்கலுற்ற வாண்டவன்செம் மாணடியிற் சற்று
முணக்கலில் பே ரின்பவுணர் வூற்றன மோன
விணக்க முற்ற வாழ்வை யிசைப்பதெவ் வாறே

என்னை அத்துவிதமாக மணந்த ஆண்டவன் திருவடியிற் பெற்ற பேரின்ப வூற்றான மோன வாழ்வை எவ்வாறு விளக்குவே னெனல்.

968. அருமா லுழந்த வடிச்சியே னுக்குப்
பெருமா னருளாற் பிறங்குபே ரின்பம்
வெருவா தியற்று விசாரமெய்ஞ் ஞானப்
பெருமா தவர்க்கன்றிப் பெற்றிடவொண் ணாதே.

எனக்குப் பெருமானருளாற் கிடைத்த பேரின்பமானது சலியாது ஞான விசாரஞ் செய்யும் பெருந் தவசிகட் கன்றிக் கிடைக்காததாகு மெனல்.

969. மத்தக் களியாலே மாழ்கலுற்ற பேதையேன்
சித்தஞ் சிவமாத் திளைக்கவென் னுள்ளுணர்வூ
டத்தன் கருணையெனக் கார்ந்தவா றெண்ணியெண்ணி
நித்தமென் னெஞ்சுருகா நின்றதுமெய் யன்பாலே.

அற்பனாகிய என் சித்தம் சிவமாதுமாறு கருணைசெய்த ஆண்டவனை யெண்ணியெண்ணி என்னுள்ளம் மெய்யன்பால் உருகுகின்றதெனல்.

970. இரும்பு மனத்தை யிளக்கினன் மாட்டுப்
பரம்பயி லின்பப் பயன்படைத்த வாற்றல்
அரும்பரன் செய்தமெய் யன்பா ரருளை
விரும்பிமேன் மேல்விம் மிதமுறுகின் றேனே.

என் மனத்தை யுருக்கிய மணாளனின் அன்பாகிய அருளை நினைந்து மேன்மேலும் விம்மித முறுகின்றே னெனல்.

971. ஆதரங்கூ ரன்பா லணைந்தபிரான் சுத்தவருட்
காதலா லுள்ளங் களித்தேற்குக் கைவல்ய
மேதகவா மோனவியல் வித்தகமெய்ப் புத்துணர்வு
சாதனையா தொன்றுமின்றிச் சார்ந்ததருள் விந்தையே.

என்னைக் கருணையால் அணைந்த ஆண்டவனிடம் கொண்ட காதலால் கைவல்ய ஞானம் யாதொரு சாதனையுமின்றியே கிடைத்தது விந்தையே யெனல்.

972. கள்ளமார் மோகக் கடைச்சியேன் பாலிரங்கி
உள்ளவா றென்னை யுவந்தாண்டு கொண்டபிரான்
தெள்ளவே சுத்தசிவத் தேனூறு பாயவுளத்
தள்ளியே தந்தவருள் ஆர்பெறுவா ரச்சோவே.

கள்ளியாகிய என் பாலிரங்கி யாட்கொண்டு, என்னுள்ளத்திற் சிவத் தேனூற பாயச் செய்த ஆண்டவன் திருவருளைப் போல யார் பெறுவாரெனல்.

(வெண்பா)

973. பெம்மா னருட்பெரும் பேற்றால் விளங்குமெனக்
கிம்மா நிலத்தி லெதிரில்லை—எம்மா
நிலத்தினுமற் றாங்கே நிகிலமுமென் மோனத்
தலத்திலன்றோ தாங்கற் பிதம்.

பெருமான் அருட்பேற்றால் விளங்கும் எனக்கு எவ்வுலகத்தும் யாரும் நிகரில்லை. ஏனெனில் அவ் வுலகங்களெல்லாம் என் மோனத்தலத்தில் வெறுங் கற்பிதமே யன்றோ வெனல.

## ஈக—வேட்கை நிறைவேறல்

(கொச்சகக் கலிப்பா)

974. மாணு வுடல்வடிவா மாழ்கலுற்ற வென்னையருட்
கூணுக வுட்கொண் டொளிர்சொருபப் பெம்மான்பால்
வாணு ளெனக்கு வளமபடவே பேரின்ப
வேணுசை யான விருப்பங்கை கூடியதே.

என்னை அருளுக்கு ஊணுக்கிய ஆண்டவனிடம் பேரின்ப விருப்பம் கைகூடப் பெற்றே னெனல்.

975. தேய்தல் வளர்தலற்ற திவ்ய சொருபவருட்
காதல்கை கூடலாற் காமானு பூதிபெற்றேன்
ஓதல் உணர்தல் உளங்களிக்க வுள்ளியுள்ளி
யாதரம்பா ராட்டல் அளவளவல் யாவுமதே.

திருவருட்காதற் கைகூட ப்பெற்ற திவ்யானுபூதியால் வாழ்க்கை முற்ற அதன்மயமே யாயிற் றெனல்.

976. கண்ணு ரமுதமாக் கண்ட பிரானையிப்போ
துண்ணு ரமுதா வுளத்தே திளைக்கலுற்றேன்;
பெண்ணு ணலாத பிரம்ம சொருபவருள்
விண்ணுக வுள்ளத்தில் வேட்கை நிரம்பியதே.

கண்ணுக் கமுதமாகக் கண்ட ஆண்டவனை இப்போது உள்ளத் தமுதமாகத் திளைக்கின்றேன். அதனுல் பிரம்ம சொருபாகாசமாகி என் வேட்கை நிரம்பிய தெனல்.

977. கள்ளக் கலக்கமாங் கற்பனு மோகமறத்
தெள்ளியே சுத்தசிவச் சிற்பரமா வாண்டவனென்
னுள்ளத் தவிசிலென்னே டொன்றலுற்ற மோனத்தால்
வெள்ளப் பரமசிவ வேட்கையீ டேறியதே.

கற்பனை யழித்துச் சிற்பரயாக என்னை யாண்ட பெருமான் உள்ளத் தவிசில் என்னே டொன்று யணைந்து விளைந்த மோனத்தால், என் சிவ வேட்கை ஈடேறிய தெனல்.

(வெண்பா)

978. சேமமா நின்றவருட் செல்வப் பெருவளவன்
ஏமமற நின்றவில் வேழைக்குக்— காமம்
மறுகியென் சிந்தை மயங்கா தளித்தான்
உறுதியோ டின்ப மொருங்கு.

அருட் செல்வனை ஆண்டவன் இவ்வேழைக்கு வேட்கைமிகுந்து மனம் மயங்காதவாறு மனவுறுதியும் பேரின்பமும் அளித்தானெனல்.

979. கல்வி யளித்தான் கனமளித்தான் மெய்ஞ்ஞானச்
செல்வ மளித்தான் சிறப்பளித்தான்—வெல்வதொரு
மோன மளித்தான் முழுமுதலாந் தன்சொருப
வானமா வென்னைமணந் தான்

சொருபா காயமாக என்னை மணந்த ஆண்டவன் கல்வி, கனம், ஞானச் செல்வம், சிறப்பு, வெற்றிதரு மோனம் யாவு மளித்தான் எனல்.

980. காண்டலுமே காந்தமாத் தான்கவர்ந்தா னேர்சிறிது
பூண்டவன்பே வன்றளையாப் பூட்டினான்
—தீண்டவருள்
வேண்டவென வாரி விழுங்கின னிவ்விதங்கா
ணாண்டவன்செய் யாட்சித் திறன்.

கண்டதும் காந்தமாய்க் கவர்ந்தான். அவன் அன்பாற் சிறைசெய்தான். அருளால் என்னைத் தீண்டி வாரி விழுங்கினான். அவன் ஆட்சித்திறம் இவ்வாறும் எனல்.

## ௭௨—குறைவின்மை

(கொச்சகக் கலிப்பா)

981. வீணகங் கார வெறிசேர் வியாமோகக்
கோணறுமெய்க் காட்சிக் குலாவால் இதயத்து
மாணவிளங் குற்ற மணாளனருட் சீபாத
வாணையில்வாழ் வுற்ற வடிச்சியேற் கென்குறையே.

அகந்தை யற்ற மெய்க்காட்சி உள்ளத்தில் ஏற்பட்டதால் என் மணுளனது ஸ்ரீ பாத ஆட்சியில் வாழும் எனக்கு என்ன குறை யெனல்.

982. உண்ணெக் குருக வுளஞ்சிற் பரவெளியா
எண்ணற் கினியபே ரின்ப வியற்கைசேர்
வண்ணப் பிரான்சொருப வாழ்விற் களிக்குமென்னுல்
நண்ணற் குரிய நலம்பிறிதொன் றில்லையே.

ஆண்டவன் சொருபஅழகிற் செசுகி வாழும் எனக்கு இனி அடையத் தக்க நலன் வேறொன்று மில்லை யெனல்.

983. கணக்குமிலலை யாதோர் வழக்குமில்லை கல்லாப்
பிணக்கமாம் மோகவசப் பேய்ச்சரியை தீர
இணக்குற் றிதயத் தியல்பாக வென்னை
மணக்குற்ற வாண்டான் மலர்ச்செப் பதத்தே.

உள்ளத்தில் என்னை மணந்த ஆண்டவனிடம எனக்கு யாதொரு கணக்குமில்லை; வழக்குமில்லை யெனல்.

984. ஈனமுனைப் போய விதயத் தொடுங்கலால்
மோன வுணர்வான மோத மகம்பொங்க
ஞானப் பிரானெனக்கு நாதனு வாய்க்கப்பெற்
றேனுக் கெழுமையுமோ ரேமமன்றி யேதமின்றே.

குறிப்பு. பொங்க வாய்க்கப்பெற் றேனுக்கு என வியையும்; ஞானப்பிரான்—ஞான சொருபமான பிரான்

அகந்தை முனைப்பற்று ஆன்மாவில் ஒடுங்கவும மோனனந்தம் பொங் கவும் ஆண்டவன் எனக்கு நாதனுய்க் கிடைக்கப் பெற்றதால் என்றும் நிறைவே தவிர, குறையொன்று மில்லே னெனல்.

985. துன்று துரீய சொருபமே யென்னுருவா
மன்ற விளங்குறுதன் மாண் பதத்தே யூன்றுவித்த
வென்றனம் மானே டிரண்டறநன் கொன்றலுற்றேற்
கென்றும்பே ரின்பமன்றி யெந்நாளுந் துன்பமின்றே.

துரீய சொருபமே என்னுருவாக நிலேப்பித்த ஆண்டவனோடு இரண் டற்றுச் சேர்ந்த எனக்கு எந்நாளும் இன்பமே தவிர துன்பமில்லை யெனல்.

986. கண்ணு வொளிர்சொருபக் காட்சியாற் கனனிமடப்
பெண்ணுன பேதையேன் பேய்ச்சரியை பேரவுளத்
துண்ணு ரமுதமா வூறலுற்ற வாண்டவன்ரு
ளெண்ணுமை லெண்ணி யிருக்கின்றேற் கென்குறையே.

சொருபதரிசன மளித்து. என் அலேவை நீக்கி, அமுதமாக உள்ளூறு கின்ற ஆண்டவன் திருவடியை நினையாது நினைந்திருக்கும் எனக் கென்ன குறை யெனல்.

(வெண்பா)

987. என் ஞன்ம நாதனை நா னெய்தியபின் னென்னகத்து
டென்னுன் மருவவினி யாதுளது—தன்னுன்
மருவியவென் சாந்தி மனவியல்பே சுத்தப்
பரவியல்பாப் பண்ணிய தால்.

என் ஆன்மநாதனை உள்ளத்தி லடைந்த பிறகு இனியடைய ஒன்று மிலலே. அவனளித்த சாந்தியே என்னைப் பரமாக்கிய தெனல்.

## ௭௬—கிருத கிருத்தியத் திறன்

(கொச்சகக் கலிப்பா)

988. திண்மைசேர் மோகச் செருக்கற் றொழியவுளத்
துண்மைப் பிரானு முடையான்செய் சுத்தவருள்
வண்மையாற் கைவல்ய வாழவு மலர்ந்தேனுக்
கெண்ண விசைக்க வியற்றவென் னுள்ளதே.

மோகச் செருக்கொழிய உள்ளத்திலுற்ற ஆண்டவனருளாற் கைவல்ய வாழ்வு பெற்ற எனக்கு இனித் திரிகரணங்களால் இயற்ற எக் காரியமு மில்லே யெனல்.

(வெண்பா)

989. பயக்கனுவு மொட்டா மனேதீத மெய்ய
னுயிர்க்கணவ னுகவுளத் துள்ளான்—செயக்கடவ
தொன்றுநா னேமே னுடையானே டென்மனத்தை
யொன்றுவித்த பின்ன ருளத்து.

மனோதீத சத்தியப் பொருளான ஆண்டவன் என் உயிர்க்கணவனாக உள்ளத்தி லுள்ளான், அவனிடம் என் மனத்தை முற்றும் ஒப்படைத்ததால் இனி நான் செய்ய ஏதொன்று மில்லை யெனல்.

## ௯௪—கைமா றறியேன்

(கொச்சகக் கலிப்பா)

990. அன்புசிவ மாக வகங்கிளரப் பொங்கும்பே
ரின்பவாழ் வாக வினிது நிரம்பலுற்றான் ;
பொன்புரைசற் போதப் புராண சொரூபசிவ
நம்பன்மெய் யன்புக்கு நானென் கடவேனே.

என் உள்ளத்திற் பேரின்ப வாழ்வாக நிரம்பிய ஆண்டவனது மெய்யன்புக்குக் கைமா றிலே னெனல்.

991. மணக்கலுற் றுண்ட மணாளனோ டென்னே
பிணக்கமுற் றேன்மடப் பேதையேன் உள்ளத்
துணக்க விடாதே யுணர்த்திப் பதத்தில்
இணக்கமுற் றானன்புக் கென்கட வேனே.

மடப்பேதையேன் மணாளனோடு பிணங்கினே னெனினும் கேடுறாதவாறு அறிவுணர்த்தித் தன்பதத்திற் சேர்த்த ஆண்டவன் அன்புக்கு என் கடவே னெனல்.

## ௯௫—தோழிக் குரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

992. என்னருமைத் தோழிநின் னின்றுணையா லுள்ளத்து
மன்னியபே ரின்பவருள் வள்ளலைநான் காணலுற்றாங்
கென்னைநான் முற்ற விழந்தொழியப் பொங்கியது
தன்னயமார் சுத்தசிவ ஞானானு பூதியே.

தோழீ! உன் அரிய துணையால் உள்ளத்தில் ஆண்டவனை நான் கண்டு அவனிடம் என்னை முற்று மிழந்தேன். அதனால் சிவஞானனுபூதி பொங்கிய தெனல்.

993. நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானனு பூதியெனக்
கென்னியலே யாமா றெனைக்கொடுபோ யுள்ளத்திற்
றுன்னியசற் போத சொரூபன்மாட் டொன்றுவித்த
வின்னருளாந் தோழியைநா னெங்ஙன் புகழ்கேனே.

ஞானனுபூதி என் இயல்பே யாகுமாறு என்னை என் சொரூபப் பிரானிடம் சேர்த்த அருளாம் தோழியை எவ்வாறு புகழ்வே னெனல்.

994. சாதனையொன் றின்றியே சாட்சாற் கரிக்கவெனக்
கோர்தனையென் னுள்ளத் தொளிர்வித்தோன் செய்தவருட்
போதனையின் சால்புசிவ போதானு பூதியாய்
நாதனையென் றென்றுநா னன்கணையக் கூட்டியதே.

சாதனையொன்று மின்றியே ஆன்ம சாட்சாற் காரத்தை எனக்கருளிய ஆண்டவனின் உபதேசம் சொரூப சிவநாதனை நான் கூடி யணையச் செய்த தெனல்.

(வெண்பா)

995. உம்பருக் கும்பரா னை வருமையான்
எம்பிரா னகி யெளிமையால்—எம்பரமன்
ருந்தன் பெருந்தன்மை யான சொரூப(ம்)நா
னுர்ந்தன்பு செய்யவளித் தான்.

தலைவன் செய்த தலையளித்திறன் தலைவி தோழிக் குரைத்தல்.

## எசு — தலைவி நற்றாய்க் குரைத்தல்

(கொச்சகக் கலிப்பா)

996. அன்னேயன் னேயிவ் வடிச்சியைநன் காண்டு கொண்ட
வென்னேய னை விறைவன்சீர் நீயறியாய்
தன்னே ரிலான்சொருப சாட்சாற்கா ரத்தெளிவா
லென்னே ரிலாத வியற்பெருமாண் புற்றேனே.

அன்னையே, நீ என் தலைவன் பெருமை யறியாய்! சொரூபசாட்சாத் காரத் தெளிவால் நான் பெருஞ்சீர் படைத்தே னெனல்.

997. என்னே யிறைவனரு ளென்பா லிருந்தவா!
அன்னே நீ கேளாய் அமுத சொரூபமாந்
தன்னோ டொருவடிவாத் தானென்னை யாண்டு
கொண்டாங்
கென்னு ருயிரேயா வென்றுமொளிர் கின்றனே.

அன்னையே, என்னை அமுத சொரூபமாகத் தன்னோ டொன்றுக்கிய ஆண்டவன் என் உயிரோடு என்றும் விளங்கும் திருவரு ளென்னே யெனல்.

998. அன்னேயன் னேயோ ரதிசயஞா னனுபவத்
தென்னை யழுத்தியபே ரின்பவருட் பெம்மான்பா
லென்னை யிழந்தே யியற்சிற் பரவெளியாந்
தன்னிலே தானுத் தழைக்கவாழ் கின்றேனே.

அன்னையே, ஞானனுபவத்தில் என்னை யழுத்திய ஆண்டவனிடம் என்னை இழந்து பரவெளியில் தானே தானய் வாழ்கின்றே னெனல்.

999. அன்னே யடிச்சியைநன் காண்ட வருட்பிரான்
என்னேய முற்றத் தனக்கேயாக் கொள்ளை
கொண்டான்;
என்னையழித் தென்று மிருந்தொளிர்வ துள்ளுணர்வூ
டன்னியமன் றுக வணைந்தான் சொரூபமே.

அன்னையே, அருட்பிரான் என் அன்பைக் கொள்ளை யிட்டான்; என்னை யழித்து உள்ளுணர்வில் என்றென்று மிருப்பது என்னை யணைந்த அவனது சொரூபமே யெனல்.

1000. என்னோ டிதயத் திரண்டறவொன் றுற்றவிறை
தன்னோ டயிக்கியமெய்த் தன்மையுணர் வென்றுமருப்
பொன்னுன சுத்தவருட் பூரணவாழ் வுற்றதெனக்
கன்று யறிதியோ வார்வமெழப் பொங்கவே.

அன்னையே, என்னோடு இரண்டறக் கலந்த இறைவனின் ஐக்கியத் தன்மை யுணர்வான பூரண வாழ்வு பெற்றே னெனல்,

1001. தன்னே ரிலாத தனிப்பரமெய்த் தத்துவன்பால்
அன்னே யடிச்சியே னைக்கியவாழ் வார்தலுற்றேன் ;
பொன்னே யனையவருட் புண்ணியன்பா தாரவிந்தத்
தென்னாசை முற்ற வினிது நிரம்பியதே.

அன்னையே, என்னாண்டவனோடு ஐக்கிய வாழ்வு பெற்றேன். அவனடியில் என் ஆசை முழுதும் நிறைவேறிற்றெனல்

## எஎ—நற்றாய் வியப்பு

(கொச்சகக் கலிப்பா)

1002. அறிவு தெளிந்தமைந்த வான்றோர் மனத்திற்
பிறிவறவே நின்றபெரும் பெம்மானைப் பேதைச்
சிறுமி முதுக்குறைவி போலே தியானச்
செறிவி லகப்படுத்திச் சிக்கவைத் தாளே.

அறிவு தெளிந்த பெரியோ ருள்ளத்தில் விளங்கும் பெருமானைச் சிறுமி யாகிய என் மகள் பேரறிவு படைத்தவள் போலத் தியான பலத்தாற் கட்டிச் சிக்க வைத்து விட்டாளே யெனல்.

1003. பேரா யிரத்தாற் பெரியர் வழிபடுமந்
நாரா யணரமண நாத னருள்வலியால்
வீராவே சத்துறவு விஞ்சியென் பிஞ்சிளம்பெண்
ஆராய்ந் தடைந்தா ளமுத சொரூபமே.

என் பிஞ்சிளம் பெண் நாராயண ரமணநாதனருள் வலியால் வீராவேசத்துறவுற்று அவனது அமுத சொரூபத்தை ஆராய்ந்து அடைந்தா ளெனல்.

1004 காணக்கா ணத்தெவிட்டாக் கண்ணாளன் கட்டழகில்
வேணவாக் கொண்டாள்; வெளிவரத்தான் கூசுற்றாள்;
பேணித்தன் னுள்ளே பெருமிதத்தோ டாழ்ந்தாழ்ந்து
மாணக் களித்து மதர்க்கின்றா ளென்மகளே.

என் மகள் ஆண்டவன் கட்டழகிற் பேராசை கொண்டாள் வெளி வரப் பகிரங்கமாகப்படக் கூசி, தன்னுள்ளேயே ஆழ்ந்து பெருமிதத்தோடு அவனுடன் களிக்கின்றாளெனல்.

1005. பெண்ணணை மோகமடப் பிச்சியைத்தா னிச்சித்துக்
கண்ணாலம் பூண்டு கலந்தவோர் கண்ணாளன்
உண்ணாடுபாசனா யோகியர்க்கு மோர்வரியான்
விண்ணாள ராலும் வியக்கலுறும் பெம்மானே.

மடப்பிச்சியான என் மகளை விரும்பி மணந்த கண்ணாளன் யோகிகளுக்கும் தேவர்களுக்கும் அரிய பெருமானாகு மெனல்.

1006. காதற்பித் தேறிக் கடவுட் பிரான்பாலென்
பேதைச் சிறுமி பெருந்துயர்கூர்ந் தேங்கியவள்
போதப் புலந்தெளிந்து புந்தியிற்சந் தித்தடைந்தாள்
சூதற்ற ஞான சொரூபனருட் போகமே.

ஆண்டவனிடம் காதற்பித்தேறி வருந்தி ஏங்கிய என் சிறுமி, அறிவு தெளிந்து உள்ளத்தில் அவனைக் கண்டு அருட் போகம் பெற்றாளெனல்.

1007. செழுநுதலாள் முற்செய் சிவபாக் கியத்தாற்
கொழுநனா வாண்டவருட் கோமானைக் கூடிப்
பழுநியபே ரின்பம் படைத்தலாற் பாசப்
பழநினைவெல் லாம்போய்ப் பரவியல்புற் றாளே.

முற்றவத்தால் என் பெண் ஆண்டவனைக் கூடிப் பேரின்பந் துய்த்தலால், என் மேலிருந்த பழைய பாசமெல்லாம் போய், பரத்தின் இயல்பை யுற்றாளெனல்.

1008. சீருஞ் சிறப்புஞ் செழிக்க விளங்கலுற்ற
பேரின்ப மோனவருட் பெம்மான் சொரூபத்திற்
கூரன்பு பூண்ட குலக்கொழுந்தா மென்மடமான்
சீரங்கந் தெய்வச் சிவவொளிகாட் டுற்றதே.

பேரின்பப் பெம்மானது சொரூபத்தில் அன்புகூர்ந்த குலக்கொழுந்தாகிய என் மகளின் அங்கம் தெய்வச் சிவவொளியாற் பிரகாசிக்கின்றதெனல்

(குறள்)

1009. ஒருமை யுணர்வா லுடையானோ டொன்றிப்
பெருமையுற்றா ளென்பெண் மணி.

## எஅ—ஆண்டவன் முன்னிலையில் தலைவி தான் பெற்ற பேறுகூறல்

(கொச்சகக் கலிப்பா)

1010. தானு முளைத்தெழுந்த தற்பரமாஞ் சிற்பரவென்
மானுபி மான மயக்கவிருட் பாழகத்து
நானுக வுன்னை நயந்தேனே சுத்தவருள்
வானுக வென்னை வளைத்துக்கொண் டாண்டாயே.

மானுபிமான மிருந்ததால் நான் உன்னை நேசிக்காத காலத்தும் நீ தானுக வந்து அருளாகாயமாக என்னை வளைத்து ஆட்கொண்டாயே யெனல்.

1011. உன்னதுபே ரின்ப வொளிவெளிவாழ் வுன்னடிச்சிக்
குன்னருளா லுள்ளத் துதவியநல் லாண்டவா
என்னியல்யா னற்றே னியற்பரமாப் பொங்குறுமவ்
வன்னமோ னுனுபவ வைப்பான வுன்பதத்தே.

உன்பேரின்ப வாழ்வை இவ்வடிச்சிக்கு அருளிய ஆண்டவனே, பரமான்ம மோனுனுபவ நிதியான உன்பதத்தில் நான் என்னியல் பழிந்தே னெனல்.

1012. என்னுண்மை யாக விதயத்தில் யான்யானென்
றுன்னலற வுள்ளவுனை யுன்னருளாற் கண்டநான்
மன்னு சிவாம்புதியா மாட்சியே ருன்னையெனக்
கன்னியனன் ருகவறிந் தாரத் திளைத்தேனே.

உன்னருளால் உள்ளத்தில் 'நான் நான்' என்று ஸ்புரிக்கும் உன்னைக் கண்டு கொண்டேன். சிவக் கடலாகிய நீ எனக்கு அன்னியனல்ல என்றறிந்து உன்னை அனுபவித்தே னெனல்,

1013. ஆற்றப் பெரிய வருந்தலைவா நானுன்னைத்
தேற்றத் தெளிவான சிற்பரமோ னனுபவ
வூற்றுப் பெருக்கா வுளத்தே திளைத்தலால்
வேற்றுக் கலக்கமற்ற வித்தகவாழ் வுற்றதே.

என்னருந் தலைவா, நான் உன்னை சிற்பர மோனனுபவ வூற்றாக உள்ளத்தில் அனுபவிப்பதால் கலக்க மற்ற ஞான வாழ் வுற்றேனெனல்.

1014. இருப்புணர்வா வுள்ளத் தெனையணைந்த வுன்பால்
விருப்புநான் மேன்மேல் விளைதலுற்றேன் கண்டாய
மருட்கற் பனையிலே மாண்டொழியா தென்னை
யருட்சிற் பரமாக வாண்டவம் மானே.

மருளில் மாளாம லென்னை யருளில் ஆட்கொண்ட பெருமானே, என்னை இருப்புணர்வாக உள்ளத்தி லணைந்த நின்னிடம் மேன் மேலும் விருப்பம் விளைதலுற்றே னெனல்.

1015. பெண்ணான பேதைமடப் பிச்சியேன்பாலிரங்கிக்
கண்ணாள னாகக் கலத்தலுற்ற நின்னருளால்
உண்ணா ரமுதவுணர் வூற்றான வுன்னைநா
னெண்ணமை லெண்ணி ரமிக்கின்றே னெம்மானே.

என்பா லிரங்கிக் கண்ணாளனாகக் கலந்த என்தலைவனே, அமுத சொரூபனான உன்னை எண்ணமை லெண்ணி இரமிக்கின்றே னெனல்.

1016. உன்னிலே யென்னையுமற் றென்னிலே யுன்னையுமா
மன்னவே துன்னுவித்த மாட்சிசேர் காட்சியாற்
கன்னியா மென்னைக் கலந்தவருட் கண்மணி நின்
பொன்னடியில் வாழ்வுசிவ பூரணமாப் பொங்கியதே

என்னைக் கலந்த கண்மணீ, நீ உன்னில் என்னையும் என்னில் உன்னையும் காட்டித் தந்ததால், உன்திருவடியில் என்வாழ்வு சிவ பூரணமாய்ப் பொங்கிய-தெனல்.

1017. என்பரமல் லாதபே ரின்ப முளத்தூறத்
தன்பரமா வென்னைத் தலையளித்த வாண்டவா

அன்புணர்வா லுன்னையென் ஞகத் தணைந்தவெனக்
கன்புசிவ மான வனுபூதி வாய்த்ததே.

என்னுள் பேரின்ப ஊற்றெடுக்குமாறு ஆட்கொண்ட பெருமானே, உன்னை யன்புணர்வாக அணைந்த எனக்கு அன்பு சிவமான அனுபூதி வாய்த்த தெனல்.

1018. உண்ணு ரமுதவுணர் வூற்ருக வுட்கலந்த
கண்ணுளா சற்கதிநான் கண்டுகொண்டேன் சுத்த வருள்
விண்ணுக வென்னுள் விளங்கவே யுன்னருளாற்
கண்ணுல வாழ்வெனக்குக் கைவல்ய மாயிற்றே.

அமுதவூற்ருக என்னுட் கலந்த கண்ணுளா, உண்ணேடுநான் பெற்ற கண்ணுல வாழ்வே சற்கதியான கைவல்ய மென்று கண்டு கொண்டே னெனல்.

1019. தாயனையாய் தந்தை யனையாய் சதாசிவமெய்ந்
நாயகமா நண்ணி நயந்தெனை நன் காண்டுகொண் டாய்
ஆய சொரூபஞா ஞனுபவப் பேறுநின்ன
லேயடைந்தேற்கெங்குமினியெய்தமற்ருென்றில்லையே.

என்னையாட் கொண்ட சதாசிவ நாயகனே, நீ எனக்குத் தாயுந் தந்தையு மாவாய். உன்னுற் சொரூபானுபவப்பேறு பெற்ற எனக்கு இனி எங்கும் எதுவும் அடைதற் கில்லை யெனல்.

1020. என்னைநீ யாக விதயத் தணைதலுற்ருய்க்
குன்னைநா ஞக வுரம்படவே யொன்றலுற்றேன்
அன்னியமில் லாத வருள்வெளியாப் பொங்கியது
நன்னயமா ரந்தமெய்ஞ் ஞானுனு பூதியே.

என்னைநீயாக அணைதலும் உன்னை நானுக நன்கறிந்து ஒன்றினேன் அந்த ஞானனுபூதி அன்னியமற்ற அருள்வெளியாய்ப் பொங்கிய தெனல்.

1021. உள்ளே னுனின்மற் ருெருதெய்வம் புத்தமுதத்
தெள்ளாறு பாயவென்னுட் சிற்பரமாச் சேர்ந்தவருள்

வள்ளால் பரமார்த்த மாண்பா லெனேமணந்து
விள்ளா திதயத்தில் வீற்றிருக்க லுற்ருயே.

பரமார்த்த மாண்பால் என்னை மணந்து என்னுள்ளத்தில் அமுதம் பெருகச் சேர்ந்தருளிய ஆண்டவா, உன்னைத் தவிர பிறதெய்வம் நினையே னெனல்.

1022. யானு வெனதா வியல்பவெல்லா முன்மயமாத்
தானேவந் தென்னைத் தலையளிசெய் தாண்டாய்பால்
வானு வொளிர்சொருப வாழ்வு மடுக்கலுற்றேன் ;
யானே ரடிச்சியே னென்கடவேன் யானுனக்கே.

நீயே வலிந்துவந்து 'நான் எனது' என்பவற்றை யெல்லாம் 'நீ உன' தாய்க் கொண்டதால் சொருப வாழ்வு பெற்றேன் ; யான் உனக்கு என்ன கைமாறு செய்ய வல்லே னெனல்.

1023. ஊட லுணர்த்த லுவத்தலெல் லாமெனக்கு
நீடு சொருபமா நின்றநின் மாட் டன்றியில்லை ;
தேடலுந் தேடித் தெரிந்ததுஞ்சிற் சத்திவிளை
யாடலே யாக வவிர்ந்ததனு பூதியே.

எனக்கு ஊடல் உணர்த்தல், உவத்தல் யாவும் நீயே. உன்னை யான் தேடியதும் தெளிந்ததுமான சாதன சாத்திய மெல்லாம் சிற்சக்தி விளையாட்டே யெனல்.

## எகூ—வாழி

### (கொச்சகக் கலிப்பா)

1024. பார்வையா லென்னைப் பரிசழித்த வாண்டவனைக்
கூர்மைசேர் மோனக் குலாவாற் றிளைக்கின்றேன் ;
சீர்வளர்வாழ் வான சிவானுபவ சித்தியெனக்
கார்தலுற வென்னை யணைந்தபிரான் வாழியே.

கண்ணேக்கால் என்னை யாட்கொண்டு சிவானுபவ சித்தியளித் தணைந்த பெருமான் வாழி யெனல்.

1025. விண்ணேர்க்கும் மிக்கரிய மெய்யன் சொருபத்துக்
கண்ணுக்க லுற்றபே ராசையா லேங்காது

கண்ணேக்கா லுண்மைக் கடிமணம்பூண் டுனமடப்
பெண்ணுக்க மெய்தப் பெரிதளித்தான் வாழியே.

இம் மடப்பெண் சொரூப ஞானத்திற்காக மிகவும் ஏங்கி வருந்தாமல் கண்ணேக்காற் கடிமணம் பூண்டு ஆக்க மளித்த ஆண்டவன் வாழி எனல்.

1026. பொற்ப விளங்குசிவ பூரணமாஞ் சிற்பதமே
கற்பதற்கு வேறில்லாக் கைவல்யத் தற்பரங்காண் ;
அற்ப வடிச்சிக்கவ் வற்புதமோ ஞனுபவக்
கற்பியல்வாழ் வூட்டிக் கலந்தபிரான் வாழியே.

சிவபூரண ஞானநிலேயே யாவுங் கற்ற நிலேயான கைவல்யம் ;இவ் வடிச்சிக்கு அவ் வற்புத மோனுனுபவம் தந்து கலந்த ஆண்டவன் வாழி யெனல்.

குறள்

1027. அருள்வாரி யாக வனேந்தான் சொரூபப்
பொருள்வாழி யுள்ளப் புலத்து.

---

அகப்பொருள் விளக்கம் முற்றிற்று.

# பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்த |
|---|---|---|---|
| V | 22 | வியக்குகின்றது | விளக்குகின்ற |
| VII | 6 | யேராவலாகிய | பேராவலாகிய |
| VII | 29, 30 | என்பதை நிரூபிக்க ஸ்ரீ முருகனு | என்பதை ஸ்ரீ மு |
| ,, | 31 | ஊர்ஜீத | ஊர்ஜித |
| X | 9 | மிருந்து | மிகுந்து |
| ,, | 15 | ஆண்மா | ஆன்மா |
| XI | 15 | இது கானும் | இது காறும் |
| ,, | 20 | அருணிதியில் | அருணிதியில் |
| XIII | 5 | நாற்றெருகுப்பு | நூற்றெருகுப்பு |
| 8 | 6 | சொல்லவொனுப் | சொல்லவொ |
| 12 | 9 | விழைக்கின்ருரே | விழைக்கின்ருரே |
| 12 | 25 | கரூணை | கருணை |
| 20 | 18 | கல்க்கச் | கலக்கச் |
| 23 | 20 | ஓப்பு | ஒப்பு |
| 37 | 2 | ஜிவத் | ஜீவத் |
| 37 | 10 | 52 | 152 |
| 38 | 17 | தன்னருட | தன்னருட் |
| 43 | 27 | நடர்த்து | நடாத்து |
| 48 | 14 | ளன்னை | என்னை |
| 50 | 19 | எள்ளை | என்னை |
| 57 | 8 | பிரஞ்ஞானப் | பிரஞ்ஞானப் |
| 57 | 10 | வீளங்கி | விளங்கி |
| 84 | 1 | 8 | 84 |
| 86 | 6 | த்ன் | தன் |
| 88 | 13 | ஆண்டவள் | ஆண்டவன் |
| 116 | 10 | எண்ணை | என்னை |
| 116 | 11 | தன்யமாக | தன்மயமாக |
| 120 | 28 | அசுண்ட | அகண்ட |
| 123 | 8 | ஒத்கொழுகலால் | ஒத்தொழுகலால் |
| 134 | 8 | முந்றேன் | முற்றேன். |
| 142 | 24 | கிாந்தி | கிரந்தி |
| 143 | 5 | மேரனு | மோனு |
| 148 | 20 | 667 | 677 |
| 163 | 2 | நா ன | நானே |
| 178 | 17 | என்ஊ | என்னை |
| 192 | 21 | கிவமய | சிவமய |
| 218 | 2 | கனனிமடப் | கன்னிமடப் |
| 224 | 12 | உன்ஊ | உன்னை |
| 227 | 27 | கண்ஞேக்கால் | கண்ணேக்கால் |
| 228 | 15 | வனைந்தான் | வனைந்தான் |